மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
பதிப்புத் துறை





# திருக்குறள்

## உரைக்களஞ்சியம்

## அறத்துப்பால் - பாயிரவியல்



ச. தண்டபாணி தேசிகர்



# திருக்குறள்
# உரைக்களஞ்சியம்

(பாயிரவியல்)

மகாவித்துவான்
ச. தண்டபாணி தேசிகர்
விரிவுரையாளர், திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்



பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை—625021

பதிப்புத்துறை
© மதுரை காமராசர் பல்கலைக் கழகம்
மதுரை—625021

பதிப்பு எண் 50
திருக்குறள் ஆய்வக வெளியீட்டு எண் 11

*பதிப்பு விவரங்கள்*

| | | | |
|---|---|---|---|
| 1 | உரைக் களஞ்சிய ஆசிரியர் | : | மகாவித்துவான் *ச. தண்டபாணிதேசிகர்* (1905) (Mahavidwan S. Dandapani Desigar) |
| 2 | தலைப்பு | : | *திருக்குறள் உரைக்களஞ்சியம்* (பாயிரவியல்) (Tirukkural Variorum Edition) |
| 3 | பதிப்பு | | |
| | 1) இடம் | : | மதுரை காமராசர் பல்கலைக் கழகம் |
| | 2) பதிப்பித்தோர் | : | பதிப்புத்துறை மதுரை காமராசர் பல்கலைக் கழகம் மதுரை—625021 |
| | 3) ஆண்டு | : | முதற் பதிப்பு 1981 |
| 4 | மொத்த பக்கங்கள் | : | 270+8 |
| 5 | பொருள் | : | உரைக்களஞ்சியம் |
| 6 | விலை | : | ரூ. 20-00 |
| 7 | அச்சும் அமைப்பும் | : | அகரம், சிவகங்கை |

# முன்னுரை

திருக்குறள் உரைக்களஞ்சியம் என்ற பெயரால் பல தொகுதிகள் வெளிவரல் வேண்டும் என்பது மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் தமிழாராய்ச்சித் திட்டங்களுள் ஒன்று. உரைவளம் என்ற புதியதொரு தொகுப்பு முறையின் தோன்றலாகிய மகாவித்துவான் தண்டபாணி தேசிகர் அவர்களே உரைக் களஞ்சியத்துக்கும் ஆசிரியராகக் கிடைத்திருப்பது இளநீர் நெற்றானது போலாம். இப்பதிப்பு பாயிரவியல் பற்றிய உரைக் களஞ்சிய முதற்றொகுதியாகும். ஏனைய தொகுதிகளும் அச்சாகும் நிலையில் உள்ளன.

இவ்வுரைக்களஞ்சியத்தில் தொன்மையுரைகளோடு அண்மையுரைகளும் தொகுப்பிடம் பெற்றிருப்பது மனநிறைவாகும். அப்பாதுரையார், பாவாணர், இலக்குவனார், மு.வ., பாரதிதாசனார், இராமலிங்கனார், கோவிந்தசாமி என்றினையோர் உரைகள் வேண்டுமளவு தழுவப்பெற்றுள. கண்டதும் கேட்டதும் என்ற வகையில் சில நல்லுரைகளும் சேர்ந்துள. இதனால் எவ்வளவு முன்பு உரையிருப்பினும் திருக்குறள் தொட்டனைத் தூறிவரும் மணற்கேணியாகச் சுரப்பதைக் காண்கின்றோம். திருக்குறளுக்கு உரை செய்யும் மனவுணர்வு எக்காலத்தும் பெருகி வருவதையும் அதனால் திருக்குறள் காலநூலாகப் புதுமை பெறுவதையும் அறிகின்றோம்.

உரைக்களஞ்சியம் பல்வேறு உரைகளின் குவியல் என்று எண்ணிவிடல் வேண்டா. ஒவ்வோர் குறளுக்கும் கிடைத்திருக்கும் உரையெல்லாம் ஓரிடத்துக்கு வித்துக் காட்டு

வதோடு நில்லாது அவற்றை நிறுத்துப் பார்க்கும் ஆய்வுப் பெற்றியுடையது. 'பொறி வாயில் ஐந்தவித்தான்' என்ற குறட்கு ஐந்த வித்தனாய் என எச்சப்பொருள் கொள்ள வேண்டும் எனவும், 'மனத்துக்கண் மாசில னாதல்' என்ற குறட்கு வ.உ.சி. உரை சிறந்தது எனவும் மாசின்றிவாழும் இல்லறத் தாரும் நீத்தாராவர் என்ற திரு வி. க. விளக்கம் நுனித்து அறியத் தக்கது எனவும் வரும் இடங்கள் சிறந்த சீர் தூக்குகளாம்.

தொகுப்பும் குறிப்பும், ஒப்புமைப்பகுதி, மேற்கோட்பகுதி என்ற தலைப்பில் வருவன வளரும் ஆய்வுக்கு வழித்தடங்களாகும். ஆதிபகவன், மலர்மிசையேகினான், ஐந்தவித் தான், தனக்குவமையில்லாதான் என்றி னைய தொடர்களை ஒட்டி வரும் ஒப்புமைக் கோள்கள் இத்தொடர்களுக்கு எங்ஙன மெல்லாம் பொருள் விரிக்கலாம் என்ற உரைக் கிளர்ச்சியைப் பெருக்குகின்றன. பல்வேறு காலத் தமிழ் நூற்பரப்பெல்லாம் திருக்குறட் சொற்கொடைகளைக் காட்டுகின்றன.

இத்தகைய பூதவடிவமான உரைக்களஞ்சி யங்களின் பயன் உடையது விளம்பல் மாத் திரமன்று, உண்மையெனப்படும் உள்ளது காண்டலுமாம். உரைகள் பெருகுவது ஒரு பால் மகிழ்ச்சி தரினும் 'குறட்கு வள்ளுவர் வைத்த பொருள் யாது? என்று மயக்கமறத் தெளிகை முடிவான பயனாம்.

உண்மை நாடிகட்கு இப்பல்கலைக் கழக உரைக் களஞ்சியங்கள் அறிவாடிகளாய் விளங்குமென் நம்புகின்றேன்.

மதுரை
12—6—1981

வ. சுப. மாணிக்கம்,
துணைவேந்தர்

# முகவுரை

டாக்டர் தி. முருகரத்தனம்,
திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

1967இல் சென்னை மாநகரில் நடைபெற்ற இரண்டாவது உலகத்தமிழ் மாநாட்டினை ஒட்டித் தமிழகத்து மூன்று பல்கலைக் கழகங்களிலும் திருக்குறள் ஆய்வகங்கள் நிறுவப்பட்டன. திருக்குறளின் வாழ்வியற் கருத்துக்கள் பற்றிய ஆராய்ச்சி மதுரைப் பல்கலைக் கழகத்துக்கு வழங்கப்பட்டது. இவ்வாய்வகம் வள்ளுவர் வழங்கிய பொருள்வாழ்வுக் கருத்துக்கள், அரசியற் கருத்துக்கள், சமூகக் கருத்துக்கள், சமயக்கருத்துக்கள் என ஒன்றொன்றாக ஆய்ந்து நூல்கள் வெளியிட்டு வருகின்றது. வள்ளுவரின் வாழ்வியற் கருத்துக்களாக ஆராய்ந்து அறிய வேண்டிய கருத்துக்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன.

முப்பாலில் இல்லாதது இல்லை என்னும் கூற்றைப் போல முப்பால் பற்றிப் பேசாதாரும் எழுதாதாரும் இல்லை எனலாம். ஆதலால் முப்பாலாராய்ச்சிக் கருத்துக்கள் குவிந்து கிடக்கின்றன. ஆயினும் இம்முப்பாலை முறையாகவும் முற்றாகவும் இன்றை உலகச் சிந்தனை நோக்கில் ஆராய்ந்து காண்பதை எங்கள் பணியாகக் கொண்டுள்ளோம். இது புதுமணிகள் கண்டெடுத்துத் தமிழ்த்தாய்க்கு அணிவிப்பதாகும். இத்தகைய பணிக்கு உதவுமாறு இந்நாள் வரை முப்பால் பற்றி உரைக்கப் பட்ட கருத்துக்களை எல்லாம் தொகுத்துக் காண்பது இன்றியமையாதது. முப்பால்பற்றி ஓராயிரத்தைநூறாண்டுகளாக ஏராளமாக வளர்ந்த அந்தக் கருத்துக்கள் தாம் எத்தனை வகையானவை! எத்தனை கோணங்கள் கொண்டவை! நாம் அவற்றையெல்லாம் முழுமையாக உணர்ந்தோம் என்று கூறுவதற்கில்லை. மறைப்புண்டு கிடந்த பழமணிகளைப் புதுமெருகேற்றிப் பொலிவு பெறத் தமிழ்த்தாய்க்கு அணிவிப்பது போன்றது இப்பணி. இப்பணியில் எங்கள் முதல்முயற்சியே இலக்கண இலக்கிய தருக்க வேதாந்த போதகாசிரியர் கோ. வடிவேலுசெட்டியாரவர்கள் (1863-1936) எழுதிய குறிப்புரையுடன் கூடிய *திருக்குறட்பதிப்பு* வெளியிட்டதாகும். அதன் தொடர் முயற்சியே இப்போது *உரைக்களஞ்சியம்* வழங்குவது.

முப்பாலில் வள்ளுவர்வழங்கிய யாப்பினையும் அணியினையும் தொகுத்துக் கண்ட பணி ஒருபுறம் நடைபெற்றது. முப்பால் ஏடுகளில் கண்ட பாடங்களைத் தொகுத்துக் காண்பதும் அங்கு நடைபெற்றது. வள்ளுவர் பற்றியும் முப்பால் பற்றியும் வழங்கிய கதைகளும் தொகுக்கப் படுகின்றன. காவியம் கண்ட கவிஞரும் உரைகள் வகுத்த புலவோரும் வள்ளுவரைக் கண்டபாங்கு பிறிதொருபுறம் எடுத்துக்காட்டப்படுகிறது. வள்ளுவர் உள்ளத்தைக் காண முயன்றார் கருத்துக்களைப் பல்வண்ணக் கண்ணாடி (Kaleidoscope) வழிக்காணும் முயற்சி இவ்வுரைக்களஞ்சியம். முப்பால்பற்றி ஆராய்வோருக்கு இது உண்மையில் ஒரு கருத்துக் களஞ்சியமாக அமையும்.

1977ஆம் ஆண்டு மாண்புமிகு கல்வியமைச்சர் தலை

மையில் மூன்று பல்கலைக் கழகத்துத் திருக்குறள் ஆய்வக ஆசிரியன்மார் கூடிக் கலந்துரையாடியபோது இவ்வுரைக்களஞ்சியப் பணிக்குத் திட்டம் இடப்பட்டது. முதுபெரும்புலவர் ச. தண்டபாணிதேசிகர் தாம் முன்னர்க்கண்ட *வளத்தினை* இப்போது *களஞ்சியம்* ஆக்கித் தருகின்றனர். இவ்வுருவாக்கத்தில் எவ்வளவோ சிந்தனை சென்றது. அறிஞர் பலருடன் கலந்துரையாடல் நடைபெற்றது. நாங்கள் எத்தனையோ நாட்கள் கூடிப் பேசினோம். எத்தனையோ நூல்கள் ஆயப்பட்டன. மகாவித்துவான் அவர்களும் ஆராய்ச்சித்துணைவர் திருமதி சலசாகோபிநாத் அவர்களும் மூன்றாண்டுகள் உழைத்ததன் விளைவாக இக்களஞ்சியம் சமைக்கப்பட்டுள்ளது. அனைத்து உரை வேறுபாடுகளும் இக்களஞ்சியத்தில் இடம்பெறவேண்டும் என்பது அவா. விரும்பிய அளவு செய்யமுடியாமற் போனாலும் இயன்ற அளவு இயற்றப்பட்டுள்ளது. உரையாசிரியர்கள் உரைகளைப் போன்றே *தொகுப்பாசிரியர் குறிப்பும்* அருமைப்பாடுடையது. முதுபெரும்புலவரது முதறிவையும் புலமையின் பெருமையினையும் அங்குப் பரக்கக் காணலாம். ஆராய்ச்சிக்கு ஓர் அரிய அடைவுநூல் (Reference Book) இக்*களஞ்சியம்*. இத்தகைய அடைவுக் கருவிகள் கொண்டே செந்நாப்போதார் சென்ற நெறியைக் காண வேண்டும். இவ்வாறு காண்பதும் காட்டுவதும் எங்கள் திருக்குறள் ஆய்வகப்பணி. அப்பணியில் ஒரு காட்சி இது.

15-12-1980

**தி. முருகரத்தனம்**

# இதில் அடங்கியவை

# பாயிர இயல்

## முன்னுரை

திருக்குறள் தன்னேரில்லாத் தனிப்பெருநூல்; உலகமே போற்றும் ஒருநூல். அதற்குப் பொதுமறை, பொய்யாமொழி முதலாக ஒன்பது பெயர்கள் உள்ளன. ஆனாலும், திருக்குறள் என்ற பெயரையே தனக்குரிய சிறப்புப்பெயராகக் கொண்டிருக்கிற மரபுவழிப் பெருமையும் இதற்கு உண்டு.

சங்ககாலத் தமிழ்நூல்கள் யாவும், விரிந்து பரந்த அடி நிமிர்பாக்களாகிய ஆசிரியத்தானும், நேரிசை இன்னிசை பஃறொடை வெண்பாக்களானும், வஞ்சியும், கலியும், பரிபாடலும் முதலான பாக்களானும் இயற்றப்பெற்று விளங்க, மிகச் சுருங்கிய ஓரடி முக்காலாலேயே நூல் விளங்க இயலும் என்பதை எடுத்துக்காட்டும்நூல் இது.

'பலசொல்லக் காமுறுவர் மன்ற மாசற்ற
சில சொல்லல் தேற்றா தவர்' (649)

என்ற சொல்வன்மைக்கு இலக்கியமாக விளங்குநூல். இந்நூல் வேற்றுக் கலப்பில்லாத குறள் வெண்பா ஒன்றாலேயே ஆனது; ஆதலால், குடத்திற்கு முதற்காரணம் மண்ணும் செம்பும் ஆனாற்போல, உலகத்திற்கு முதற்காரணம் மாயை ஆனாற்போலக் குறள் வெண்பா இந்நூலுக்கு முதற்காரணமாக இருப்பதால், குறள் என வழங்கப்பெறுகிறது. நூற்பெயர்க் காரணங்களுள் ஒன்றாக முதற்காரணமும் சொல்லப் பெற்றிருத்தலைக் காண்க (நன். சிறப். நூற்பா 44). ஆதலால் இந்நூலுக்கு மிகமிகப்பொருத்தமான பெயர் பிறி

தொரு நூலுக்கும் இல்லாத பெயர் எதுவாக இருக்க இயலும். குறள் என்ற பெயரே பொருத்தமானது.

குறள் என்றால், வெண்பாவின் வகையுள் ஒன்றையும் குறிக்குமே;அதனானியன்ற நூலை மட்டும் வரைந்துணர்த்துவது யாங்ஙனம்? என்ற ஆய்வு எண்ணமும், நூலின் தகுதியும் மனத்திரையில் தோன்றிய போது 'திரு' என்ற அடைமொழி புணர்க்கப்பெற்றுத் 'திருக்குறள்' என வழங்கப்படுவதாயிற்று.

குறட்பாவொன்றானே இயன்ற நூல் ஒன்றும் முற்காலத்து இல்லையாயினும், பிற்காலத்து ஔவைகுறள், அட்டாங்க யோகக்குறள் சைவசமயநெறிக்குறள் முதலிய நூல்கள் எழுந்தன. ஒன்றாயினும் திரு என்ற அடைமொழி புணர்த்திச் சிறப்பிக்கப் பெற்றில. திருவருட்பயனோ எனின், திரு அருளுக்கு அடையாயிற்றே அன்றிப் பாவிற்கு இல்லை. சிவனெனும் நாமத்தைத் தனக்கேயுடைய செம்மேனி எம்மானைப் போற்றும் 'திருவாசகம்' போலத் திருக்குறள் என்னும் பெயரைத் தனக்கேயுரிய சிறப்புப் பெயராகப் பெற்றது இந்நூல். அதனால் இதன்கண் உள்ள திரு என்பது குறட்பாவும் அதனானியன்ற நூல்களுமாகிய இனங்களை விலக்க வந்த அடைமொழி மட்டும் அன்று. இந்நூலையே சிறப்பித்து உணர்த்தவந்த சிறப்படைமொழியும் ஆம்.

திரு

திரு என்பது தமிழிலக்கிய உலகில் பத்தொன்பது வகையான பொருள்களையுணர்த்தும் ஒரு சொல்லாகத்திகழ்கிறது. அங்ஙனமாயின் ஒரு சொல் பல பொருளைக் காட்டுதல் எங்ஙனம்? என்பதையும் ஆய்தல் மிகமிக இன்றியமையாததாகும். எந்தச்சொல்லும் வண்ணம் வடிவு அளவு சுவை தொழில் முதலானபண்புகளை உணர்த்தும்போது இடுகுறியாய், பின்னர் அப்பண்புகளையுடைய பொருளுக்கும், அப்பண்புகளால் விளையும் பெருமை-சிறுமை நன்மைதீமை, இன்பதுன்பம் முதலான பயன்களுக்கும் காரணக் குறியாய்ப் பெயராதலை, இலக்கணக் கண்ணாடியின் வாயிலாகப் பலபொருள் ஒரு சொல்லை நோக்குவார் யாவரும் அறிவர். இவற்றை நிகண்டுகளும் அகரமுதலிகளும் தொகுத்துக்காட்டும்.

அந்நிலையில் 'திரு' என்பது அழகையுணர்த்தும் சொல்லாய்,அழகை உடையவளையும் அழகு விளைதற்குக் காரண மான 'செல்வம்' 'தெய்வத்தன்மை' முதலியவற்றையும், அழகாலும் அதன் வழிப்பொருளாலும் விளையும் பெருமை

பொலிவு முதலியவற்றையும், இத்தனைக்கும் காரணமான நல்லூழையும் உணர்த்தும் பெயராகிறது. இத்தனையும் மங்கலப்பொருளாகவே விளங்குதலான், இச்சொல் செய்யுள் முதற்கண் வரும்போது மங்கல மொழியாகி விரும்புந்தன்மை, கவர்ச்சி முதலான பல பொருளையும் காட்டுவதாகின்றது.

இங்ஙனம் பல்வேறு வகையால் விரிந்து பரந்து கவர்ச்சியைத்தரும் திரு என்னும் சொற்கு வரைவிலக்கணம் தரும் திருக்கோவைக்கு உரை எழுதிய பேராசிரியர் ''கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்''என்றார். 'காண்போரால்' என்னாது கண்டாரால் என இறந்தகால வாய்பாட்டாற் கூறுவதால், பேராசிரியர் ஒருமுறை கண்டாரை மீளமீளக் காணத்தூண்டும் அழகே 'திரு' என்று கருதச்செய்கிறார்.அதிலும் தன்மை என்ற அளவில் அமையாது 'நோக்கு' என்பதால் ''மாத்திரை முதலா அடிநிறை காறும் கலந்து நிற்கும் அழகைத் தனித்தனியே சுவைக்காது ஒரு பிண்டமாகச் சுவைக்கச் செய்வதே திரு அல்லது அழகு என்று உணரச் செய்கிறார். மற்றும் வனப்பியல்பை வகுக்கும்போது வனப்பென்பது பெரும்பாலும் பலவுறுப்புந் திரண்டவழிப் பெறுவதோர் அழகு என்பர் (தொல்பொருள் 547).

அங்ஙனமே அத் 'திரு' என்பதைத் தனியடையாகப் பெற்ற திருக்குறளும் தங்கருத்துச் செறிவானும், ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கையோடும் ஒட்டி அவனை வளர்ப்பதானும்,ஓசைநயத்தானும் எந்நாட்டவரும்,எம்மொழியினரும் எச்சமயத்தினரும் 'அகர முதல' என்ற அடிமுதல் 'முயங்கப் பெறின்' என்ற முடிவுவரை பலகாலும் பயிலச்செய்யும் பண்பு மிக்கது என்றும் எண்ணச் செய்கிறது. அத்தகைய திருக்குறள் நூலுக்குக் காலங்காலமாக அறிவுப்பசிக்கும் ஆராய்ச்சி வேட்கைக்கும் பயன்படும்படித் தொகுத்து வைக்கப்பெற்ற உரைக்களஞ்சியம் இப்பதிப்பு.

### தோற்றமும் வளர்ச்சியும்

இதன் பழையபெயர் உரைவளம்; 1950-51ஆம் ஆண்டில் திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தின் வாயிலாக மூன்று பகுதிகளாக வெளிவந்தது. திருக்குறளைப் புலவர் வகுப்பிற்குப் பாடஞ்சொல்லி வரும்போதெல்லாம் செந்தமிழ்த் தொகுதியிலுள்ள நுண்பொருண்மாலை மிகமிகப்பயன்பட்டது. அது திங்களிதழில் இருப்பதினும் நிலைத்த தனிப்புத்தகமாக இருந்தால் நெடுங்காலம் பலருக்கும் பயன்படுமே என்ற எண்ணம் உண்டாயிற்று அதனைஎழுதிப்பார்க்கலாம் என்றமுயற்சி

அரும்பிய போது, பொன்னுச்சாமி நாட்டார், வ.உ.சிதம்பரம் பிள்ளை முதலானோர் அச்சிட்ட மணக்குடவர் உரைப் பிரதிகளும், சிதம்பரம் வாமதேவமுருகபட்டாரகர் வீட்டுப் பரிமேலழகர் மணக்குடவர் உரை ஏட்டுப்பிரதிகளும் கிடைத்தன. அவற்றை ஒப்பு நோக்கியபோது பிரித்தலும் புகுத்தலும் திருத்தலுமாகிய பல்வேறு வடிவங்கள் பதிப்புக்களில் தென்பட்டன. ஆதலால் நுண்பொருண் மாலைக்காகப் பரிமேலழகர் உரையையும், மணக்குடவர் உரையையும் இணைத்து எழுதிப் பார்க்கலாம் என்ற எண்ணம் தோன்றியது. இந்த முயற்சியைக் கேள்வியுற்ற முதுபெரும்புலவர், ஏடுகாத்த ஏந்தல் வே. ரா. தெய்வசிகாமணிக்கவுண்டர் அவர்கள் சிறிது சிதைந்த பரிதியார் காளிங்கர் உரை ஏடுகளைத் தந்துதவினர். இன்னாரது என்றறிய வாய்ப்பில்லாத பழைய உரைப்பிரதி ஒன்று இலக்கண விளக்க பரம்பரை சோமசுந்தர தேசிகரிடம் இருந்து கிடைத்தது. பின்னர் இலையமுதுகூடம் சைவ எல்லப்ப நாவலர் வீட்டுப் பரிமேலழகர் உரைப்பிரதியும், தருமபுர ஆதீனத்துப்புத்தகசாலைப் பரிமேலழகர் உரைப் பிரதியும் கிடைத்தன. இவையனைத்தையும் ஒருங்கிணைத்து எழுதிப்பார்த்தபோதுதான் பரிமேலழகர் மறுக்கும் உரைகளும், ஒப்பும் வேறுரைகளும் இன்னாருடையன என்று தெளியும் வாய்ப்புக்களும் கிடைத்தன. ஆதலால், உரைத் தொகுப்பு முயற்சி சற்று விரிவடைந்தது.

இத்தொகுப்பைக் கண்ணுற்ற சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளையவர்கள் இத்தொகுப்பில் வள்ளுவத்தை எடுத்து ஆளும் இலக்கியங்களையும் ஒருபகுதியாகச் சேர்க்கலாமே! என்றார்கள். அதன் பிறகு இலக்கியங்களில் தேடும் முயற்சி ஏழெட்டு ஆண்டுகள் காலங்கிடைத்தபோதெல்லாம் இயன்றது. இலக்கியஉரைநூல்களிலும், இலக்கணஉரைகளிலும் திருக்குறட்பாக்கள் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றமையால் சில பல புதிய உரைகளும் தோன்றலாயின. இவையனைத்தையும் தொகுத்து 'உரைவளம்' என்ற பெயரில், உரைப்பகுதி, உரைவிளக்கப்பகுதி, மேற்கோட்பகுதி—ஒப்புமைப்பகுதி என்ற நான்கு பிரிவுகளாகத் தரப்பெற்றன. இப்பணி சற்றேறக்குறைய ஒருவியாழவட்டம் (பன்னிரண்டாண்டுகட்குமேலாக) நடந்துவந்தது. அப்போது தான், தருமபுர ஆதீனம் கயிலைக்குருமணி ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பெரும் பொருட்செலவில் வெளிவரச் செய்தார்கள். இப்போது புதிய பல திருத்தங்களுடனும், மல்லர் உரை போன்ற சில

சேர்க்கைகளுடனும், பிற்கால உரைத்தொகுப்புக்களுடனும், ஆய்வுமுடி நிலைகளுடனும் உரைவளம் உரைக்களஞ்சியமாக வருகிறது.

*உரைக்களஞ்சியத்தில்*

மணக்குடவர், பரிதி, பரிப்பெருமாள், காளிங்கர், பரிமேலழகர் முதலிய ஐவர் கருத்துக் கருவூலங்களும், இன்னாரென்றறியப் பெறாத பழைய உரையாசிரியர் இருவர் உரைகளும் கவிராசபண்டிதர் உரையும், பரிமேலழகர் உரைக்குக் காரிரத்தின கவிராயரும், இராமானுச கவிராயரும் எழுதிய உரை விளக்கக்குறிப்பும், பிற்கால உரையாசிரியர்களில் நாகை சொ. தண்டபாணிப்பிள்ளை திரு.வி.க.முதல் சி. இலக்குவனார் வரை பொறுக்கி எடுக்கப்பெற்ற பதினாறுபேர் உரைகளின் கருத்து வேறுபாடு உரைவேறுபாடுகளின் தொகுப்பும், அவற்றைப் பற்றிய விளக்கமும், ஆய்ந்து கண்டமுடிவுகளும், மூலத்தினும் உரையினுமாகக் கிடைத்த பாடபேதங்களும், சங்ககால முதல் இலக்கியப் பூங்காவில் குறட்கருத்தோடு ஒத்தனவாகக் கிடைத்த ஒப்புமைப்பகுதிகளும், இலக்கண உரையாசிரியர்கள் எடுத்தாளும் இடங்களில் இலக்கணவகையாற் கிடைக்கும் கருத்துக்களைக் காட்டும் மேற்கோள் விளக்கமும், ஆங்காங்கு விளங்காத பகுதிகட்கும் அரிய சொற்களுக்கும் தருக்கநூல் தத்துவநூற் சொற்களுக்கும் எழுதிய அடிக்குறிப்பும் பிறவும் செறிந்துள்ளன.

அத்தகைய களஞ்சியத்தின் முதற்பகுதியாக, முப்பாலின் முதற்பாலாகிய அறத்துப்பாலின் முதற்பகுதியாகிய பாயிர இயல், முதன்மலராக வெளிவருகிறது. அடுத்த இல்லற இயலும், துறவறஇயலும் அச்சுப்பொறிக் காற்று வீச அலரும்பருவத்து அரும்பாக உள்ளன. ஏனைய பொருட்பால்காமத்துப் பாற்பகுதிகள் கொத்தரும்பாக அலரும் பொழுதுநோக்கி அரும்பியுள்ளன. அவற்றுள் பாயிர இயலின் முன்னுரையாகப் பாயிரத்தைப் பற்றிய சில ஆய்வுக்கருத்துக்களும் அமைதற்கு உரியன.

*பாயிரம்*

பாயிரம் என்ற சொல்லாட்சியின் தொடக்கம்

தொல்காப்பிய உரையாசிரியராகிய பேராசிரியர் மரபியலில் 'வடவேங்கடம் தென்குமரி' என்னும் சிறப்புப்பாயிரம் செய்தார் பனம்பாரனார் எனவும் 'வலம்புரிமுத்தின்' என்னும் பொதுப்பாயிரம் செய்தார் ஆத்திரையன் பேராசிரியனார் (தொல் பொருள் 653, பக்கம் 487, கழகப்பதிப்பு) எனவும்

குறிப்பிடுகிறார். இதனால் பாயிரம் என்ற சொல்வழக்கும், பாயிரப் பொருள் அமைப்பும் உரையாசிரியர்கள் காலத்திலேயேவழக்கில் உள்ளன என்று துணியலாம். உரையாசிரியர் இளம்பூரணர் காலம் கி. பி. 11ஆம் நூற்றாண்டு என்றும் பேராசிரியர் காலம் கி. பி. 12ஆம் நூற்றாண்டு என்றும் ஆய்வாளர்கள் துணிகின்றனர்.

பனம்பாரனார், ஆசிரியர் தொல்காப்பியனாரோடு அகத்திய முனிவரிடம் பயின்ற ஒருசாலை மாணாக்கர் என இளம்பூரணர் நச்சினார்க்கினியர் உரைக்குறிப்புக்கள் கூறுகின்றன. இதனையும் சிறிது உற்று நோக்கின் இப்பாடலைப் பனம்பாரனார், பாயிரம் என்ற பெயர்தந்தே ஓதினரா? உரையாசிரியர்கள் பெயர்சூட்டித் தம்உரைமுகப்பிற் பிணைத்தனரா என்ற ஐயம் எழுகிறது. ஆனால் நன்னூல் உரையாசிரியராகிய மயிலைநாதர் பொதுப்பாயிரச் சூத்திரங்களாகிய 'தன்னாசிரியன்' 'தோன்றாத்தோற்றி' (51,52) இரண்டையும் தம் உரையில் எடுத்துக்காட்டி 'இவை பனம்பாரம்' என்கிறார். இதனால் பனம்பாரம் என்ற இலக்கண நூலில் பொதுப்பாயிர இலக்கணமும் சிறப்புப்பாயிர இலக்கணமும் கூறும் நூற்பாக்கள் இருந்தமை புலனாகும், அதனால் பாயிரம் என்ற சொல்வழக்கும் அப்போதே இருந்தமை புலனாம்.

'ஒத்த சூத்திரம் உரைப்பின்'(தொல். பொருள் 653) என்னும் நூற்பா உரையிற் பேராசிரியர், ஒத்த சூத்திரம் என்றதனால் நூலின் வேறாகிய இருவகைப்பாயிரமும் சூத்திரத்தோடு ஒத்த இலக்கணத்தன என்பது கொள்க. மேலும், 'பொதுப் பாயிரமும் சிறப்புப் பாயிரமும் சூத்திரமும் தம்மின் வேறு' என்றும், 'அவற்றின் உரைகள் வேறு எழுதப்பெறும்' என்றும், 'சூத்திரவுரையிற் பாயிர உரை அடங்கி வருதலும் உண்டு' என்றும், 'பாயிர உரை வேறாயினும் அது ஏற்புடையது' என்றும், பாயிரம் இல்வழிச் சூத்திரமே நூன்முகமாம் என்றும், பாயிரம் செய்தார் இன்னார்என்றும் கோடலாயிற்று என்பர். இவ்வுரைப்பகுதி பாயிரம் இலக்கணம் கூறும் நூல்களுக்கே அன்றி இலக்கியங்களுக்கு ஏற்புடையதாகுமா? என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது.

"வணக்கம் அதிகாரம் என்றிரண்டுஞ் சொல்லச்
சிறப்பென்னும் பாயிரமாம்",

என அவிநயங் கூறுவதாக நேமிநாத உரை குறிக்கிறது. அவிநயனார்காலம் கி. பி. 9ஆம் நூற்றாண்டு.

தொல்காப்பியரோடு உடன்பயின்றாராகிய பனம்பாரனார் காலமுதல் கி.பி.12ஆம் நூற்றாண்டில் உரையாசிரியர் காலம் வரை இருவகைப் பாயிரங்களும் இலக்கண நூல்களுக்கே கோபுர வாயில்களாக இருந்தன என்பதை ஒருவாறு துணியலாம்.

*இலக்கியங்களுக்கு வந்தது எப்படி?*

பழமொழி நானூறு என்னும் இலக்கியத்தில் 'பாயிரங் கூறிப்படைதொக்கால் என்செய்ப' (246) என்ற ஆட்சி காணப் படுகிறது. இதன் பழையவுரை 'வீரத்திற்கு வேண்டும் முக வுரை' என்பது. பிற்கால உரை 'எங்கள் படைக்குத்துணையா வார்க்கு நாம் பின்னர் இது செய்வோம் எனக் கூறும் உறுதி மொழி' என்கிறது. இதனையடி ஒற்றி நன்னூல் சங்கரநமச் சிவாயருரை, பாயிரம்—வரலாறு என்கிறது. இவற்றால் வீரத்திற்குவேண்டும் முகவுரையும், வரலாறும் பாயிரமானாற் போல இலக்கியங்களும் நூல் என்ற பெயரைச் சார்தலின் அதன் முகவுரையும் பாயிரம் என அழைக்கப் பெற்றிருக்கக் கூடும் எனக் கருதஇடம் உண்டு.

*முதற்பாயிரம்*

முதற்பாயிரம் பனம்பாரனார் பாடிய பாயிரம். அது தொல்காப்பியரை அறிமுகப்படுத்துகிறது. செந்தமிழ் நாட்டு உலகியல் வழக்குகளையும் இலக்கியவழக்குகளையும் எண்ணி முறைப்படுத்தி ஆக்கப்பெற்றது. தொல்காப்பியம் என அதன் பெருமையைப்பேசுகிறது. ஆசிரியன், 'ஐந்திரம் நிறைந்தவன்' என அவனுடைய பிறமொழிப்புலமையையும், 'முந்து நூல் கண்டு' என அவனுடைய பரந்துபட்ட இலக்கிய இலக்கண ஆய்வே இந்நூல் எழுச்சிக்குக் காரணமாதலையும் காட்டு கிறது. இவைகளை எண்ணிப்பார்க்கிறபோது தொல்காப் பியப் பாயிரம் நிலந்தரு திருவிற் பாண்டியன் அவைக்களத்து அதங்கோட்டாசான் தலைமையில் நூலரங்கேறியபோது பனம்பாரனார் கூறிய பாராட்டுரையாகவே காட்சியளிக் கிறது. தமிழில் இன்று காணப்பெறும் பாட்டுந் தொகையு மான சங்கப் பாடல்கள் தனிமலர்களாக ஆங்காங்கு அவ்வப் போது மலர்ந்து, பின்மாலைகளாக மாறியவை. அவைகட்குப் பாயிரம் தேவையில்லையாயினும்பாரதம் பாடிய பெருந்தேவ னார் கடவுள் வாழ்த்தைப்பாடிச் சேர்த்து நிறைவு செய்திருக் கிறார். அவ்வாழ்த்துக்கள் நூற்கருத்தோடு இயைபுடையன வாகவோ நூல் இனிது முடியவேண்டும்; நின்று நிலவ வேண் டும் என்ற எதிர்நோக்கு உடையனவாகவோ இல்லை. கடவு

ளரின் இயல்புகளையும் பெருமைகளையும், வணங்குவதால் எய்தும் பயன்களையும் கூறிப் பொதுமையில் அமைகின்றன.

### பதிகம்

சங்கமருவிய காலத்தில் கதை தொடர் காப்பியங்கள் உருவானபோது வாழ்த்தும் வணக்கமும் வருபொருள் உரைத்தலும் அவையடக்கியலும் இணைந்த பதிகங்கள் தோன்றின. அப்போது தோன்றிய பாயிர இலக்கணந்தான் "பதிகக் கிளவி பல்வகைப்பொருளைத், தொகுதியாகச் சொல்லுதல்தானே" என்பது. இத்தகைய பதிகங்களுக்குச் சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற இலக்கியங்கள் பதிகத்தோற்றத்தின் காலங்காட்டும் எல்லைக் கற்களாகத் தோற்றம் அளிக்கின்றன.

### திருக்குறளும்—பாயிரமும்

இந்தக் காலச் சூழலில் வடமொழிக்காப்பிய மரபும் அணியிலக்கணங்களும் காப்பியப்போக்கும் நோக்கும் பரவின. இதற்கு முன்னே பாயிரமும் அதன் இலக்கணங்களும் ஓரளவு விரவி விளங்கிய காலத்தே எழுந்த சிந்தனைக் களஞ்சியம் திருக்குறள். அது திருவள்ளுவருடைய மனத்தடத்தில் செப்பமான சிந்தனைச்சேற்றில் உலகியலனுபவம் என்ற வளமான எருவில் அறிவுநீரின் அளவாக அவ்வப்போது எழுந்த மலர்களா? ஒருசேரத்தொடர்பாகத் தோன்றிய கொத்துக்களா? என்று கூடத் துணியக்கூடவில்லை.

உரையாசிரியர்களிற் பலர் பாடல்முறைவைப்பை மாற்றுகிறார்கள். சிலர் அதிகாரப்பெயரை—அதிகார முறைவைப்பை மாற்றுகிறார்கள். ஓரதிகாரத்திலுள்ள பாக்களை மற்றோரதிகாரத்திற்குரியனவேஎன்று வலியுறுத்துகிறார்கள். அங்ஙனமே இயற் பாகுபாட்டமைப்பிலும் அதிகார மாற்றம் காட்டப்பெறுகிறது. ஆதலால், பாலியல் அதிகாரக் குறட்பாக்களின் முறையும் வைப்பும் ஆசிரியரே அமைத்ததாக இருக்க இயலாது என்பதைத் துணியலாம். ஆகவே முதனான்கு அதிகாரங்களுக்கும் பாயிரஇயல் என்ற பெயர் வந்ததும் பின்வந்த பகுப்பு என்பதில் ஐயமில்லை.

### பாயிரம் நூலின் அகத்துறுப்பா? புறத்துறுப்பா?

மாடக்குச்சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும் மாதர்க்கு அணிகலன்களும் போலப் புறத்துறுப்பா? மாடக்கு மூன்றிலும் தெற்றியும் அடுக்களையும் அறையும் அத்தாணி மண்டபமும் போல அகத்துறுப்பா? என்பதைத் துணியக்கூடவில்லை.

ஆனால், பனம்பாரனார்காலத்துப் புறத்துறுப்பாகக் கருதப் பெற்றமையை 'நூலின் வேறாகிய இருவகைப்பாயிரமும்' என்ற பேராசிரியர் எழுத்து எடுத்துக்காட்டுகிறது.

சிலம்பு சிந்தாமணி முதலியவற்றில் பதிகம் என்ற பெயரோடு அக-அழகைப் புறத்தே காட்டும் உறுப்பாக அமைகிறது. ஆசிரியனே பாடியனயாவும் வாழ்த்து வருபொருள் உரைத்தலோடு அவையடக்கியலையும் தாங்கித் தற்சிறப்புப் பாயிரமாகிறது. சில நூற்பாயிரங்கள் நூன்மரபும் கூறிக்கொள்கின்றன.

பிறர்பாடியனயாவும் ஆக்கியோன் பெயர்முதலான எட்டு உறுப்புக்களையோ? காலம் காரணம்களன்களோடு பதினொரு உறுப்புக்களையோ கொண்டுசிறப்புப்பாயிரமாகின்றன. இவற்றுள் திருக்குறளின் முன்னான்கு அதிகாரங்கள் பாயிரமாயின் எப்பகுப்பில் அடங்கும் என்பதை அறியக்கூடவில்லையாயினும் உரையாசிரியர்கள் அடக்கப் பல்வேறு வகையில் முயற்சித்தார்கள். வெற்றி முழுமையாகக் கிட்டவில்லை என்பதை அவர்கள் கூற்றே அறிவிக்கிறது.

திருக்குறள் உரையாசிரியர்கள் காலத்திற்கு முன்புதோன்றிய வள்ளுவமாலையில் நத்தத்தனார் சிறுமேதாவியார், எறிச்சலூர் மலாடனார் பாடல்கள் பாயிர இயலை அறத்துப் பாற்பகுப்பாகப் பேசுகின்றன. இவற்றையும் சேர்த்தே ஆயிரத்துமுந்நூற்றுமுப்பது அருங்குறள் எனப்பாடற்றொகையும் தருகின்றன. தொடித்தலை விழுத்தண்டுன்றினார் அற நான்கு எனப்பாயிரஇயலையும் அக்த்துறுப்பாகவே அறிவிக்கிறார்.

முற்கால உரையாசிரியர்களில் மணக்குடவர் பாயிரஇயல் என்னாது, 'கடவுள்வாழ்த்து முதலிய நான்கதிகாரத்தான் பாரித்து' எனப் பொதுமையிற் கூறிப் போகின்றார். பரிப்பெருமாள் இல்லறம் துறவறம் என இயலை இருபகுதிப் படுத்துக் கூறப்பட்டது எனவும் அவற்றுள் கடவுள் வாழ்த்து, முதலிய நான்கும் ஓரோர் அதிகாரமாகக் கூறப்பட்டது எனவும் மணக்குடவரை ஒட்டி உரைக்கின்றார். இவர்கள் கருத்து பாயிரத்தைத் தனி இயலாகக் கருதாமையைத் தெரிவிக்கிறது.

பிற்கால உரையாசிரியர்களிற் கா. சு., 'பாயிரம் குறணூல் முழுமைக்கும் உரிய அகவுறுப்பு என்பர். கவிராச பண்டிதர் முதனான்கு அதிகாரங்களையும் இல்லற இயலின்

பாற்படுத்தி இல்லற இயல் துறவற இயல் என இரு இயல் களாகவே கூறுவர்.

பழையஉரை இரண்டின் ஆசிரியர் அறப்பாயிர இயல் இல்லறஇயல் துறவறஇயல் ஊழியல் எனப்பகுத்துப் பாயிரத்தை அறத்திற்கே உரிமையாக்குவர். கோ. வரதராச பிள்ளை பாயிர இயலுக்கு வாழ்த்தியல் எனப்பெயர் சூட்டுவர்; முதற்கண் கடவுள் வாழ்த்து இருத்தலாற்போலும். மு. ரா. அருணாசலக்கவிராயர் பரிமேலழகரை ஒட்டிப்பாற் பாகுபாடு செய்வர். குழந்தை முதலியற்பால் எனப் பெயர் தந்து, அறமுதலாய மூன்றற்கும் பொதுவாகலின் நூலின் முதற்கண் வைக்கப்பட்டது என்பர். திரு. வி. க. பாயிரம் முகம் போன்றது; அகத்தின் அழகை முகத்தான் அறியலாம்; என்பன போன்ற பல ஏதுக்கள் காட்டிப் பாயிரத்தின் இன்றி யமையாமையை வலியுறுத்துவர். அகத்துறுப்பாகவே கருது வர். மேலும் பாயிரத்தின் விழுப்பத்தைப் பெர்னாட்ஷா எழுதிய பல நூல்களின் பாயிரங்களைத் திரட்டி வெளிவந்த ஒரு நூலுக்கு முகவுரை தருகின்ற அவர், 'நூலின் பாயிரம் அறிஞர்க்கு என்றும், நூல் மற்றவர்க்கு' என்றும் குறித்திருப் பதை எடுத்துக்காட்டி விளக்குவர். பாவாணர் பாயிரஇயல் எனக் கூறாது பரிமேலழகரைப் போன்று பாயிரம் என்றே கூறிப் பாயிர இலக்கணங்களையும் வகைகளையும் விளக்கி, இது தந்நூற்பொருளைத் தாமே கூறிய தற்சிறப்புப் பாயிரம் என்பர். ஆயினும் பிறிதோரிடத்துப் 'பாயிரஇயல்' எனவும் ஆளுவர். பாயிரமும் ஊழும் நூன்முழுமைக்கும் பொதுவாம் எனவும் கூறுவர். இங்ஙனம் பாயிரம் அகத்துறுப்பா புறத் துறுப்பா என்பதிலும் திருக்குறட்பாயிரம் எத்தகையது என்ப திலும் கருத்து வேற்றுமை உள்ளதைக் காண்கிறோம்.

*பாயிரச் சொற்பிறப்பைப் பற்றிய கருத்துக்கள்*

பயிர்தல்-அழைத்தல்; பயிர்அம்-அழைப்பது; அது பாயிரம் ஆயிற்று என்பர் பாவாணர் (மரபுரை பக். 30). இவர் கருத்தின் வளர்ச்சி பழமொழி நானூறு தந்த பொருளின் விளைவு எனலாம், பயிரம் பாயிரமானதெப்படி? என்பதை யறியக் கூடாமையின் சிந்தனைக்குரியதாகின்றது. வட நூல் வல்லார் சிலர் புறவுரையை மனத்திற் கொண்டு பாஹிரம் பாயிரம் ஆயிற்று என்பர். பஹிரம் ஆமேயன்றிப் பாஹிரம் ஆவதற்கும் அது பாயிரம் ஆவதற்கும் வடமொழி யாக்கத்துள்ளும் விதியின்று. பாய் இரு அம் என்பன இணைந்து பரந்து இருப்பனவாகிய பொருள்களைத் தந்

துரைப்பது எனப் பொருள் கண்டு, 'அம்' வினைமுதற் பொருளில் வந்த விகுதி எனலாமா?என்று எண்ணத் தோன்று கிறது. சிலர் பாயிரம் இடுகுறியாய் வரலாறு என்னும் பொருளைத் தந்தது என்பார். எங்ஙனம் ஆயினும் பாயிரம் தமிழ்ச் சொல்லாதற்கு இழுக்கில்லை.

*வ.உ.சி. குறிப்புக்கள்*

வ. உ. சிதம்பரனார், தாம் உரையெழுதி வெளியிட்ட அறப்பால் முகவுரையிலும், நூல் அமைப்பிலும் திருவள்ளுவ மாலை, திருக்குறள் பரிமேலழகருரைப் பதிப்பாசிரியராகிய ஆறுமுக நாவலர்க்குத்தந்த பாயிரங்கள் இவற்றை நூற்சிறப் புப் பாயிரமாகவே முதற்கண் நிறுத்தி, கடவுள் வாழ்த்து வான்சிறப்பு நீத்தார்பெருமைகளை இடைப்பாயிரம் எனப் பிரித்தமைத்து, அறன்வலியுறுத்தலை அறப்பாலின் பாயிர மாகக் கொண்டுள்ளனர்.

மேலும். வ.உ.சி. 'உரைப்பாயிரத்துத் திருக்குறட்சுவடி களில் முதன் மூன்றதிகாரங்களும் திருவள்ளுவர் செய்தன அல்ல; அவை வள்ளுவர் காலத்திற்குப் பின்பும், காலத்தான் முற்பட்ட உரையாசிரியர்கள் காலத்திற்கு முன்பும், வாழ்ந்த புலவர் ஒருவரால் பாடிச்சேர்க்கப் பெற்றவை என நான் கருது கிறேன் என்பர்.

அம்முடிபிற்குரிய ஏதுக்களாக அவர் எழுதுவன

1 முதன் மூன்றதிகாரங்களிலுள்ள குறட்பாக்கள் பின்வரும் பாக்களைப் போலச் செறிவுடைய அல்ல.

2 இவைகளின் பொருள் பலதடைகளுக்கு இடங்கொடுக் கின்றன.

3 மெய்யுணர்வு-துறவு என்ற அதிகாரங்கள் நூலில் இருப் பதால் கடவுள்வாழ்த்தையும் நீத்தார் பெருமையையும் பாயிரத்துள்ளும் கூற வேண்டியதில்லை.

4 மெய்யுணர்வு - கடவுள் வாழ்த்துப் பகுதிகளிற் காணப் பெறும் கடவுள் இலக்கணங்களை ஒப்பிட்டுப் பார்த்தால் இரண்டதிகாரங்களையும் இயற்றியவர் ஒருவரல்லர் என் பது விளங்கும். அங்ஙனமே நீத்தார்பெருமையும் துற வின் பாக்களும்.

5 வான்சிறப்பாற் பயன் சிறிதும் இல்லை என்பன.

இந்த ஐந்து காரணங்களே முதன் மூன்றதிகாரங்களும் முதற் செருகல் என்ற கருத்தை அவருக்குத் தோன்றச் செய் தவை.முடிவு எழுதினாரே யன்றி இக்குறைகள் எங்குள்ளன

என்று எடுத்துக்காட்டி நிறுவினாரல்லர். அதனால் அவர்கள் மனநிலையிலிருந்து குறைக் காரணங்களைக் கண்டு ஆய்ந்து அமைதி காணவேண்டிய முயற்சி ஆய்வாளர் கடமைஆகிறது.

*முதற் குற்றம் செறிவின்மை*

''செறிவு எனப்படுவது நெகிழிசையின்மை'' என்ப ஆகலின் ஒரு நெறியில் செறிவின்மை ஒரு நெறிக்குச் செறிவாகிறது. செறிவினைக் குணஅலங்காரங்களுள் ஒன்றாகக்காட்டி ''ஒண்செறிவு எழுத்து ஓரினஞ்செறிதல்'' என்கிறது அணிநூல். இதன் கருத்து மூவின எழுத்துக்களுள் ஓரின எழுத்துக்களே பயின்றுவர அமைந்தது செறிவெனப்படும் என்பது. அது கௌட—பாஞ்சால—வைதருப்பநெறிகளாக மூவகைப்படும். குற்றமற எல்லா எழுத்துக்களும் கலந்த சொல்லான் நடைபெறுமாயின் அது சமநடையாகும் என்பது அணியிலக்கணம் கூறும் செய்யுட்செறிவு. இவ்விலக்கணப்படி திருக்குறட்பாயிரச் செய்யுள் ஏதாயினும் ஒன்றில் அடங்குமேயன்றிச் செறிவிலதாகாது. இச்சிந்தனையும் திருக்குறளுக்குக் காலத்தாற்பிற்பட்ட அணியிலக்கண அளவு கருவியைக் கொண்டு முந்திய குறள்நூலை அளந்து காட்டியதாம்.

மற்றொரு அணிநூல், சொற்செறிவு பொருட்செறிவு எனச் செறிவு இருவகைப்படும் எனவும், அவற்றுள் சொற்செறிவு செய்யுளோசை குன்றாது விளங்குவது எனவும், பொருட்செறிவு கவிஞன் கருதியமைத்த பொருளோடு குறிப்பும் உள்ளுறையுந்தோன்ற நிற்றல் எனவும் கூறும். இவ்வகையிலும் திருக்குறட்பாயிரம் பின்னடையவில்லை.

''செறிவெனப்படுவது கூறியது மறாமை'' என்கிறது கலித்தொகை. இவ்வகையிலும் முன்னொடுபின் முரணான மறுக்கத்தக்க கருத்துக்கள் பாயிரத்துள் இல்லை ஆகவே செறிவின்று என்பதும், செய்யுணடை வேறுபட்டுள்ளன என்பதும் பொருந்தாக் குறைகளாம்.

*இரண்டாவது குற்றம் தடைகட்கு இடமாதல்*

இதுவும் குற்றமெனக் கூறப்பட்டதே அன்றி, இடஞ்சுட்டியும் ஏதுக்காட்டியும் நிறுவப்படவில்லை. ஆயினும் இவர் கருத்து இவையாகலாம் எனச் சிலவற்றைச் சிந்தனைக்குக் கொணர்ந்து அவை தடையாகா என நிறுவ முயலலாம்.

(க) ஆதிபகவன் முதலாகக் கடவுளைப் பால்திணையுள் அடக்கிக் கூறுதல்

(உ) உருவும் பெயருமில்லாத மெய்ப்பொருளுக்கு அடி, தாள், பொறிகள் இருப்பனபோல வழங்குதல்

(ஙு) ஒரு குணமும் இல்லாதானை எண்குணத்தான் எனல்

(ச) எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் உள்பொருளை 'ஏகினான்' முதலாக வினையொடு படுத்திக் கூறுதல்

(ரு) பொறிகள் புலன்களைச் சென்று பற்றுவது போல வும், தம்மறிவான் அவித்ததுபோலவுங் கூறுதல். இவை முதலாகத் தடைகள் பல கூறக்கூடும். இவைகள் தடையாகாமையைக் காண்போம்

(க) உருவில்லாக் கடவுளை மக்கள் உள்ளக்கிழியின் உரு வெழுதிப்பார்க்கத் திணைபாலொடு சேர்த்துக் கூறியதன்றி உண்மையில் இறையியல்பை மீறியதாகாமையோடு அவனை ஆண் பெண் அலி எனக் கூறலாகாது ஆகலின் இதுவோர் தடையாகாது இத்தடையும் கற்றாரு மற்றாரும் ஆகிய ஆண்மாக்கள் உளங்கொள்ளக்கற்பித்தனவேயன்றி உறுப்புக் கள் உரைத்தனவாகா.

(உ) அன்றியும் அடி அல்லது தாள் கூறினாரே யன்றி, முக முதலிய உறுப்புக்களை உரைத்தார் அல்லர். முகமுதலிய னவே உருவவேறுபாட்டையும் உள்ளத்தியல்பையும் காட்டு வன. அவற்றைக் கூறாது தாளொன்றையே கூறியது தாள் என்பது திருவடியை உணர்த்தாது அவனருட்குப் பெயராய் அதனை உணர்த்தும் குறிப்புச்சொல். ஆதலால் 'அடிசேர்ந் தார்க்கு' எனின் அருளைப் பொருந்தி அதனையே எண்ணி இருப்பவர்களுக்கு என்பதே கருத்து; எனக் கொள்ளின் இது வும் தடையாகாது. ‘‘அரன்தன் கரசரணாதி சாங்கம் தரு மருள்; உபாங்கமெல்லாந்தான் அருள்'' என்னும் சித்தித் திருவிருத்தமும் இக்கருத்தை யரண்செய்யும்.

*அடிதொழுதல்*

பதுமபீடிகைக்காட்சியும் சைனமரபாதலின் அதனையுட் கொண்டு கூறியதாம் எனின், கேவலஞானியாய் சிவகதி சார்ந்தார் எல்லாவுறுப்புக்களோடும் கூடிய மக்களாய் முதிர்ந்த ஞானம் பெற்றுச் சிவகதி சார்ந்த சித்தர் பரமேட்டி களையே உணர்த்துமாதலின், வானுறை தெய்வத்துள் வைக்கப்பெற்றவர்களாதலின் இக்கருத்து ஓர்ந்துணர வல்ல

உண்மைப்பொருளை உணர்த்தியதாகாது. ஆதலால் அடி யென்றது குறிப்புமொழியாகத் திருவருளையே கருதுவதாம்.

### (௩) *எண்குணத்தான் என்றது*

குணம் மாயையின் காரியமாய் அமைதியை யளிப்பதும், முயற்சியைத் தூண்டுவதும் மோகமூடத்தை யளிப்பதும் ஆகி, முறையே சாத்துவிகம் இராசதம் தாமதம் என மூன்றாயும், ஞானத்தின் காரியமாய்த் தன்வயத்தனாதல் முதலாக எட்டாயும் இருத்தலான், மாயாகாரியகுணமும், ஞானகாரிய குணமுமாக இருவகைப்படும். ஆதலால் மாயாகாரியமான சாத்துவிதமுதலான முக்குணங்களையும் கடந்தவன் என்பதே குணமிலான் என்பதன் கருத்தன்றி, ஞானகாரியமான தன் வயத்தனாதல் முதலான எட்டுக்குணங்களும் இல்லாதவன் என்பது கருத்தன்று. குணமேயில்லை எனின் குணிப்பொரு ளும் இல்லையாம். அஃதில்லையாயின் கடவுள் இல்லை யென்ற கொள்கையாய்முடியும். கடவுள் இல்லை என்பது கடவுள் வாழ்த்தின் குறிக்கோளாகாது. ஆகவே உருவ மில்லாத உணர்வே வடிவான கடவுளை ஞானகுணம் உடை யவன் என்றுஅறிவித்த செயலேயன்றி இதுஓர் தடையாகாது.

### (௪) *நீக்கமற நிற்கும் இறைவனை 'ஏகினான்' எனப் புடை பெயர்ச்சியுடையான் போலக் கூறுதல்*

உயிர்கள் இருளில்அழுந்தி உலகப்பற்றில் மயங்கிய நிலை யிலிருந்து தெளிந்து இறைவனை அறிவாற் காண்கின்றன. அப்போது இறைவன் அவர்கள்அறிவின்கட் புலப்படுகிறான். அதனை அணிபடக் கூறியதேயன்றிப் புடைபெயர்ச்சியும் மீள அடைதலும் இறைவற்கு இன்றாம். அவன் "போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியன்'' என்க.

(௫) இறுதியான "பொறிவாயிலைந்தவித்தான்" என்ற தடை முன்னரே விலக்கப் பெற்றது. இங்ஙனமே ஏனைய இரண்டு அதிகாரத்திலும் வ. உ. சி. என்ன கருதக்கூடும் என்பதை அவர்எழுத்தோட்டத்திலிருந்து எடுத்துக்காட்டி அமைதிகாண லாம் ஆயினும், விரிவஞ்சி விடுப்போம்.

### *மூன்று நான்காவது குற்றம் நூலுள் துறவும் மெய் யுணர்வுங் கூறப்படுதலின் ஈண்டுக் கடவுள் வாழ்த் தும் நீத்தார் பெருமையும் வேண்டாம் எனல்*

இஃதொரு குறையாகாது, கடவுள் வாழ்த்தும் மெய்யுணர் வும் ஒத்த கருத்தின அல்ல. ஒரே அதிகாரிக்கு அறிவிக்கப்

பெற்றனவும் அல்ல.; கடவுள்வாழ்த்தும் நீத்தார்பெருமையும் இருவகைப்பற்றையும் விடாத உலகமக்களுக்கு ஓர் ஒழுக்க மாக உரைக்கப்பெற்றவை. பற்றற்ற மெய்ஞ்ஞானியர்க்கு உரைக்கப்பெற்றவை துறவும் மெய்யுணர்வும். மெய்யுணர்வில் கூறப்படுவன யாவும் இறைவனுடைய சிறப்பியல்பு. கடவுள் வாழ்த்திற் கூறப்படுவனயாவும் இறைவனுடைய பொது வியல்பு. சுருங்க எண்ணின், மெய்யுணர்வு உண்மைஞானத் தின் வாயிலாக இறையை உணர்ந்து அனுபவித்தலை யறிவிப்பது. கடவுள்வாழ்த்து கடவுளை யளவைகளான் அறிந்து வழிபடுதலையும், வழிபட்டார் எய்தும் பயனையும் அறிவிப்பது. கிரியை எனமருவும் யாவையும் ஞானங் கிடைத்தற்கு வாயிலாதலால் வாழ்த்தும் வணக்கமும் நினைத் தலுமாகிய செயல்கள் மனமொழி மெய்களுக்குப் பயிற்சி யளிப்பன. அங்ஙனம் உள்ளத்தால் உள்ளப்படும் பொருளை உள்ளவாறுணர்தலே மெய்யுணர்வு. குழந்தை பயிலும் காட்சிப்பாடமும் (பொம்மைப்புத்தகமும்) பேரறிஞன் பயிலும் கருத்துப்பாடமும் ஒன்றானால் கடவுள் வாழ்த்தின் போக்கும் மெய்யுணர்வின் இருப்பும் ஒன்றாகும் எனலாம்.

நீத்தார் பெருமை துறவைப்பற்றிச் சொல்லவில்லை. துறந்தார் பெருமையைக் கூறி அவர்கள்கூறும் மந்திரமொழி யில் நம்பிக்கையூட்டுகிறது துறவு பற்றற்றுப், புலனடக்கி, உடம்பும் மிகை எனவெறுத்து, இறையடியையே பற்றிநிற்ப தாகிய துறவின் உபாயங்களையும், இலக்கணங்களையும் சொல்லுகிறது. துறவு அதனிலக்கணம் பேசுகிறது; நீத்தார் பெருமை துறவிகளின் பெருமையை வலியுறுத்தி உலக மக்கள் அவர்களாற் பயன்பெறுக என விதிக்கிறது. இவை எங்ஙனம் ஒன்றால் ஒன்று உணர்த்தப்பெற்றனவாகும்?

### *ஐந்தாவது குற்றம் வான்சிறப்பாற் பயன் ஒன்றும் இல்லையா?*

மழை 'சிறப்பிற்றணிப்பாரும் வறப்பிற்றருவாரும் இல்லை' தான். அதன்சிறப்புக் கூறியதுஅது தணியவேண்டும்; மிதமாக வேண்டிய இடத்து வேண்டிய அளவு பெய்ய வேண் டும்;என்ற நோக்காலோ வறண்டகாலத்துப் பெய்யவேண்டும் என்ற நோக்காலோ அன்று. மக்களுக்கும் மற்ற உயிர்கட் கும் இன்றியமையாத தேவை உணவும் நீரும். உணவெனப் படுவது நிலத்தொடு நீர்தாம். நிலம் தொடுப்பின் ஆயிரமாக விளைந்துபயன் அளிக்கிறது. நீர் நிலத்தின் வளத்தைக் கரைத்துப் பயிருக்கு ஊட்டி விளையச் செய்கிறது. தானும்

உணவாகிறது. பொருளியல்துறையில் 'இயற்கைவளத்தைப் பெருக்கும் உழவே அடிப்படைத்தொழில்—அதனாலேயே நாட்டின் பொருளாதாரம் பெருகவேண்டும் மழையில்லை; உழவில்லை. உழவில்லை உணவில்லை. கால்நடைகள் நாட்டின் பொருள். அவைகளுக்கும் உணவில்லை. இங்ஙனம் எல்லாவழிகளாலும் வான் பயன்படுதலானும் அவ்வான் பயனை இறையருளாலன்றிப் பெறமுடியாமையானும் குறட்பாயிரம் இரண்டாம் இடங்கொடுத்தது' என்றுபேசப்படுகிறது. வானின்சிறப்பை உணர்ந்தே வள்ளுவர், தம்நூலின் 'வானோக்கி வாழும் உயிரெல்லாம்' (542) 'கைம்மாறு வேண்டா மாரி' (211) 'சீருடைச்செல்வர் சிறுதுளி மாரி வறங் கூர்ந்தனைய துடைத்து' (1010) என்பனவாகப் பல இடங்களில் சுட்டிக்காட்டுகிறார். ''மழையின்றி மாநிலத்தார்க் கில்லை'' என்ற விளம்பிநாகனார் பாட்டும் வானின் இன்றியமையாமையைக் காட்டுகிறது. வானின் இன்றியமையாமை யுணர்த்தி அது வணங்கத்தக்கவைகளுள் ஒன்று என்று உய்த்துணரவைத்த வள்ளுவர்வழியைப் பின்பற்றிய சிலம்பு, 'மாமழை போற்றுதும்' என மழை வாழ்த்துக்கூறியது. இங்ஙனம் பொருள் நிலைக்கு அடியாய், மூலத்தொழிலுக்கு இன்றியமையாததாய், விளங்கும் வான்சிறப்பு எங்ஙனம் பயனற்றதாகும். இங்ஙனம் ஒன்றோடொன்று தொடர்புடைய மூன்றதிகாரங்களும் வள்ளுவர் செய்தனவே என்பதில் ஐயம் இல்லை. பாவாணரும் இக்கருத்தை மிக்க உறுதியுடன் அரண்செய்கிறார் (மரபுரை: முன்னுரை பக் 30).

### *பாயிரம் முதன் மூன்றதிகாரங்களா? நான்கதிகாரங்களா?*

வ.உ.சி. முதன்மூன்றதிகாரங்களை மட்டும் இடைப்பாயிரம்எனக்கூறி அறன்வலியுறுத்தலை அறத்துப்பாலின் முதலதிகாரமாக்கி வள்ளுவர் வாய்ச்சொல்லாகவே சேர்த்தனர். பாயிரம் நான்கில் ஒன்றை மட்டும் இணைத்தால் பாடல்தொகை ஆயிரத்து முந்நூற்றுமுப்பது என்ற மரபு சிதையும். ஆதலால் இக்கருத்தும் ஆய்வுப்பட்டடையில் அமைக்க வேண்டிய தொன்று.

### *கடவுள் வாழ்த்தைப்பற்றி ஒரு கருத்து*

வள்ளுவன் நூல் இனிது முடிதல் வேண்டிக் கடவுள் வாழ்த்துக் கூறினார். அதிலும் சத்துவமுதலான குணங்களான் மூன்றாய கடவுளர்க்கும், அவற்றான் மூன்றாய உறுதிப் பொருள்களுக்கும் ஓரியைபு உண்டாகலான் அம்மூவரையும்

வாழ்த்துதல் முறையாகலின் இது ஏற்புடைக் கடவுள்வாழ்த்து என்பர் பரிமேலழகர். இக்கருத்து இவ்வதிகாரத்து எங்கேனும் குறிப்பாயேனும் உணர்த்தப்பெறுகின்றதா? இல்லை. ஆகவே இக்கடவுள் வாழ்த்து வள்ளுவரால் ஒருபயனோக்கி வாழ்த்தப் பெற்றதன்று.

## ஆனால் எதற்கு?

வள்ளுவர் தனிமனிதனுக்குரிய ஒழுக்கங்களையும், அவன் சமுதாய உறுப்பினனான நிலையில் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்களையும், சமுதாய வளர்ச்சிக்குரிய அரசன் அமைச்சன் குடிமகன் முதலானோர்க்குரிய அறங்களையும் மணவறங் களையும் உணர்த்த வந்தவர்; இத்தனைஅறங்களும் நிலைக்க வேண்டுமானால் கடவுள் உணர்ச்சி இன்றியமையாதது என்று தேர்ந்தவர்; கடவுளை வாழ்த்துதலும் ஓர் அறமாம் என்று கருதியே கூறுகிறார்.

ஒரு சிறிய சிந்தனை. நம் அரசு இருக்கிறது. சட்டங்களை வகுக்கிறது; அவ்வப்போது தேவையான மாற்றங்களை செய்துவருகிறது. இங்ஙனம் சட்டங்களை வகுத்தால் மட்டும் போதாது. மக்கள் எவ்வளவு மதித்துப்போற்றி நடக்கிறார் கள் என்பதைக் கண்காணிக்க அலுவலர்களை அமைக்க வேண்டும். அதுபோல அறச்சிந்தனையாளராகிய வள்ளுவர் முதலறம் கடவுளை வாழ்த்து நல். அதனையடுத்ததே ஏனைய அறங்கள் என்கிறார். திருவள்ளுவத்தைச் சுருக்கி யாக்கிய குமரகுருபரரும் இக்கருத்தை உளங்கொண்டே ''வஞ்சித்து' என்னும் பாடலில் ''வஞ்சனை, எங்கும் உளனொருவன் காணுங்கொல் என்று அஞ்சி அங்கங்குலைவது அறிவு'' என் கிறார். ஆதலால் கடவுளுணர்வு இருந்தாற்றான், அறங்கள் யாவும் நின்று நிலவும் என்பதற்காகவே கடவுள் வாழ்த்தை யும் முதலறமாகக் கருதுகிறார் ஆகவே அறத்துப்பால் கடவுள் வாழ்த்திலிருந்தே ஒவ்வோரறமாக இயங்குகிறது. ஆனால் முதனான்கு அதிகாரங்களையும் பாயிரம் என்றது நூல் முழுமைக்கும் பொதுவாக இருப்பதனால் எனலாம்.

இங்ஙனம், பேராசிரியர்களும் திருக்குறட் கருத்தரங்கிற் கலந்திருந்த அறிஞர் பெருமக்களும் தந்த முறைகளின்படி உரைக்களஞ்சியம் வெளிவர வேண்டும் என்ற பெரு நோக் கால் என்னை இப்பணியிலீடுபடுத்திய முன்னாள் துணை வேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு, எம். ஏ., அவர்கட் கும், அடுத்துத்துணை வேந்தராக இருந்த டாக்டர் வா. செ. குழந்தைசாமி அவர்கட்கும், இப்பதிப்பு இனிது முடியப் பல்

வேறுவகைகளில் குறிப்புகளையுதவியும் ஊக்கந்தந்தும் வருகின்ற இந்நாள் துணைவேந்தர் டாக்டர் வ. சுப. மாணிக்கனார் அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றி.

மதுரை காமராசர் பல்கலைக் கழகத்துத் திருக்குறளாய்வகம் சீரியமுறையில் சிறந்தபதிப்புகளையும் செயற்படுத்த வேண்டும் என்ற விருப்பால் திருக்குறள் உரைக்களஞ்சியத்தை முதலில் வெளியிடப்பணித்த முன்னாள்தமிழ்த்துறைத்தலைவர் பேராசிரியர் டாக்டர் முத்துச்சண்முகனார் அவர்கட்கும், இப்போது என்னை ஊக்கப்படுத்தும் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் தமிழண்ணல் அவர்களுக்கும், ஆய்வகத் துணைப்பேராசிரியர் டாக்டர் தி. முருகரத்தினம் அவர்கட்கும் என் நன்றி.

1950—51ஆண்டில் வெளிவந்த உரைவளத்தை மீண்டும் வெளியிடவேண்டும் என்று வற்புறுத்திவந்த பல்வேறு தமிழ்க் கழகங்கள், தமிழறிஞர்கள், நூலகத்தலைவர்கள் இவர்களின் விருப்பம் இங்ஙனம் பல்கலைக்கழக வாயிலாகப் பயன்பெற அருள்வழங்கிய தமிழறியும் பெருமான் அருள்மிகு அங்கயற்கண்ணியுடனாய ஆலவாய்ச்சொக்கலிங்கப்பெருமான் திருவடிகளைச் சிந்தித்தும் வந்தித்தும் போற்றுகின்றேன்.

இப்பணி இனிது நிறைவுற அயராத அன்போடு படிஎடுத்தும், மெய்ப்படிகளை ஒப்புநோக்கியும் பங்குகொண்ட ஆய்வுத் துணையர் திருமதி சலசாகோபிநாத்தும் அச்சகத்துமெய்ப்படி ஒப்பாய்வாளர் புலவர் அவர்களும் மேன்மேலும் அறிவியலிலும் உலகியலிலும் வளரச் செந்தமிழன்னை திருவருள் புரிக.

இந்நூலைக் கண்கவர் வனப்பினதாக அச்சிட்டுதவிய அகரம் அச்சகத்தார் தமிழ்நலம்தெரியும் அன்பர்கள் ஆதலின், இப்பதிப்பு விரைவாகவும் திருத்தமாகவும் வெளிவந்தது. ஆதலால், அவர்களும் அச்சகமும் தமிழ்ப்பணியின் சிறந்து என்றும் விளங்குக.

தமிழ்கூறும் நல்லுலகம் இப்பணியில் ஆங்காங்குத் தோன்றும் குறை நிறைகளை அறிவிப்பின் அது வளர்ச்சிக்கு வாய்ப்பாகும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

திருக்குறள் ஆய்வகம் **ச. தண்டபாணி தேசிகர்**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை—625021
11—12—80

# சுருக்க விளக்கம்

1. ஆசிரியர்கள்

| | | |
|---|---|---|
| அர.சண். | — | அரசஞ்சண்முகனார் |
| இராம. | — | நாமக்கல்இராமலிங்கம்பிள்ளை |
| இராமா. | — | இராமாநுசகவிராயர் |
| இளம். | — | இளம்பூரணர் |
| உ.வே.சா. | — | உ. வே. சாமிநாதஐயர் |
| கவிராசர் | — | கவிராசபண்டிதர் |
| கா.அ. | — | கா. அப்பாத்துரையார் |
| கா.சு. | — | கா. சுப்பிரமணியபிள்ளை |
| காரி. | — | காரிரத்னகவிராயர் |
| காளி. | — | காளிங்கர் |
| கோ.வ. | — | கோ. வடிவேலுச்செட்டியார் |
| சங்கர. | — | சங்கரநமச்சிவாயர் |
| சி.இ. | — | சி. இலக்குவனார் |
| சிவ.ஞான. | — | சிவஞானசுவாமிகள் |
| சுகாத். | — | சுகாத்தியர் |
| சுப்பிரமணிய. | — | சுப்பிரமணிய தீட்சிதர் |
| சுவாமிநாத. | — | சுவாமிநாத தேசிகர் |
| சொ.த. | — | நாகை சொ. தண்டபாணியார் |
| திருப்பாற்கடல்நாத. | — | திருப்பாற்கடல்நாதகவிராயர் |
| திரு.வி.க. | — | திரு.வி. கலியாணசுந்தரனார் |
| தெய்வச். | — | தெய்வச்சிலையார் |
| தேவநேயர் | — | தேவநேயப்பாவாணர் |
| நச்சர். | — | நச்சினார்க்கினியர் |
| பரிதி | — | பரிதியார் |
| பரிப். | — | பரிப்பெருமாள் |
| பரிமேல். | — | பரிமேலழகர் |
| பழைய 1. | — | பழைய உரை 1 |
| பழைய 2 | — | பழைய உரை 2 |
| பி. சா. சு. | — | பி.சா.சுப்பிரமணியசாஸ்திரி |
| பேரா. | — | பேராசிரியர் |
| மணக். | — | மணக்குடவர் |

| | | |
|---|---|---|
| மயிலை. | — | மயிலைநாதர் |
| மு.கோ. | — | மு. கோவிந்தசாமி |
| மு.வ. | — | மு. வரதராசனார் |
| வ.உ.சி. | — | வ. உ. சிதம்பரம் பிள்ளை |
| வீரமா. | — | வீரமாமுனிவர் |
| வைத்தியநாத. | — | வைத்தியநாத தேசிகர் |
| வை.மு.கோ. | — | வை. மு.கோபாலகிருஷ்ண மாச்சாரியார் |

*2. நூல்கள்*

| | | |
|---|---|---|
| அகநா. | — | அகநானூறு |
| அப்பர். | — | அப்பர்தேவாரம் |
| இல. கொ. | — | இலக்கணக்கொத்து |
| இல. விள. | — | இலக்கணவிளக்கம் |
| உதயண. | — | உதயண குமாரகாவியம் |
| உ.பழமொழி | — | உலகப் பழமொழி |
| கம்ப. | — | கம்பராமாயணம் |
| கலி. | — | கலித்தொகை |
| குறிஞ்சிப். | — | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந். | — | குறுந்தொகை |
| கோவை | — | திருக்கோவையார் |
| சம்பந்தர் | — | சம்பந்தர் தேவாரம் |
| சிலம்பு | — | சிலப்பதிகாரம் |
| சிவஞானசித்தி. | — | சிவஞானசித்தியார் சுபக்கம் |
| சிவஞானபோ. | — | சிவஞானபோதம் |
| சீவக. | — | சீவகசிந்தாமணி |
| சுந்தரர். | — | சுந்தரர்தேவாரம் |
| சூளா. | — | சூளாமணி |
| தண்டி. | — | தண்டியலங்காரம் |
| திருக்கலம். | — | திருக்கலம்பகம் |
| திருநூற் | — | திருநூற்றந்தாதி |
| திருமந். | — | திருமந்திரம் |
| திருமுருகு. | — | திருமுருகாற்றுப்படை |
| திருவாய். | — | திருவாய்மொழி |
| திருவிளை. | — | திருவிளையாடற்புராணம் |
| திருவெம். | — | திருவெம்பாவை |
| தொல். | — | தொல்காப்பியம் |
| தொன்.விள. | — | தொன்னூல் விளக்கம் |
| நற். | — | நற்றிணை நானூறு |

| | | |
|---|---|---|
| நன். | — | நன்னூல் |
| நாலடி. | — | நாலடியார் |
| நான்மணி. | — | நான்மணிக்கடிகை |
| நீல. | — | நீலகேசி |
| நேமி. | — | நேமிநாதம் |
| பதிற்றுப். | — | பதிற்றுப்பத்து |
| பரிபா. | — | பரிபாடல் |
| பழமொழி. | — | பழமொழி நானூறு |
| பிரயோக. | — | பிரயோகவிவேகம் |
| புறநா. | — | புறநானூறு |
| பெரிய. | — | பெரியபுராணம் |
| பொன்வண்ணத். | — | பொன்வண்ணத்தந்தாதி |
| மணி. | — | மணிமேகலை |
| மதுரைக். | — | மதுரைக்காஞ்சி |
| மாறன். | — | மாறனலங்காரம் |
| முத்து. | — | முத்துவீரியம் |
| மேருமந். | — | மேருமந்திரபுராணம் |
| யசோதர. | — | யசோதரகாவியம் |
| யா.கா. | — | யாப்பருங்கலக்காரிகை |
| யா.வி.சூ. | — | யாப்பருங்கலவிருத்தி சூத்திரம் |
| வளையா. | — | வளையாபதி |
| வில்லி. | — | வில்லிபாரதம் |
| வீர. | — | வீரசோழியம் |

3 *பிற*

| | | |
|---|---|---|
| அதி. | — | அதிகாரம் |
| எழுத்து. | — | எழுத்ததிகாரம் |
| செய்யு. | — | செய்யுளியல் |
| சொல். | — | சொல்லதிகாரம் |
| பக். | — | பக்கம் |
| பொருள். | — | பொருளதிகாரம் |

# உரைப்பாயிரம்

---

## அ) மணக்குடவர்:

''புருடார்த்தமாகிய தன்மார்த்த காமமோட்சங்களுள் முதன் மூன்றனையும் வழுவாதொழுகவே மோட்சம் எய்து தலான், அதற்கு வேறு வகுத்துக் கூற வேண்டுவது இன்மை யின், அஃது ஒழித்துத் தன்மார்த்த காமப் பகுதிகளை அறத் துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று பெயர் கூறுவார்.

''மங்கல வகையான் எப்பொருட்கும் முதலாகிய கடவுள் வாழ்த்தும், அக்கடவுளினது செய்கைத்தாகி இவ்வுலகுக்கு இன்றியமையாததாகிய வான்சிறப்பும், பிறப்பினிற் சிறப்பு எய்துதற்கு உரியராகிய முனிவரது பெருமையும், அவராற் கொண்டுய்க்கப்படுகின்ற அறத்தினது வலியும், நான்கு அதிகாரத்தான் பாரித்து[1]

'பிரமசரியம், காருகத்தம்,[2] வானப்பிரத்தம், சந்நியாதம் என்னும் நால்வகைப்பட்ட அறத்தினுள் பிரமசரியம் சீடராய் நின்று ஓதுவதல்லது, செய்வது பிறிது இன்மையின், அதனைப் புதல்வரைப் பெறுதல் என்புழி அடக்கிக் காருகத்தம் இருபது அதிகாரத்தானும், வானப்பிரத்தம் பத்து அதிகாரத்தானும், சந்நியாதம் மூன்று அதிகாரத்தானும், எல்லார்க்கும் பொது வாகிய ஊழ் ஓர் அதிகாரத்தானுமாக முப்பத்துநான்கு அதி காரத்தான் அறத்துப்பால் கூறி,

''பொருட்பால் அரசனை முதலாக நாடி, அவனுக்குப் புறத் துறுப்பாவன, படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் என

---

1 பாரித்து-பரக்கக் கூறி."பாரித்துரைக்கும் உரை"என்பது போல (குறள்193)

2 காருகத்தம் - கிருகத்தம் என்பதன் திரிபாகிய தத்திதபதம்; இல்லறம்.

ஆறாகப் பகுத்து, அரசர்க்குரிய திறம் இருபத்தைந்து அதிகாரத்தானும், அமைச்சரது இயல்பு பத்து அதிகாரத்தானும், நாடும் அரணும் பொருளும் ஓரோர் அதிகாரத்தானும், படை இரண்டு அதிகாரத்தானும், நட்பு ஐந்து அதிகாரத்தானும், பகை ஆறு அதிகாரத்தானும், அரசர்க்கு அங்கமான பெரியாரைப் பிழையாமை முதல் மருந்தீறாக ஆறும் ஆறு அதிகாரத்தானும், அதற்கு உறுப்பாகிய குடிமுதல் நாணுடைமை எனப்படுவன ஏழ் அதிகாரத்தானும், அரசர்க்கும் ஏனை வருணங்களுக்கும் ஒப்ப உரித்தாகிய குடிசெயல்வகையும் அவருள் பார்ப்பார் ஒழித்துப் பெரும்பான்மை வேளாளர்க்கு உரித்தாகி, ஏனையோர்க்கும், சிறுபான்மை உரித்தாகிய உழவு ஓர் அதிகாரத்தானும், அவ்வாறு பொருள் செய்யாதவழி உளதாகும் நல்குரவும், அதுபற்றித் தோன்றும் இரவும் இரவின்கண் உளதாகிய அச்சமும், இரப்போர்க்கு ஈயாதார் உள்ளிட்ட கயவரது ஒழுக்கமும் ஆகிய இந்நான்கும் ஓரோர் அதிகாரத்தானுமாக எழுபது அதிகாரத்தாற் கூறி,

"காமத்துப்பால் கூறுவார்; குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் என்னும் ஐந்தனையும் முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றனுள் பெரும்பான்மையும் உரிப்பொருள் பற்றிப் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் குறிஞ்சி எனவும், பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலை எனவும், இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லை எனவும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல் எனவும், ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதம் எனவும் ஓரோ ஒரு நிலம் ஐந்து அதிகாரமாக இருபத்தைந்து அதிகாரத்தான் கூறி,

''ஆக நூற்று முப்பத்துமூன்று அதிகாரமாக்கி ஓரோர் அதிகாரம் பத்துக் குறள் வெண்பாட்டாகக் கொண்டு இங்ஙனம் ஆயிரத்து முந்நூற்று முப்பது பாட்டான் வடநூலும் தமிழ் நூலும் கூறும் பொருள் எல்லாம் தொகுத்துக் கூறினார் என உணர்க.''

## ஆ) பரிதி:..........

## இ) பரிப்பெருமாள்:

உலகத்து மக்கட்கு உறுதிபயத்தல் காரணமாகப் பல வகைப்பட்ட சமய நூல்கள் எல்லாவற்றுள்ளும் துணிந்துரைத்த அறம் பொருள் இன்பம் வீடு எனப்பட்ட பொருள் நான்கினை

யும் அருங்கினமுகத் துணர்த்துவான்[1] எடுத்துக் கொண்டார்; அவற்றுள் வீடாவது அறஞ்செய்தாரது பயனாதலின் அவ்வீடு பேற்றை அறத்தினுள் அடக்கி, அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்றார். அறமானது அறமுதலான பொருள் நான்கினையும் பயத்தலின் முற்படக் கூறினார். பொருளானது வீடு ஒழிந்த பொருள் மூன்றினையும் பயத்தலின் அதற்பின் கூறினார் என்று கொள்ளப்படும்.

இனி அறமாவது தானம், தவம், விரதம், பூசை என நால் வகைப்படும். தானமும், பூசையும் இல்வாழ்வார் அறம் செய்யப்படுதலானும், தவமும் விரதமும் துறந்தார் அறம் செய்யப்படுதலானும், அவை இல்லறம் துறவறம் என இரண்டு பகுதியாக்கி அறத்துப்பால் கூறப்பட்டது.

அதனுள் கடவுள் வாழ்த்தும், வான்சிறப்பும், நீத்தார் பெருமையும், அறன்வலியுறுத்தலும் ஒரோர் அதிகாரமாக வும், இல்வாழ்க்கை முதலாகப் புகழ் ஈறாக இல்லறம் இருபது அதிகாரமாகவும் அருளுடைமை முதலாக அவாவறுத்தல் ஈறாகத் துறவறம் பதின்மூன்று அதிகாரமாகவும் ஊழ் ஓர் அதிகாரமுமாக முற்பட முப்பத்தெட்டு அதிகாரங்கள் கூறப் பட்டன.

*ஈ) காளிங்கர்: ..........*

*உ) பரிமேலழகர்:*

இந்திரன் முதலிய இறையவர் பதங்களும்[2] அந்தம் இல் இன்பத்து அழிவில் வீடும் நெறியறிந்து[3] எய்துதற்குரிய மாந் தர்க்கு உறுதி[4] என உயர்ந்தோரான் எடுக்கப்பட்ட பொருள்

---

1 அருங்கினமுகத்து - அருமையான இடத்து. ''உறலருங்குண்மையின்'' (தொல்-பொருள் 146)

2 இந்திரன் முதலிய இறையவர்: இந்திரன் பிரமன் மால் உருத்திரன் ஆகிய கடவுளர். அவர் பதம் - விண்ணுலகம் சத்தியலோகம் வைகுந்தம் கைலா யம் முதலான இடங்கள். பதம் - பதவிகள் எனலுமாம்.
இந்திரன் முதல் ஈசானன் இறுதியாக உள்ள எண்மரும் அவர் பதவிகளும் என்பர் கோ. வடிவேலு செட்டியார். அவர்கள் திசை காப்பாளர்களே இறைவராகார். அவர்கள் பதவிகள் நல்லன செய்தலாகிய நெறிகளை யறிந்து நோற்று எய்தக் கூடியனவும் அல்ல; அவைகடவுளால் நியமிக்கப் பெறுபவை என்க. வை. மு. கிருட்டின்மாசாரியார் இறைவர்- தேவர்கள் என்றலும், பதங்கள் - போக ஸ்தானங்கள் எனக் கூறுதலும் இதற்குத் துணை செய்யும்.

3 நெறியறிதலாவது விதிக்கப்பட்டன இவை, விலக்கப்பட்டன இவை என அறிந்து விதிக்கப்பட்ட நெறியில் ஒழுகுதலாம்.

4 உறுதி பயப்பனவற்றை உறுதி என்றது காரிய ஆகுபெயர்.

நான்கு[1]. அவை அறம், பொருள், இன்பம், வீடு[2] என்பன. அவற்றுள் வீடு என்பது சிந்தையும் மொழியுஞ் செல்லாநிலைமைத்து ஆகலின், துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவது அல்லது இலக்கணவகையாற் கூறப்படாமையின் நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்.

அவற்றுள், அறமாவது மனு முதலிய நூல்களில்[3] விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம், வழக்கு, தண்டம் என மூவகைப்படும்.[4]

அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார்[5] தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியம் முதலிய நிலைகளில் நின்று அவ்வவற்றிற்கோதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல்.

வழக்காவது ஒரு பொருளைத் தனித்தனியே எனது எனது என்றிருப்பார்,[6] அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேற் செல்வது. அது கடன்கோடல் முதற் பதினெட்டுப் பதத்ததாம்.[7]

---

1 உறுதிப் பொருள்களைத் தரும - அர்த்த - காம - மோட்சம் என்பர் வடநூலார்.

2 "தொல்காப்பியர் வீடுகூறாரோ எனின். அகத்தியனாரும் தொல்காப்பியனாரும் வீடு பேற்றிற்கு நிமித்தம் கூறுதலன்றி வீட்டின் தன்மை இலக்கணத்தாற் கூறார் என்று உணர்க. இக்கருத்தானே வள்ளுவனாரும் முப்பாலாகக் கூறி மெய்யுணர்தலான் வீடுபேற்றிற்கு நிமித்தம் கூறினார்." (தொல. சிறப்புப்பாயிரம், - நச்சினார்க்கினியர்)

3 தரும நூல் - 18. மனு, அத்திரி, ஔரிதம, விட்டுணு, யாக்ஞுவல்கியம் உசனம், ஆங்கீரசம், யமம, ஆபததம்பம், சமவர்த்தம், காத்தியாயனம் பிருகற்பதியம், பராசரம், வியாசம சங்கலிதம், தக்கம், கௌதமம், சாதன்மம், வசிட்டம் என்பன.

4 இவை மூன்றையும் ஆசாரம், விவகாரம், பிராயச்சித்தம் என்பர் வடநூலார்.

5 அந்தணர் முதலிய வருணத்தார் பிராமணர் அரசர் வணிகர் சூத்திரர் என்ற பகுப்புடையார். நிலைகள் - ஆச்சிரமங்கள். அவை நான்கு, பிரமசரியம், கிருகததம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்பன.

6 'ஒரு பொருளை எனது எனது என்றிருப்பார்' என்பது "எனதெனது என்றிருக்கும் ஏழை பொருளை" என்ற நாலடியார்ப் பகுதியை (276) நினைவில் கொண்டு எழுதப் பெற்றது.

7 பதினெட்டுப் பதங்களாவன - கடன் கோடல் உபநிதி, கூடிமேம்படல், நல்கியதை நல்காமை, ஒப்பிப்பணிசெய்யாமை, கூலிகொடாமை, உடையன் அல்லான் விற்றல். விற்றுக் கொடாமை, கொண்டுள்ளம் ஒப்பாமை, கட்டுப்பாடு கடத்தல், நிலவழக்கு, மாதராடவர் தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூது, ஒழிபு, என இவை. (கௌடலீயம் அருத்தசாஸ்திரம், மொழிபெயர்ப்பு, பக்கம் 451 முதல் 472 வரை இவற்றின் விரிவைக் காணலாம். மனுதர்மத்திலும் (மனு: அதி:8.9) சுக்கிர நீதியினும் வருவனவாம்)

தண்டமாவது அவ்வொழுக்க நெறியினும் வழக்கு நெறியினும் வழீஇயினாரை அந்நெறி நிறுத்துதற் பொருட்டு ஒப்பநாடி அதற்குத்தக ஒறுத்தல்.[1]

இவற்றுள் வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்துதல் பயத்த ஆவதல்லது ஒழுக்கம் போல மக்களுயிர்க்கு உறுதி பயத்தல் சிறப்பிலவாகலானும், அவை தாம் நூலானே அன்றி உணர்வு மிகுதியானும் தேய இயற்கையானும் அறியப்படுதலானும், அவற்றை ஒழித்து, ஈண்டுத் தெய்வப்புலமைத் திருவள்ளுவரான் சிறப்புடைய ஒழுக்கமே அறம் என எடுத்துக் கொள்ளப்பட்டது.

அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடு உடைமையின், சிறுபான்மையாகிய அச்சிறப்பியல்புகள் ஒழித்து எல்லார்க்கும் ஒத்தலின் பெரும்பான்மையாகிய, பொதுவியல்புபற்றி இல்லறம் துறவறம் என இருவகை நிலையான் கூறப்பட்டது.

அவற்றுள், இல்லறமாவது இல்வாழ்க்கை நிலைகளுக்குச் சொல்லுகின்ற நெறிக்கண் நின்று அதற்குத் துணையாகிய கற்புடை மனைவியோடும் செய்யப்படுவது ஆகலின், அதனை முதற்கட் கூறுவான் தொடங்கி[2] எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றார்.[3]

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

“இதுவரை வெளிவந்த மணக்குடவருரைப் பதிப்புக்களில் 1917 இல் வெளியான வ.உ. சிதம்பரனார் பதிப்புத் தவிர ஏனைய பதிப்புக்களில் காணப்பெறாத பகுதி. 1925இல் மணக்குடவர் உரையைப் பதிப்பித்த க. பொன்னுச்சாமி நாடாரும் இப்பகுதியை விட்டமையால் அவர்கட்குக் கிடைத்த ஏடுகளிலும் இஃது இல்லை என்றே தோன்றுகிறது.

1 “நீமெய்கண்ட தீமை காணின்
ஒப்பநாடி அத்தக ஒறுத்தி” —புறநா. 10: 3-4

2 ‘தெய்வப்புலமைத் திருவள்ளுவர்’ - திருவள்ளுவமாலை, 1,19,39,41,49

3 எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற்பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறுதல் ஏனைய இலக்கியமுடையார் மரபு, ஒழுக்கங்கூற வந்த வள்ளுவர் தாம் கூறும் ஒழுக்கங்கள் அனைத்தும் கடவுளை வாழ்த்துதலாகிய அறமொன்றனையே அடித்தளமாகக் கொண்டு நிலைபெறுவன ஆதலின் கடவுளை வாழ்த்துதலாகிய அறத்தை முதற்கண் கூறினர் என்க.

இதனை *'நாடும் காமமும்'* என்ற தொகுப்பில் எடுத்துக் காட்டிய *தெ.பொ.மீ.* அவர்களே தம் நூல் பக்கம் 177இல் *வ.உ.சி.* பதிப்பிலுள்ள உரைப் பாயிரமும் ஏனைய *மணக்குடவர்* உரைப் பதிப்புக்களில் காணப்பெறும் பொருட்பால் காமத்துப் பால்களின் முன்னுரையும் வேறுபடுவதால் இதனை மணக்குடவருடையதே என ஒப்புவது யாங்ஙனம்? என ஐயுறுகின்றனர். பரிப்பெருமாள் உரையும் *மணக்குடவர்* உரையும் மயங்கிக் கிடப்பதால் *பரிப்பெருமாள்* எழுதிய முன்னுரையை *மணக்குடவரது* எனப் பின்னையோர் கருதினர் போலும் என்கின்றார்கள்.

பரிப்பெருமாள், மணக்குடவர் உரைக்கு எழுதிய குறிப்புக்களில் சில மாற்றங்களைத் தந்தமையால் அவருரை வேறானதாகக் கருதப்பட்டது எனவும் கூறுகிறார்கள். அங்ஙனமாயின் மணக்குடவர் உரை பரிப்பெருமாளின் உரையாகக் கருதப்பட்டிருக்குமல்லவா? உரைவளம் இரண்டாம் பதிப்பிலும் உரைக் கொத்திலும் முன்னுரையாகப் பரிப்பெருமாள் எழுதியதொன்றும் காணப்படுகிறது. அது இதனின் வேறாயது. இவற்றை எல்லாம் இணைத்து எண்ணும்போது மணக்குடவர் எழுதியதாக வ.உ.சி. பதிப்பிற் காணப்படும் உரைப்பாயிரம் எங்ஙனம் கிடைத்தது? என்ற ஐயத்திற்கு இடனாகிறது. உரைப்பாயிரம் அமைப்பிலும் ஏனையோர் பாயிரம் போலாது இயற்பாகுபாடும் அதிகாரப் பகுப்பும் உணர்த்திச் செல்வதாலும் இக் கருத்து வலியுறுகிறது.

*பரிப்பெருமாள்:*

உரைப்பாயிரம், வீடுபேற்றை அறத்தினுள் அடக்கியும், முறைவைப்பிற்கு 'அறம் அறமுதலிய நான்கையும் உணர்த்துவது, பொருள் பொருளின்பங்களாகிய இரண்டையே உணர்த்துவது, இன்பம் இன்பம் ஒன்றையே உணர்த்துவது' எனக் காரணம் காட்டியும், அறத்தைத் தானமும் பூசையும் விரதமும் தவமும் என நான்காக்கி, முன்னிரண்டும் இல்லறம்; பின்னிரண்டும் துறவறம் என இயலமைப்பும் கூறிச் செல்கிறது. இது *மனு* முதலிய அறநூல் வழிச்செல்லாத—ஆனால், அப்பாகுபாடுகள் அனைத்தையும் அடக்கிய சிறந்த போக்காகும்.

பரிப்பெருமாள், பரிமேலழகர் ஆகிய இருவரும் உரைப் பாயிரம் என்ற தலைப்பில் முப்பாலாகக் கூறியதற்கும் வீடு

இலக்கண வகையாற் கூறாமைக்கும், வழக்கும் தண்டமும் கூறாமைக்கும் காரணங்கள் காட்டினர்.

*அப்பாத்துரையார்:*

அறத்துப்பால் முன்னுரையிற் கூறும் முற்பகுதி, முப்பாலின் முன்னுரையாகவும், பிற்பகுதி அறத்துப்பாலின் முப்பாற் பொதுமையையும் இன—சமுதாய—உலக நலங்களின் பொதுமைக் கருத்தை விளக்குவதாகவும் அமைகிறது; பல நுணுக்கமான இயல்புகளை உடையது. மிகவிரிவானது.

*பாவாணர்:*

முன்னுரை, திருக்குறளின் உரைப்பாயிரமாய், தமிழர் நாகரிக வரலாற்று அடிப்படையில் தொடங்கி, *பரிமேலழகரின்* கருத்துக்களின் பொருந்தாமையைப் பன்னிரண்டு தலைப்புக்களான் காட்டி அமைகிறது. இவைகளை அவ்வப்பதிப்புக்களிற் காண்க.

*சுகாத்தியர்:*

'உரையாசிரியர் கோட்பாடு' என்ற தலைப்பில் பாலியல் அதிகாரப் பகுப்பில் உரையாசிரியர்கள் தம்முள் மாறுபடுகின்றனர் என்றும், அறம் பொருளோடு இன்பமும் நூற்பயனாமேயன்றி நூலினது உறுப்பாதல் இன்று என்றும் காமத்துப்பாலுக்குக் காம நோக்கமாகப் பொருள்செய்தல் கூடாதென்றும் கூறி, பாலியல் அதிகாரப் பகுப்புக்களைப் பதிகக்கருத்துயர் அட்டவணை, இயல்முறைவாழ்த்து, இயைமுறை வாழ்த்து, இறைமுறைப்பால் எனப் பகுப்பர். அதிகாரங்களுக்கும் வேறுவேறு பெயர்கள் தருவர். ஐகார ஔகாரங்களின் தொன்மையான வடிவம் 'அய்' 'அவ்' என்பதேயாம் என்பர்.

இரா. இராகவஅய்யங்கார் 'ஏந்துகொடி இறைப்புரிசை' (புறநா.17) என்புழிப் போல இறை—உயர்ச்சி, இறையவர்-உயர்ச்சி உடையவர். நையாயிகர் அறத்தைக் குணம் என்பர். பரிமேலழகர் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாகிய செயல் என வைசேடிக மதம்பற்றிக் கூறினார். இதுவே வள்ளுவர்க்கு உடன்பாடு என்பதனை 'அறவினையாதெனில்' (குறள் 321) 'அறவினை ஓவாதே' (குறள் 33) என்ற தொடர்கள் அறிவிக்கின்றன (செந்தமிழ், தொகுதி 1, பகுதி 8, பக். 339-342) என்பர்.

# 1. கடவுள் வாழ்த்து

## முன்னுரை:

### அ) மணக்குடவர்[1]:

கடவுள் வாழ்த்தாவது கடவுளை வாழ்த்துதல்.

### இ) பரிப்பெருமாள்:

அவற்றுட் கடவுள் வாழ்த்தாவது தெய்வவணக்கங் கூறுதல். "வழிபடுதெய்வ வணக்கம் செய்ய எடுத்துக்கொண்டது இனிது முடியும்" என்பதனாலும், கடவுள் வழிபாடு நால் வகைப்பட்ட அறத்தினும் பூசையாதலானும், இவரை வழிபடாதார் செய்வதோர் அறமில்லை என்பதனானும் இவ்அதிகாரம் முற்படக் கூறப்பெற்றது. இதனுடன்—

### உ) பரிமேலழகர்:

அஃதாவது கவி, தான் வழிபடும் கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக் கடவுளை என வறிக. என்னை? சத்துவம் முதலிய குணங்களான் மூன்றாகிய உறுதிப் பொருட்கு அவற்றான் மூவராய முதற்கடவுளோடு இயைபுண்டாகலான். அம் மூன்று பொருளையும் கூறலுற்றார்க்கு அம்மூவரையும் வாழ்த்துதல் முறைமை ஆகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும் பொதுப்படக் கூறினார் என உணர்க.

---

1 இவர் பெயர் மணக்குடியர் எனவும், இவருரை தேவருரை எனவும் வழங்கப்பெறும்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*சுகாத்தியர்:*

முதற்பொருள் வாழ்த்து என அதிகாரப்பெயர் கூறி, உலகிற்கு முதலாகிய பதியைக் கூறுதல் என்பொருள் கூறுவர்.

*மு.ரா.அரு:*

''இங்கே கூறிய வாழ்த்து இந்நூல் எல்லாச் சமயத்துக்கும் ஒத்து நின்ற நூலாதலால், அதற்கேற்ப எல்லாச் சமயத்தையும் உள்ளடக்கி நின்ற முழுமுதற்கடவுளை வாழ்த்தியதாம்'' என்பர். திருக்குறளாகிய பொதுநூலுக்கு ஏற்புடைய கடவுள் வாழ்த்தாதலின் இது ஏற்புடைக் கடவுள் வாழ்த்து என்பது ஒரு புதிய கருத்து.

*திரு. வி. கலியாணசுந்தரனார்:*

இந்நூலின் அதிகாரத்தலைப்புக்கள் அவ்வவ் அதிகாரத்தின் முதற்பாட்டிலுள்ள அதிகாரப் பொருளை உணர்த்தும் சொல்லையோ பொருளையோ கொண்டவை என்று அறிகிறோம். அம்முறையில் இவ்வதிகாரம் ஆதிபகவன் அல்லது உலகமுதல் என்றிருக்கலாமெனத் தோன்றுகிறது. ஆயினும் பல ஏடுகளில் இருப்பதால் கடவுள் வாழ்த்தெனக் கொள்ளலாமென்பர். இவ்வதிகாரத்தில் கடவுள் இயல்பைக் காண்கின்றோமன்றி வாழ்த்துதல் யாண்டுளது என்று கருதலாம். முதற்பாட்டு கடவுளுண்மையைக் கூறி ஏனைய பாக்கள் வாழ்த்தும் சொல்கின்றன; ஆதலால் இப்பெயர், இயைபுடைத்தே என்பது பெறப்படும்.

*கா. சுப்பிரமணியபிள்ளை:*

கடவுள் வாழ்த்தென்பது கடவுள்வழிபாட்டு இன்றியமையாமையை வற்புறுத்துவது.

*சி. இலக்குவனார்:*

அதிகாரப்பெயர் 'இறைநலம்' எனக்கொண்டு முதன்மையாகிய குணங்களை அடையவேண்டுமென்பதே இவ்வதிகாரத்தின் கருத்தென்பர். இந்த முதன்மையான குணமே அறம் முதல் முப்பாலையும் இனிது நுகர ஏதுவானது.

அன்பே கடவுள், அறிவே கடவுள், ஆற்றலே கடவுள். ஆகவே கடவுட் கொள்கையும் அக்குணங்களையே குறிப்பன. கடவுள் வாழ்த்து என்ற பழமையான கருத்தும் இதுவும் வேறானதல்ல என்று விரிவான விளக்கம் தருவர்.

*கா. அப்பாத்துரையார்:*

திருக்குறள் ஏட்டிற்குப் பாயிரம் வாழ்த்து; பாயிரத்திற்கு வாழ்த்தாய் அமைந்தது இறைவாழ்த்து. இறைவன் இயற்கையின் உள்ளுறை. இனவாழ்வின் மூலகாரணன். உயிர் முதல்வன். அவனை வாழ்த்துவது இது. இவ்வதிகாரம் உண்மையில் உலக குருவாகிய ஆதிபகவனையே கடவுளாகக் கொண்டு இலங்குவது எனப்பலபடக்கூறுவர்.

***தேவநேயப்பாவாணர்:***

அதிகாரப்பெயர் முதற்பகவன் வழுத்து என்பர். முதற்பகவனை வழுத்துதல். வழுத்தற் காரணமாக இவர் கூறுவன: 1. இயற்றும் நூல் இனிது முடிதல் 2. நூலுக்கு வேண்டிய தெள்ளியஅறிவை இறைவனிடமிருந்து பெறுதல் 3. இறைவனருள் உலக நடப்பிற்கு இன்றியமையாத முதற் காரணம் ஆதலின் அதனைத் தேடுதல் 4. எல்லாரும் எதனையும் இறைவனைத் தொழுதே தொடங்கவேண்டும் என்ற நெறிமுறைமையை நிலை நாட்டுதல் என்பார்.

கடவுள் என்றசொல் வள்ளுவரால் யாண்டும் ஆளப்பெற் றிலது. அவர்கையாளும் சொல் இறை என்பதே. ஆதலால் இறைவாழ்த்து முதற்பகவன் வழுத்து எனச்சொல்ல வேண் டும் என்றனர் இருபதாம் நூற்றாண்டுப் பேரறிஞர் அனை வரும்.

வாழ்த்து என்பது வாழ்த்துதற் பொருளிலன்றி இடை விடாது எண்ணுதல், புகழைப் போற்றுதல் ஆகிய மனமொழி களின் செயலாகவும், வணங்குதல் தொழுதலாகிய மெய்யின் செயலாகவும், பொருள் பெற்று, வணங்கலும் நினைத்தலும் போற்றுதலுமாகிய மூன்றனையும் உணர்த்தும் பொதுப்பெய ராக ஈண்டு ஆளப்படுகின்றது. வள்ளுவரும் சேர்தலாகிய எண்ணுதலை ஐந்து குறட்பாக்களிலும், புகழ்தலைப் 'புகழ் புரிந்தார்' என ஒரு குறட்பாவிலும் அதிலும் மனமும் மொழி யும் மெய்யும் இணைந்து விரும்பி, சொல்லி வணங்குதலைச் செய்தால் என வேறு வினையாலும் குறித்தமை ஆய்வுக்குரி

யன. மெய்யின் தொழிலாகிய வணக்கத்தைத் 'தொழாஅர் எனின்' 'வணங்காத்தலை' என ஈரிடங்களில் குறிப்பிடுதல் காண்க. ஆதலால் இறைவன் அறிவுருவினன் ஆதலின் அவனை எண்ணுதற்கு முதலிடமும், புகழ்தற்கு இரண்டாமிடமும், வணங்கற்கு மூன்றாமிடமும் தந்தமை நுனித்து இன்புறற்குரியது.

மனமொழி மெய்களால் போற்றுதல் மட்டும்அமையாது அவன் சொன்ன நெறிப்படி ஒழுகுதலே உண்மையான வாழ்த்து என இடைநிலைத் தீபகமாக நெறிநடத்தலை ஆறாங்குறளாக அமைத்தலையும் *பரிமேலழகர்* மேற்கொண்டார். ஏனையோரும் ஏழாவது எட்டாவது குறளாகக் கொண்டனர்.

இவ்வதிகாரம், காட்சியளவையாற் கண்ட உலகத்தைக்கொண்டு, கருதல் அளவையால் கடவுள் உண்மையைச் சாதித்து, ஆதிபகவன், வாலறிவன், பொறிவாயில் ஐந்தவித்தான், வேண்டுதல் வேண்டாமையிலான், அந்தணன், எண்குணத்தான் முதலியவற்றான் இலக்கணங்கூறி, அவனை எண்ணுதலும் புகழ்தலும் வணங்குதலும் செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்வார் கவலையற்று நிலமிசை நீடுவாழ்ந்து பிறவிக்கடலைக் கடப்பர் எனப் பயன் கூறி அமைகிறது.

சத்துவம் முதலிய குணங்கள் மூன்று—சத்துவம் இராசதம் தாமதம் என்பன. அவற்றின் மூன்றாயமுதற் கடவுளர்—சத்துவம் திருமால்; இராசதம்—பிரமன்; தாமதம்—உருத்திரன். அவற்றான் மூன்றாய உறுதிப்பொருள்—சத்துவம் அறம், இராசதம்—பொருள், தாமதம்—இன்பம் என்பன.

இக்கடவுள் வாழ்த்து ஏற்புடைக் கடவுளை வாழ்த்தியது என்றமைக்கேற்பப் *பரிமேலழகர்* இங்ஙனம் கருதினார் ஆயிற்று. *வள்ளுவம்* கூறுவது சமயங்கடந்த சத்துவப் பொருளாகிய பரம்பொருளையே ஆதலின் அது பொதுநிலைக் கடவுளாம்.

முக்குணங்களும் மக்கட்கும், மக்களில் உயர்ந்தோராகிய தேவர்க்கும் உரியனவேயன்றிப் பரம்பொருளுக்குரியன ஆகா என்பதை *வள்ளுவரே* எண்குணத்தான் வாலறிவன் என்ற பெயர்களாற் குறித்தனர். ஆதலால் முக்குணவயப்படுதல் இறைவற்கில்லையாம் என்க.

முக்குணங்களான் கடவுளரையும் மூன்றாகப் பகுத்தல் (*திருக்குறள்*, வை. மு. கோ., பக். 4,5.) வைணவ மரபே யன்றிப் பொதுவன்மை தெளிக.

ஏற்புடைக் கடவுள்: நூலிற் கூறப்பெற்ற பொருளுக் கேற்ற கடவுள். நூல் அறம் பொருளின்பங்களைக் கூறலின் அதற்கேற்ப மூவர் தேவரையும் பொதுப்பட வாழ்த்தினர் என்பது. இக்குறிப்பு கடவுள் வாழ்த்தில் சிறிதும் இன்மை தெளிக. இதனை எண்ணிப்பார்த்த *மு.ரா.அரு.* இந்நூல் சமயப் பொதுநூல். ஆதலான் சமயப்பொதுமை தோன்றக் கடவுளை வாழ்த்துதலான் ஏற்புடைக் கடவுள்வாழ்த்து ஆயிற்று என்பர்.

அன்றியும் கடந்த ஞானியாகிய *வள்ளுவர்*, முழுமுதற் கடவுளை 'மெய்ப்பொருள்' 'செம்பொருள்' 'உள்ளது' என்று அழைப்பவர்; இங்ஙனம் பாற்படுத்திக் கூறார். ஆயினும் கடவுள் வாழ்த்தில் அங்ஙனம் கூறியது இறையுண்மையையும் இயல்பையும் உணர்த்துநற் பொருட்டாம் எனவும், மெய் யுணர்வு அறிவுடைமைகளிற் பொதுமையிற் கூறியது அனு பவ நிலைக்கண் எண்ணுதற் பொருட்டாம் எனவும் தெளிக.

*கோ. வடிவேலு செட்டியார்*, பரிமேலழகர் உரைக்கு விளக்கந்தர வந்தவராதலின் 1,2,4,5,7,10 எண்ணுள்ளபாக் கள் முதற்கடவுளது வாழ்த்தும், 6,8 அரியின் வாழ்த்தும், 9 அரன்வாழ்த்தும் கூறுகின்றன என்பர். குழந்தை அதிகாரப் பெயரையே மாற்றியதால் இறை என்பதனைப் பண்பாகவே கொண்டு 'முதன்மை' எனப்பொருள்கொண்டு இறைநலம் என்பதற்கு முதன்மையானகுணம் என்றும் இவ்வதிகார நோக்கு அவற்றையடைய வேண்டியதன் இன்றியமை யாமையை உணர்த்துவது என்றும் கருதுகிறோம் என்பர்.

*தேவநேயர்* கூறும் வழுத்தற்காரணங்களில், நூல் இனிது முடிவதற்காக வழுத்துவதும் ஒன்று. *வள்ளுவர்* எங்கும் தன் மையிற் கூறாது, உலக முதல்வன் கடவுள்; அவனடியை வழுத்துக எனப் பணித்தலின் இப்பகுதியும் கடவுளை வணங் குக என அறன் கூறியதேயன்றி வேற்று நோக்குடைய தாகாது எனத் துணியலாம்.

*அப்பாத்துரையார்* காலவளர்ச்சியை உளத்துக்கொண்டு வள்ளுவரைப் பல சமயத்தாரோடு இணைத்து எண்ண வைப் பார்ஆயினும் அவர் உரையில் சமணக்கருத்துஊன்றியிருத்தல் உணரத்தக்கது. குரு வணக்கம் என்ற முடிபே சமணவழி

வந்த கருத்தின் முடிவாகும். வள்ளுவர் சமயக் காழ்ப்புக் கருத்துக்கள் தாக்காத தமிழ் மதத்தினர். தமிழர் சமயமே அவர் சமயம். இலக்கணங்களைக் கொண்டு ஓரளவு உணர லாமேயன்றி, வேற்று நிலையில் அறிய முடியாது என்ற மரபினர். அவர் கூறும் கடவுள் எல்லாமாயிருப்பவர் என்று உணர்த்துவதே அவர் குறிக்கோள்.

"அதிகாரம் என்பது ஒரு பொருள்நுதலிவரும் பல பாவின் தொகுதி, இது கடவுள் வாழ்த்து என்னும் ஒரு பொருளை நுதலிப் பத்துப்பாட்டுக்கள் வந்தமையால் கடவுள் வாழ்த்து என்னும் பெயர்த்தாயிற்று. எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஏற்புடைக்கடவுளை வாழ்த்துதல், *குண்டலகேசி நீலகேசி* தெருட்டுக்கள் முறையே புத்தனையும் அருகனையும் வாழ்த்தியதுபோன்றது- ஏற்புடைக்கடவுளே வழிபடு கடவுளு மாதல் மரபும் உண்டு'' என்பர் இரா. இராகவய்யங்கார்.[1]

## *1.1. அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே யுலகு.* (க)

*உரைப்பகுதி*:

*அ) மணக்*: எழுத்துக்கள் எல்லாம் அகரமாகிய எழுத் தைத் தமக்கு முதலாக உடையன; அவ்வண்ணமே உலகம் ஆதி ஆகிய பகவனைத் தனக்கு முதலாக உடைத்து என்ற வாறு.

*ஆ) பரிதி*: என்பது[2] உயிர் எழுத்துப் பன்னிரண்டுக்கும்[3] அகரம் முதல் எழுத்தாதல் முறைமை போல, ஆதியான பக வன் முதலாம் உலகத்துக்கு என்றவாறு.

---

1 செந்தமிழ், தொகுதி 1, பகுதி 10. பக்.430

2 'என்பது' என்று வருவன, குறளை நினைவூட்டுவன.

3எழுத்தெல்லாம் என்பதற்கு 'உயிர் எழுத்துப் பன்னிரண்டுக்கும்' என்பர் பரிதி. இக்கருத்தே பரிமேலழகர்க்கு 'உலகு என்றது சித்தும் சடமும் ஆகிய இருவகை உலகையும் அன்று; சித்துஉலகத்தைக் குறிக்கும்'எனக் கருத வைத்தது. உயிர்ப் பொருளும் உயிரிலி பொருளுமாகிய இருபகுதி பட்ட உலகில் உயிர்ப் பொருளே மெய்யுணர்ந்து ஆதிபகவனை அறிந்து அனுபவிக்கும் தன்மையது. அதனாலேயே அவர் 'உலகு என்றது ஈண்டு உயிர்களை' என்றார், இறைவனுக்கு உயிர்கள் யாவும் அடிமை; உயிரில் பொருள்கள் யாவும் உடைமை. ஆதலின் இருவகை உலகிற்கும் ஆதிபக வன் முதல் என்பார் 'முதற்றே உலகு' என்றார்.

இ) *பரிப்:* என்பது என்ன சொன்னவாறோ எனின், சொல்லும் பொருளும் என்னும் இரண்டனுள்ளும் சொல்லிற்குக் காரணமாகிய எழுத்தும் சொல்லும் பொருளும் அகரத்தைத் தமக்கு முதலாக உடையவாறு போலத் தோன்றுகின்ற எல்லாப் பொருட்கும் காரணமாகிய உலகமும் நீர் தீ வளி ஆகாயமாகி ஒன்றோடொன்றொவ்வாத பெற்றியதாயிருப்பினும் ஆதி பரமேஸ்வரனைத் தமக்கு முதலாக உடையதாதலால் அவனை வழிபடவேண்டும் என்றவாறாயிற்று. அன்றியும் உலகம் என்பதனை உயர்ந்தோர் ஆக்கி எல்லாப் பொருளிலும் உயர்வு உடைத்தாகிய உயிர்கள் ஆதி பரமேஸ்வரனைத் தமக்கு முதலாக உடைய என்றும் ஆம். அஃதேல், அவன் முதலாயின வழி யாங்ஙனம் முதலாயினானாகக் கூறினாரென்று பிறிதொன்றுதோற்றுதற்கு அடியாய் நிற்பதூஉம் முதலாம். பசு எவையிற்றினும் சிறப்புடைத்தாய் முன்னால் எண்ணப்படுவதூஉம் முதல் ஆண்டு உவமையாகக் கூறிய அகரம் இருபகுதியும் உடைத்தாயினும் ஏனை எழுத்துக்களுக்கு அடியாய் நிற்றல் எல்லாரானும் அறியப்பட்டமையான் தலைமைபற்றிக்கூறினார் என்று கொள்ளப்படும்.

ஈ) *காளி:* என்பது அகரமும் அதுவே; முதலும் அதுவே அகரமாகிய எழுத்தின் கண் விரிந்தன ஏனை எழுத்துக்களும், அவற்றான் ஆகிய சொற்களும், மற்றைச் சொல் தொடர்புடைய எனைத்துக் கலைகளும் மற்றும் யாவையும் ஆகிய அது மற்று யாதொருபடியே? அப்படியே மூல காரணனாகிய இறைவன் கண்ணே விரிந்தனவும். அவை, ஓசை ஊறு ஒளி சுவை கந்தம் என்கின்ற நுண்பூதமும், அவற்றின் வழி விரிந்த வான்வளி தீ நீர் நிலம் என்கின்ற ஐம் பெரும் பூதமும், அவற்றின் வழி விரிந்த நடப்பன நிற்பனவாகிய இருவகைப் பலஉயிர்களும், மற்றும் இவ்வுயிர்கள் வாழ்கின்ற உலகங்கள் அனைத்தும் என்றவாறு.

உ) *பரிமேல்:* எழுத்துக்கள் எல்லாம் அகரம் ஆகிய முதலை உடையன (அதுபோல) உலகம் ஆதிபகவன் ஆகிய முதலை உடைத்து.

இது தலைமைபற்றி வந்த எடுத்துக்காட்டு உவமை [1] அகரத்திற்குத் தலைமை விகாரத்தான் அன்றி, நாதமாத்

---

1 எடுத்துக்காட்டு உவமையாவது உவ்மானத்தையும் உவமேயத்தையும் தனிவாக்கியங்களாக நிறுத்தி இதுபொருள் இது உவமை என்பது தோன்ற இடையில் அதுபோல என்னும் உவமஉருபு கொடாமல் கூறுவது. இதன் விரிவைத் தொகுப்பாசிரியர் குறிப்பில் காண்க.

திரை[1] ஆகிய இயல்பான் பிறத்தலானும், ஆதிபகவற்குத்[2] தலைமை செயற்கை உணர்வான் அன்றி இயற்கை உணர்வான் முற்றும் உணர்தலானும் கொள்க. தமிழ் எழுத்திற்கே அன்றி வட எழுத்திற்கும் முதல் ஆதல் நோக்கி எழுத்து எல்லாம் என்றார். ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை[3] வடநூல் முடிபு.[4] உலகு என்றது ஈண்டு உயிர்கள் மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தான்[5] காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின் ''ஆதி பகவன் முதற்றே'' என உலகின் மேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும். உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க. ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுளது உண்மை கூறப்பட்டது.

*காரி*: அவைபோல என்னாது ஒருமையாய் அதுபோல என்றது காண்க. வாளாது எடுத்துக்காட்டு உவமை என்னாது தலைமை பற்றி வந்தது என்றதனானும், முதற்றே உலகு என உலகின்மேல் வைத்துக் கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதிபகவன் என்பது கருத்தாகக் கொள்க என்பதனானும் எழுத்திற்கெல்லாம் முதல் அகரம்; அது போல உலகிற்கு முதல் ஆதிபகவன் என்க. ஆதிபகவன் என்பது பகர ஒற்று மிகாமையான்வடநூல் முடிபு என்றார் என்க. தமிழ் முடிபாயின் "அறைபறை கண்ணார்க்கு''[6] உரைத்தாங்கு[7] உரைப்பர். எடுத்துக்காட்டு உவமை

---

1 நாதம் என்பது வெண்கலமணி அடித்தபின் கலீர் என்று உண்டாகும் பொதுச்சத்தம் போன்ற தொடர்ச்சியாகிய சத்தம், என்பர் கோ.வ.

2 ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களையும் உணர்த்துவது பகம் என்னும் சொல் (தமிழ் அகராதி). அவற்றை உடையவன் பகவன என்பர் கோ.வ.

3 நிலைமொழி சிறப்புப்பெயராயும் வருமொழி பொதுப்பெயராயும் இருந்து இரண்டு பெயர்ச் சொற்களும் ஒட்டி வருவது இருபெயரொட்டுப் பண்புத தொகையாம். தொல்காப்பியத்துப் பண்புத்தொகையிலக்கணம் கூறுமிடதது 'என்ன கிளவியும்' என்பதால் உரையாசிரியர் கொண்ட 'ஒரு பொருட்கண் இருபெயர்பட வந்த தொகையாய்' 'ஆதிபகவன்' என்பது ஆதி ஆகிய பகவன் என விரியும். அகரமுதல் என்பதும் அங்ஙனமே.

4 ஆதி என்னும் நிலைமொழியும் பகவன் என்னும் வருமொழியும் ஆரிய மொழிதிரிந்த வடசொல் ஆதலின் உயிரீறாகிய உயர்திணைப் பெயர் வல்லினம்வர எல்லாவழியும் இயல்பாயிற்று. (தொல்: எழுத்-தொகை 11)

5 காணப்பட்ட உலகத்தான் என்பதில் உயிரும் காணப்படுமோ எனின் உடம்போடு கூடிக் காணப்படுதலை உணர்த்தியவாறு.

6 குறள் 1180

7 இங்ஙனம் செய்யுள் விகாரமாக்காது 'அறை பறைக்கண்ணார்' என்று பாடம்ஓதுவாரும் உளர்-பரிமேலழகர்

யாவது உவமஉருபு பெறாது அதுபோல எனப் பெய் துரைப்பக் கிடப்பது. இதனை இசை எச்சம் என்று எழுதினார் சேனாவரையர்.[1] அது ''காகத்து இரு கண்ணிற்கு ஒன்றே மணி கலந்தாங்கு இருவர்''[2] என்னும் கோவையார் உரையில் காண்க. காணப்பட்ட உலகு உயிர் மேல் நின்றால் காணப்படுதல் எவ்வாறு எனின், முன்னர் 'உலகம் வழங்கி வருதலால்'[3] என்பதற்கு 'உயிர் உடம்பொடு காணப்பட்டு வருதலால் என்னும் உரையானும், 'உயரீரும்வாள்'[4] என்ப தனானும்காணப்படும்'' (நுண்பொருள்மாலை).

*இராமா:* ஒலி விகாரமான செயற்கையினாலும், நாதமே ஆகிய இயற்கையினாலும் பிறப்பது; ஆதலால் அகரத்திற்குத்தலைமையும், அதுபோலச் செயற்கை அறி வினாலும் இயற்கை அறிவினாலும் முற்றும் அறிவதி னாலே, ஆதிபகவனுக்குத்தலைமையும் காண்க. இந்த உவமை, தலைமைபற்றி வந்த எடுத்துக்காட்டு உவமை. உதாரணமாக எடுத்துக்காட்டி உவமிப்பது எடுத்துக் காட்டு உவமை எனக்காண்க. தமிழ் எழுத்துக்கே அல்லாமல், வடஎழுத்துக்கும் அகரம் முதலாகிறதைக் குறித்து எழுத்தெல்லாம் அகரமுதல என்றார். உலகு என்றது, இங்கே உயிர்களைக் காட்டி நின்றது. காணப் பட்ட உலகினாலே காணப்படாத கடவுளின் உண்மை சொல்ல வேண்டியதால் 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்று உலகின்மேல் வைத்துச் சொன்னார். அப்படிச் சொன்னாரானாலும், உலகுக்கு முதல் ஆதிபகவன் என் பது கருத்தாகக் கொள்க. ஏகாரம் தெளிவுப் பொருளிலே வந்தது. இந்தக் குறளாலே முதற்கடவுளது உண்மை சொல்லப்பட்டது.

ஊ) *கவிராசர்:* எழுத்துக்களுக்கு எல்லாம் அகர எழுத்து முதலாய் இருப்பதுபோல உலகத்துக்கு எல்லாம் சருவக்கியனான சுவாமியே[5] முதல்.

எ) *பழைய* |: அகர முதலாகிய உயிர் எழுத்துப் பன்னி ரண்டும் உடல் எழுத்துப் பதினெட்டினும் பொருந்த எச் சமயப் புராணத்தினும், எச்சாத்திரத்தினும் விளங்குவது

1 தொல். சொல். 440 2 கோவை 71 3 குறள் 11
4 குறள் 334 5 சருவக்கியனானசுவாமி- முற்றும் உணர்ந்த கடவுள்.

போல, சகல சீவாத்துமாக்களுக்கும் சீவசீவனாய்[1] இருக்கப் பட்டவன் ஆதிபரமேசுரன் ஆதலால் அவனே தெய்வம்.

ஏ) *பழைய 2:* அகரம் ஆகிய முதலை உடைய எழுத்துக் கள் எல்லாம்; அதுபோல ஆதிபகவன் ஆகிய முதலை உடைத்து உலகம்.

*மல்லர்:* என்பது எல்லா எழுத்துக்களுக்கும் 'அ' என்கிற எழுத்து தலையாய் இருக்கிறது. சகல லோகத்திற்கும் கட வுளே தலை என்றவாறு.

'அ' என்கிற எழுத்து வேறு எழுத்துக்களின் உதவி யில்லாமல் உச்சரிக்கப்படும். 'அ' எழுத்தை உச்சரிக்க அவ காசம் இல்லாமற் போனால் வேறு எந்த எழுத்தையும் உச்ச ரிக்க முடியாது. அதுபோலக் கடவுள் வேறொருத்தனுடைய உதவியால் உண்டாகாமலும், தானாகவே இருக்கிறதும் தவிர, அவர் இல்லாது போனால் உலகத்திலே ஒன்றும் உண்டாயிருக்கமாட்டாது என்பதால் அகரத்தைக் கடவுளுக்கு உவமையாக்கி, அது சகல எழுத்துக்களுக்கும் முதலாய் இருக் கிறதுபோல, அது எல்லாவுலகிற்கும் முதலாயிருக்கிறது என் கிற லட்சண தோத்திரமாகச் சொன்னதும் அல்லாமல், அவனை வணங்குதற்கு நியாயமும் காட்டியவாறு. ஆதி பகவன்-கடவுள்; உலகு-உலகம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

### 'அகர முதல எழுத்தெல்லாம்'

எல்லா எழுத்துக்களும் அகரத்தை முதலாக உடையன என்பவர்கள் மணக்., பரிமேல், பழைய 1, கா.சு., சொ.த.

'உயிர் எழுத்துப் பன்னிரண்டற்கும் அகரம் முதல்' என்பவர் பரிதி.

'அகரமாகிய எழுத்தின்கண் எல்லா எழுத்துக்களும் சொற்களும், சொற்றொடர்களும் கலைக்ளும் விரிகின்றன' என்பவர் காளி.

'உயிர் எழுத்துப் பன்னிரண்டும் உடல் எழுத்துப் பதினெட்டிலும் பொருந்தி எங்கும் விளங்குகின்றன' என்பது பழைய 1.

---

1 சீவசீவனாய் இருக்கப்பட்டவன்- உயிர்க்கு உயிராய் இருப்பவன்.

'எல்லா எழுத்துக்களும் 'அ' என்னும் எழுத்திலிருந்து தொடங்குகின்றன'—வீரமா.

'உலகத்தில் உள்ள எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை முதலாக உடையன'—சுகாத்.

'உலகத்தில் உள்ள எழுத்துக்கள் எல்லாம் ஆதி அகரத்தை முதலாக உடையன'—திரு.வி.க.

'எழுத்துக்கள் எல்லாம் 'அ' என்னும் எழுத்திலிருந்து ஆரம்பம் ஆகின்றன'—இராமா.

'எல்லா எழுத்துக்களும் ஒலிவடிவிலும் வரிவடிவிலும் அகரத்தை முதலாக உடையன'—மு.ரா.அரு.

'எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன'—மு.வ.

'எழுத்துக்கள் எல்லாம் 'அ' என்ற எழுத்தை மூலமுதல் அடிப்படை எழுத்தாகக்கொண்டு நடைபெறுகின்றன'—கா.அ.

'பலவேறு வடிவங்களுடன் எழுதப்பெறும் பல மொழி களில் உள்ள 'அ' என்னும் எழுத்து ஒலி உருவில் ஒன்றே ஆகும்'—மு.கோ,

இவருள் 'எழுத்தெல்லாம் அகரத்தை முதலாக உடையன' என 'எழுத்தெல்லாம்' என்பதை எழுவாயாக்கி யும் அகரமாகிய முதலை உடையன என அகரத்தைச் செயப்படு பொருளாக்கியும் உரை கூறினார் பலராவர்.

எழுத்துக்களுக்கு எல்லாம் அகரமுதல் என நான்கன் உருபு விரித்துப் பொருள் காண்பவர் கவிராசர்.

எழுத்துக்கள் எல்லாம் எனக் கொள்ளாது எழுத்துக் களுக்கு எல்லாம் அகரம் முதல எனின், அகர ஒலி பலவாகா மையான் அகரம் என்ற ஒருமை எழுவாய் 'முதல' என்ற பன்மைப்பயனிலை கொண்ட வழு ஆகும். பல்வேறு மொழி களிலுள்ள பல எழுத்துக்களுக்கு எல்லாம் எனக் கொள்ளினும் ஒலிஅகரம் ஒன்றே ஆதலால் அதுவும் முற்கூறிய வழுவாகும். அதனாலேயே பரிமேல் 'எழுத்துக்களுக்கு எல்லாம் அகரம் முதலாம் என்பது கருத்தாகக் கொள்க' என்றனர்.

அகரம் பால்பகா அஃறிணைப் பெயராதலின் பாற் பொதுமையிற் கொண்டு எழுத்துக்கள் எல்லாம் அகரமாகிய முதலையுடையன என்பதே பொருந்துவதாகும். மக்கட்கு இறை என்று வைக்கப்படுமாறுபோல எழுத்துக்களுக்கு

எல்லாம் அகர முதல என்றல் தாமேபோதரும் என்பதையே பரிமேலழகர், 'கருத்தாகக் கொள்க' என்றனர்.

'உயிர் எழுத்துப்பன்னிரண்டுக்கும் அகரம்' என்ற பரிதி கருத்தோ அங்காந்து கூறும் நுட்ப ஒலிக்கலப்பாலன்றி உருக்கொள்ளாத மெய் எழுத்துக்களுக்கு அகர முதலாகாதோ என்ற குறையுண்டாம். ஆதலால் இவ்வுரையும் சிந்திக்கத் தக்கதொன்றாம்.

பழைய 1, கருத்தாகிய பன்னீருயிரும் பதினெட்டு மெய்யின்மேல் இயங்குதல் இயல்பே ஆதலால், அது சிறப்புத் தருவதாகாமல், வள்ளுவர் கருத்தன்றாய் முடியும்.

'முதல' என்பதற்கு முதலாக உடையன எனப் பொது மையில் பொருள்கூறின், அகரம் இடத்தான் முதற்கண் நிற்றலைப் பற்றிக் கூறுகின்றார்களா? குடம் தோன்று வதற்கு மண் முதற்காரணம் ஆதல் போல எழுத்துக்கள் தோன்றுவதற்கு அகரம் முதற் காரணமாய் இருப்பதைக் குறித்துக் கூறுகின்றார்களா? அல்லது இரண்டையும் தான் கருதுகின்றார்களா? என்பது அறியக்கூடாமை காண்க. ஆதலால் 'அடிப்படையாக் கொண்டு என்பாரும்' மூல முதலை அடிப்படையாகக் கொண்டு என்பாரும் தருகின்ற விளக்கம் மிகச்சிறந்தன ஆகும்.

'அ' என்னும் எழுத்து ஒலி உருவில் பலமொழிகளிலும் ஒன்றே ஆகும் எனின் இதனால் முதல் வைத்து எண்ணப்படும் சிறப்பேயன்றி எல்லா எழுத்துக்களும் தோன்றுதற்கு அடிப் படையாதல் ஆகிய சிறப்புத் தோன்றாமை காண்க.

உலகு ஒலியுலகும் பொருள் உலகும் என இருவகைப் படும். ஒலியுலகு அகரம் முதலான எழுத்துக்களும், அவற் றான் ஆய சொற்களும், சொற்களான் ஆய நூற்பரப்புக் களும் ஆம்.

பொருள் உலகு உயிர் உள்ளனவும், இல்லனவும் ஆக விரிந்து பரந்து கிடக்கும் அறிவுடையனவும் இல்லாதனவும் ஆகிய இருவகையுமாம்.

ஒலியுலகைச் சத்தப் பிரபஞ்சம் எனவும், பொருள் உலகை அத்தப் பிரபஞ்சம் எனவும் கூறுவர் வடநூலார்.

ஒலியுலகு அனைத்திற்கும் அகரம் முதலாம் இக்கருத்தை ''அக்கரங்கள் இன்றாம் அகரவுயிரின்றேல் இக்கிரமத்து

என்னும் இருக்கு'' (சிவஞான.சூ.2 அதி.1) என்னும் மேற்கோள்வெண்பாவின் பகுதியும் 'மெய்கள் அகரமொடு சிவணி அன்றி இயங்காமையானும், இகர ஈகார உகர ஊகா ரங்கள் அகரத்திற்குரிய அங்காப்பு முயற்சியோடு சிவணி அன்றிப் பிறவாமையானும், ஏகார ஓகார முதலாயின முன் அகரக்கூறும் பின் இகர உகரக்கூறுகளுமாய் இயைந்தன்றிப் பிறவாமையானும் அவற்றிற்கெல்லாம் அகரமாகிய உயிர் இன்றியமையாமை பெற்றாம். அதுபோலப் பிரமம் இல்லை யாயின் ஒரு பொருளும் இல்லை என்றதூஉம் பெறப்படும்'' என்ற பேருரைப்பகுதியும் முதற்குறட்கருத்தை விளக்குதல் காண்க. இருவகை உலகிற்கும் ஆதிபகவனே முதலாயினும், முதற்பொருள் உண்மையைச் சாதிக்க இறைவனைத் தவிர்த்த வேறுபொருள் இன்மையான், அவன் படைப்பாகிய ஒலியுலகில் எழுத்துக்களுக்கு அகரம் முதலாதலைக் கொண்டு, உலகிற்குப் பகவன் முதலாதலைச் சாதித்தார் என்பது.

எழுதப்படுதலின் எழுத்தே என்பவாகலின் 'எழுத்து' என்பது எழுதப்பெறும் வரிவடிவிற்கே பெயராயினும், அவ் வரிவடிவைக் கொண்டே அறியப்பெறும் ஒலிவடிவிற்கும் கருவியாகுபெயராயிற்று.

எழுத்து நாதத்தின் காரியமாகிய ஒலியாயும், வரியாயும் எழுவது ஆதலின் தொழிலாகுபெயராம் என்பர் திரு.வி.க. 'இங்ஙனம் கொள்ளின் எழுத்து என்னும் பெயர் ஒலிவடிவு வரிவடிவு இரண்டற்கும் பொருந்துவதாகும் (திரு.வி.க. திருக்குறள் விரிவுரை பகுதி 1. பக். 28). மு. ரா. அரு. கருத்தும் இது.

எழுத்துக்களில் அகரம் நாதமாத்திரையாக அங்காத்த லாகிய முயற்சி ஒன்றானே பிறப்பது. அது ஏனைய உயிர் எழுத்துக்களில் கலந்தவாறு யாங்ஙனம் எனின், உயிரெழுத் துக்களில் இ. உ. என்பவற்றுடன் அகரம் மிக நுண்ணிய ஒலியாகக் கலந்திருக்கிறது. அகரக்கலப்பில்லையாயின் அண்பல் முதல் நாவிளிம்பு உறுதலாலும், இதழ் குவிதலாலும் மட்டும் அவை பிறத்தல் இயலா. அங்ஙனமே அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்திசைத்து எகரமும், அகரக்கூறும் உகரக்கூறும் தம்முள் ஒத்திசைத்து ஒகரமும், அகரக்கூறு மிகுதியும் உகரக்கூறு குறைவுமாகக் கலந்து ஔகாரமும், அங்ஙனமே இகரக்கூறு குறைந்திணைந்து ஐகாரமும் தோன்றுகின்றன. இங்ஙனம் அகரம் ஏனை எழுத்துக்களோடு

கலந்திருக்கின்றது. அரசஞ்சண்முகனார் தமது விருத்தியுரையில் இவற்றை எண்ணியே அகரம் என்றது ஆதிநாதத்தை என்றனர் திரு. வி. க.வும் இக்கருத்தினரே. ஆதிநாதம் என்பது தொல்காப்பியர் கூறிய

அகத்தெழு வளியிசை அரில்தப நாடி,
அளபிற் கோடல் அந்தணர் மறைத்தே

(தொல்-எழுத்து, 102)

என்ற நுண் ஒலியை. இந்த நுண்ஒலி நிலையில் எழுத்தோசைக்கு அடியான ஒலி சூக்குமை, பைசந்தி, மத்திமை என்ற மூவகை நிலையில் செயற்படும். பின்னர் முயற்சியுறுப்புக்களின் முயற்சியால் வேறுவேறு எழுத்தொலியாய்த் தன் செவிக்கு மட்டும் கேட்கும் வைகரியாயும் பிறர்செவிக்கும் கேட்கும் வைகரியாயும் தோன்றி வேறுபட்ட பொருளுணர்விற்கு ஏதுவாய், அதாவது சவிகற்பக்காட்சிக்குத் துணையாய் நிற்கும்.

இவற்றுள் முதல் நிலையாகிய நுண்ணிய நிலை ஒலிவிகற்பம் சிறிதுமின்றி, ஒலிவடிவாய் ஞான மாத்திரைக்கு ஏதுவாய் நிற்கும். இதனைச் "சூக்கும வாக்கது உள் ஓர் சோதியாய்த் தனக்கு அழிவின்றி இருக்கும்" என்பதால் அறியலாம் (சிவஞானசித்தி. 2:1 பா. 23).

அடுத்த ஒலிநிலை பைசந்தி, பைசந்தியாவது பின்னர் விளங்கித் தோன்றுவனவான ஐவகை நிறங்களையும் நுண்ணிதாக ஒடுக்கி நிற்கும் மயில் முட்டையில் உள்ள நீர் போலப் பலவகை எழுத்துக்களாக இந்நிலைக்கு மேலுள்ள மத்திமை நிலையில் பிரிவுபட விளங்கித் தோன்றும் நிலையினை அடக்கிக் கொண்டு, மிகவும் நுண்ணிதாய்ச் சிந்தையில் எண்ண வடிவாய் இருந்து நிருவிகற்பக் காட்சிக்கு ஏதுவாய் நிற்பது. (நிருவிகற்பம் வெவ்வேறு எழுத்தொலியாக உணர முடியாமல் வேறுபாடின்றி இருக்கும் ஒலி).

மத்திமையாவது தன்னுள்ளே உணரும் ஓசையாயும் எழுத்தொலிகளின் வடிவு பிரிந்து தோன்றுவதாயும் உள்ள ஒலி.

இவ்வொலிதான் வைகரியாக வேறுவேறு ஒலியாகத் தனக்கும் பிறர்க்கும் கேட்கக் கூடிய ஒலியாய்ப் பொருள் புலப்பாட்டிற்கு ஏதுவாய் அமைகிறது.[1]

---

1 மொழி இயலார் எழுத்துக்களின் பிறப்பைப்பற்றி வேறு கூறுவர்.

இவற்றில் நுட்பநாதமே ஆதிநாதம். அதுவே ஒளி நிலையிலிருந்து ஒலிக்குழம்பாய், பின் மனத்தான் மட்டும் அறியப்பெறும் வெவ்வேறு ஒலியுணர்வாய்ப் பின்பு, பொருள் புலப்பாட்டிற்கு இன்றியமையாத வெவ்வேறு எழுத்தொலிக ளாய்த் தோன்றுகின்றது. ஆதலின் ஆதிநாதம் என்பது, முதல் நிலையையும், ஆதி அகரம் என்பது மத்திமை நிலையையும் அகரம் தூலமாய எழுத்தொலியையும் குறிப்பதாகும்.

இதனைச் சிந்திக்கவைத்தவர்கள் அரசஞ்சண்முகனாரும் திரு.வி.க.வும் கா.சு.வும் ஆவார்கள். ஆகவே அகர உயிர்க்கு ஏனைய உயிரோடு உயிர்க்கு உயிராகக் கலந்து ஒன்றான நிலையும் மெய் எழுத்துக்களுடன் உடனாய் இருந்து இயக்கும் நிலையும் தன்னளவில் வேறாய் நிற்கும் நிலையும் என மூன்று நிலைகள் குறிப்பிடப்படுகின்றன. இவை மூன்றும் அகரம் முதலாதற்குரிய காரணங்கள். இதனாலேயே அகரம் இறைவனுக்கு ஒப்பாயிற்று. ஏனைய எழுத்துக்கள் உலகிற்கு ஒப்பாயின. இங்ஙனம் உணர்தலே உலகின் கடமையும் இன்றியமையாமையும் என்பர். 'எழுத்தெல்லாம் அகரமுதல' என எழுத்தின்மேல் வைத்தும், உலகு ஆதிபகவன் முதற்று என உலகின்மேல்வைத்தும் ஓதிய வள்ளுவருடைய உண்மைக் கருத்தை உணர்தல் வேண்டும்.

'ஆதிபகவன்'

ஆதிபகவன் என மணக்குடவரும், பரிதி, பரிமேல், பழைய 2ம் கூறுவர். மூலகாரணமாகிய இறைவன் என்பர் காளி. ஆதிபரமேசுரன் என்பது பழைய 1. சருவக்கியனான சுவாமி என்பர் கவிராசர். 'கடவுள்' என வாளா கூறுவர் வீரமா. மு. வ. 'மாதொரு பாகனாகிய தலைவன்'—கா.சு. 'முழுமுதற் கடவுள்'—திரு. வி. க. 'எல்லாவற்றிற்கும் முற் பட்ட கடவுள்'—சொ. த. 'உண்டாக்கியவன்'—இராம. 'முதன்மையான குணத்தை உடையவன்—குழந்தை. ஆதி என்று சிறப்பிக்கப்படுகின்ற முதல் உலககுரு'—கா. அ. 'முதற் பகவன்'—தேவநேயர்.[1] 'பரமேசுவரன்' 'மாதொரு பாகன்' என்பன சமயச்சார்பு உடையன. 'சருவக்கியனான சுவாமி' என்பதோ முற்றும் உணர்ந்தவன் என்ற பொதுமைப் பொருளை உடையதாயின் சமயக்கணக்கர் மதிவழி புகாத வள்ளுவருடைய கருத்துக்கு ஏற்புடையதாகும். சருவக்கியன் என்பது காரண இடுகுறிப் பெயராய் அருகனை உணர்த்து

1 மணிவிளக்கஉரை,கா. அப்பாத்துரையார், பக் 180

வது எனின் அது சமயச்சார்பால் வந்தது எனப்படும். 'முழு முதற் கடவுள்' 'முற்பட்டகடவுள்' 'முதற்பகவன்' என்பன கடவுளின் இயல்பை அறிவிப்பனவாய்க், கடவுளின் முதன் மையைச் சுட்டுவனவாய் வள்ளுவர் கருத்துக்கு ஏற்புடையன.

இவையன்றி வள்ளுவருடைய தாய்தந்தையரைக் குறிக் கும் என்பாரும் சூடாமணி, பிங்கலந்தை நிகண்டு, சூளாமணி, சிலம்பு ஆகிய நூல்களின் துணைக்கொண்டு அருகனைக் குறிக்கும் என்பாருமாகப்[1] பலர் உளர்.

'ஆதிபகவன்' என்ற தொகைநிலை 'கடவுள் உருவி னனாய முதல் உலககுரு' என்று பொருள்படும் என்பர் திரு.வி.க., கா. அ. ஆகியோர். இதன் விளக்கமாகத் தத்தம் சிறப்புரையில் வெவ்வேறு கருத்துக்களைத் தருகின்றனர்.

தம் வரலாறு கூறவந்தவர் அல்லர் வள்ளுவர். ஆதலால் தாய் தந்தையரைக் கூறினார் என்பது சிறிதும் ஒவ்வாது.

புலவர் குழந்தை உரை, பகவு அன் எனச் சொற்களைப் பிரித்து 'முதன்மையான குணத்தை உடையவன்' என்று பொருள் தரும் தமிழ்ச்சொல் என்பர். 'இவைகள் யாவும் நேரே சொற்பொருள் ஆகா. பகுதிப்பொருளைக் காணும் வகையில் பலசொற்களைக் கொண்டு கூட்டுதலால் வந்த பொருளாகும். ஆகவே மணக்குடவர், பரிமேலழகர், காளிங்கர், திரு.வி.க., கா.சு. ஆகியோரின் இணைந்த கருத்துப்பொருளே சிறந்தது.

பகவு + அன்—பகவன். பகலன் பகலவன் என்பதன் திரிபு. அது பகுத்தறிவுடையவனைக் காட்டும் என்பர் பிற்கால ஆய்வாளருள் சிலர். கதிரவனைக் காட்டும் என்பர் சிலர். இவை அனைத்தும் அப்பாத்துரையார் மணிவிளக்க உரை யில்[2] கண்ட கருத்துக்கள்.

இவற்றுள் எல்லையற்ற பரம் பொருளாகிய செம் பொருளைக் குறிக்கும் என்பதே வள்ளுவர் கருத்துக்கு ஏற்ற சிறந்த உரை ஆகும்.

'ஆதி ஆகிய பகவன்' — கடவுளாகிய ஒரு பொருட்கண் இருபெயர்ப்பட வந்தது என்பர் இளம்பூரணர். ஆதி ஆகிய பகவன் எனப் பிரித்து, இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூல் முடிபு என்பர் பரிமேலழகர் முதலாயினார்.

---

1 திருக்குறள் விரிவுரை, திரு.வி.கலியாணசுந்தரனார், ப. 37

2 மணிவிளக்கஉரை 1, கா. அப்பாத்துரையார், பக், 211—212

'ஆதி' 'பகவன்' என்பன ஆரியச்சொல்லே ஆயினும் ஆக்கம் பெற்று வடசொல் ஆனபிறகு ஆரிய விதியே பெற வேண்டும் என்ற இன்றியமையாமை இல்லை. ஆகவே 'ஆதியாகிய பகவன்' முதல்வனாகிய பகவனைக்குறிப்பதால்,

உயிரீறு ஆகிய உயர்திணைப் பெயரும்..........
புள்ளி இறுதி உயர்திணைப் பெயரும்
எல்லாவழியும் இயல்பென மொழிப (தொல். எழுத்து, 153)

என்ற நூற்பாவின்படி இயல்பாயிற்று; வடமொழியில் உயிரீற்றுமுன் வல்லினம் மிகுதற்கோ இயல்பாதற்கோ விதி இன்மையானும் என்க. அப்பாத்துரையார், 'ஆதி என்ற சொல்லுக்குப் பாணினி காலத்தில் அமைக்கப்பட்ட செயற்கை வேர்ச்சொல் கூடக்கிடையாது. ஆரியமொழிக் குழுவைச் சார்ந்த வேற்றுமொழிகளிலும் இச்சொல்லோ இதன் இன மான சொல்லோ கிடையாது. ஆதலால் கருணை, ஆதரவு என்ற பொருளுடைய 'ஆதம்' என்ற சொல்லின் அடியாகப் பிறந்த கருணையை உடையவன் என்ற பொருளைக் குறிக் கின்ற தமிழ்ச்சொல் ஆகலாம்' என்பர்.[1] இதனாலும் இது தமிழ் விதி பெற்றுவந்த தொகைச்சொல்லே ஆம்.

'முதற்று'

'முதற்று' என்பதும் 'முதலு' என்பதும் முதல் என்பதை அடிப்படையாகக் கொண்டுவந்த ஒருமைக் குறிப்பு வினை முற்று. இதற்கும் 'அடிப்படையானது, முதலானது' 'முதலாக உடையது' எனப் பொருள் கொள்ளலாம்.

'முதற்றே' என்பதில் உள்ள ஏகாரத்தை அசைநிலை ஆக்குவர் மணக்குடவர், பரிதியார், காளிங்கர் முதலிய சிலர். தேற்றப்பொருளில் வந்ததாக உரைப்பர் பரிமேலழகர், கா.சு. முதலியோர். தேற்றமும் பிரிநிலையும் ஆம் என்பர் திரு.வி.க.

எல்லா உலகப் பொருள்களுக்கும் மெய்ப்பொருள் முதற் காரணம் என்பர் வ.உ.சி. குடத்திற்குக் குலாலன் போல இறைவன் உலகிற்கு நிமித்த காரணன் என்றே மெய்ப் பொருள்நூல்கள் கூறும். முதற்காரணம் மண்போலக் குட மாகிய காரியம் செல்வுழிச்செல்லும் காரணம். இறைவன் கலந்தநிலையில் பொருள்களுடன் விளங்குதலால் இங்ஙனம் கூறுகின்றனர் போலும்.

---

1 மணிவிளக்க உரை, கா. அப்பாத்துரையார், பக். 175.

வள்ளலாரை நோக்கி ஒருவர் முதற்குறளிலேயே வள்ளுவர் அசைநிலை அமைப்பாரா? என்று கேட்டபோது அவர் முதல் தே எனப்பிரித்துப் பொருள் கொள்க என்றார் என்றொரு கதை உண்டு. அதுவும் இக்குறள் அமைப்போடு ஒத்து நோக்கும்போது மிகைபடக்கூறலாம் என்பர் தேவநேயர். இவற்றுள் ஏகாரத்தை அசைநிலையாக்காது பொருள் உணர்த்தும் இடைச்சொல்லாகக் கோடலே சிறப்புடையது.

'உலகு'

'உலகம்' என்பவர்கள் மணக். பரிதி முதலியோர் 'உலகு என்றது ஈண்டு உயிர்களை' என்பர் பரிமேல். இங்ஙனம் உரை எழுதியவர் சிறப்புக் குறிப்பில் 'காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூற வேண்டுதலின்' என ஒரு விளக்கம் தந்தார். அதனை ஒட்டி வெள்ளியம்பலவாணர் 'உயிர்காணப்படுமாறு யாங்ஙனம்? என வினவிப் பரிமேலழகர் மாறுபட உரைகண்டனர் என்பர்[1]. காரிரத்ன கவிராயரும் இராமாநுசகவிராயரும் காணப்படுதல் என்பது உடம்போடு கூடிக் காணப்படுதலே என்று அமைதி காட்டி அதற்கு ஆட்சியும் காட்டுவர்.

எடுத்துக்காட்டு உவமை:

இக்குறட்பாவில் 'அதுபோல' என்ற சொல் எஞ்சி நிற்றலால் தலைமை பற்றி வந்த எடுத்துக்காட்டுவமை என்பர் பரிமேலழகர். இசைஎச்சம் என்பர் சேனாவரையர். பரிமேலழகர் உரைப்போக்கு உவமை அணியா? உவமை அளவையா என்பதை விளக்கிற்றிலது.

பொதுவகையில் உவமை என்பது சிறப்பு, நலன், காதல், வலி என்ற காரணங்கள் நான்கில் ஒன்றை நிலைக்களனாக் கொண்டு, ஒரு பொருளை ஒரு பொருளோடு ஒப்பித்து உரைப்பதாம். இதற்கு உவமிக்கும் பொருளாகிய உவமானமும், உவமிக்கப்படும் பொருளாகிய உவமேயமும் உவம உருபும் பொதுத்தன்மையும் ஆகிய நான்கு உறுப்புப்பெற்றும், பொதுத்தன்மை தொக மூன்றுறுப்புப் பெற்றும், உருபும் பொதுத்தன்மையும் தொக இரண்டு உறுப்புப் பெற்றும் இயலும் என்பது இலக்கணம். இதனால் உவமை அணிக்கு உவமமும் பொருளும் ஆகிய இரண்டுறுப்புக்கள் இன்றியமையாதன என்பது பெறப்படும். இங்ஙனம், கூறிய இலக்கணங்

[1] முத்திநிச்சயப்பேருரை, பக். 29.

களுள் சிறிதும் பெரிதும் வேறுபட்டு வருவன அனைத்தும் வேறுபட வந்த உவமங்களாம். இதன் வளர்ச்சியும் பெருக்க முமே ஏனைய அணிவகைகள் எனலாம். அவற்றுள் எடுத்துக் காட்டுவமையாவது உவமானத்தையும் உவமேயத்தையும் வேறுவேறு வாக்கியமாக நிறுத்தி, இது உவமானம் இது உவமேயம் என்பது தோன்ற இடையில் 'அதுபோல' என்னும் உவமஉருபு கொடாமலே கூறுவதாம் என்று விளக்கந் தருவர் கோ.வ. (திருக்குறள் அறம். ப.8).

தண்டியலங்காரம் எடுத்துக்காட்டுவமை என்ற ஒன்றை உவமை வகையில் குறித்திலது.

மாறனலங்கார ஆசிரியர் குறை உவமம் என்ற ஒன்றைக் கூறி உவமக்கூறுபாடுகளாகிய வினை பயன் மெய் உரு என்ற நான்கனுள் ஒன்றோடு ஒன்றோ, இரண்டோ, மூன்றோ குறைந்து வருவது என்றும் 'அகரமுதல' என்ற குறள் மூன்று குறைந்து ஒன்று ஒத்து வந்த குறை உவமம் என்றும்; ஆகவே எடுத்துக்காட்டு உவமையாம் எனவும் கூறுவர் (மாறன், 96—உரை). இதனை லுப்த உவமை என்பர் வட நூலார். இலக்கண விளக்க உரையாசிரியர் மறுபொருள் உவமையைப்பற்றி விளக்குமிடத்து,

ஓதிய பொருள் தனக்கு ஒப்பதோர் பொருட்பின்
நீதியின் நிறீஇய மறுபொருள் உவமை நூ 640—உரை.

என்ற பகுதிக்கு எழுதும் உரையில் 'அகரமுதல' என்ற குறளை எடுத்துக்காட்டி உவமானமும் உவமேயமும் தனித் தனி வாக்கியங்களாக அமைய உவமஉருபு வராமல் இருப்ப தால் எடுத்துக்காட்டுவமை என்பர். இவர் கருத்தின்படி மறுபொருள் உவமை உவமஉருபு பெற்றுவருவது. எடுத்துக் காட்டுவமை உவமஉருபு பெறாமலே வருவது. வீரசோழியத் தில் இது எதிர்பொருள் உவமை என வழங்கப்பெறுகிறது.

இதுபொருள் உவமையின்று இது பொருள் தனிமையின்
இதுவே நன்றெனின் எதிர்பொருள் உவமை (வீர. உரை 54)

உவம உருபு இல்லாமல் பொருளையும் உவமையையும் எதிர் எதிராக நிறுத்துவது எடுத்துக்காட்டுவமை என்று விளக்குகின்றார். அதற்கு மேற்கோளாக,

நின்ஒக்கும் மன்னர் உளரல்லர் கற்பகம்
தன்ஒக்கும் பாதவம் இல்

என்பதைக்காட்டுவர். இச்செய்யுள் 'அகரமுதல' என்பது போன்றிருத்தல் காண்க. தொன்னூல் விளக்கம்

மறுபொருளாம் பொருள் வந்து ஒப்பு உரைத்தலே (நூ. 333)

எனவும், முத்துவீரியம்,

ஒருபொருட்கு ஒருபொருள் உவமையாக
எடுத்துக்காட்டுவது எடுத்துக்காட்டுஉவமை -பொருள். நூ. 1189

என்வும் கூறும். இத்தகைய வளர்ச்சிமுறைக்கு வித்திட்டது வேறுபட வந்த உவமத்தோற்றம் என்ற தொல்காப்பியப் பகுதியும் அதற்குப் பேராசிரியர் தந்த விளக்கமும் ஆம்.

திராவிடப்பிரகாசிகை ஆசிரியர் எடுத்துக்காட்டுவமையை வடநூலார் நிதர்சன அலங்காரம் என்பர் என்று கூறி, உவமைஅணிக்கும் நிதரிசனஅலங்காரத்திற்கும் உள்ள வேறுபாடு உவமான உவமேயங்கள் பொதுத்தன்மை உவம உருபு பற்றிப் பேதநெறியான் வெளிப்படையாகக் கூறுவது உவமை அணி எனவும் அபேதநெறியின் குறிப்பான் உணரவைப்பது நிதரிசனம் எனவும் கூறுவர். ஆகவே இவர் கருத்தின்படி, நிதரிசன அணிக்கும் எடுத்துக்காட்டுவமைக்கும் உள்ள வேறுபாடு இது என்க (திராவிடப் பிரகாசிகை பக்கம் 249-251). இங்ஙனம் பல நுட்பங்களைக் கூறி எடுத்துக்காட்டுவமை சிறத்தலின் இவர் கருத்தும் உவம அளவை என்பதேயாம் அதனை உவமஅளவை பற்றி முதற் கடவுளது உண்மையைச் சாதித்தார் என்பர்.

இதனையே அளவை வகைகளில் ஒன்றாகத் தருக்க நூல்கள் சொல்லும். உவம அளவையும் உவம அணியும் இலக்கணவகையால் ஒன்றுபோற் காணப்பெறினும், பயன் வகையில் பெரிதும் வேறுபாடுடையன.

அணிகள் பொருளொடு என்றும் உடனிருப்பதாய், அழகு செய்வன. அளவை அளந்தறியும்வரை பயன்பட்டுப் பின்னர்த் தேவைப்படாதன.

இக்குறளில், முதற்கடவுளின் உண்மையைச் சாதிக்கும் அளவிலே 'எழுத்தெல்லாம் அகரம் முதல' என்பது உபகாரப் படுகிறது, ஈண்டு ஆதிபகவற்கும்-ஆதியகரமாகிய அளவைக்கும் உள்ள இயைபு முதன்மை ஒன்றுதான், ஆனால் அந்த முதன்மை அகரத்திற்குத் தானே நிற்றலும், மெய்களைச் சார்ந்து இயக்குதலும், ஏனைய உயிரெழுத்துக்களுடன் கலந்து ஒன்றாயே நிற்றலும் என முத்திறத்தான் விளங்குதல்

போல இறைவற்கும் உண்டெனச் சாதிக்கின்ற வரை பயன் படுதலைக் காண்கிறோம். இவற்றை நச்சினார்க்கினியரும் நன்னூல் விருத்தியுரையாசிரியரும், முதற்சூத்திரவிருத்தியில் சிவஞான சுவாமிகளும், திராவிடப்பிரகாசிகையில் சபாபதி நாவலரும் விளக்குகின்றனர் என்பதை முன்னரே குறித்தாம். மற்றும், உவம அணியில் உவமத்திற்கும் பொருளுக்கும் ஒத்ததன்மை வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் ஒன்றால் இரண்டிடத்து ஒத்து விளங்கும். 'மதிமுகம்' 'புலி போலப் பாய்ந்தான்' 'பவளவாய்' என்பவற்றுள் ஒளியும் அழகும் உடைமை, செயல்ஒற்றுமை, நிறஒற்றுமை ஆகிய ஏதோ ஒன்றான் ஒத்த தன்மை உவமமும் பொருளும் ஆகிய ஈரிடத்தும் விளங்கும். அவை போல்வதன்று உவம அளவை. ஓரளவு சார்த்தியளக்கச் சாதனமாயிருந்தாற் போதும்.

ஈண்டு முதலாயிருப்பதாலும், அடிப்படையாயிருப்ப தாலும் கடவுளும் அகரமும் ஒத்தனவாயினும், கடவுள் உல கிற்கு நிமித்த காரணனேயன்றி முதற் காரணம் ஆகான்.

நிமித்த காரணன் முதற்காரணத்திலிருந்து காரியத்தைத் தோற்றுவிப்பவன். மண்ணாகிய முதற்காரணத்திலிருந்து குடமுதலியன காரியங்கள் தோன்ற வினைமுதலாய் இருக்கும் குலாலன் போல. ஆகவே இறைவன் முதன்மை காரியப் படுத்துகிற அளவே.

அகரத்தின் முதன்மை, முதல் எழுத்தாதலும், உயிருடன் கலந்து விளங்குதலும், மெய்யெழுத்துக்களைச் சார்ந்து நின்று இயக்குதலுமாகிய முத்திறத்தான் தனித் தனியான முதன்மையாய் குடம் செல்லும்வழி மண்செல்வது போல இருக்கும் முதன்மை. ஆதலால், உலகைப்படைக்கும் வினைமுதலாய் உலகப் படைப்பனைத்தினும் ஒருசேர உள்ளும் புறம்புமாகக் கலந்து நிற்கிற இறைவன் முதன் மைக்கு ஓரளவு ஒப்பாகுமேயன்றி முழுதும் ஒவ்வாது. ஆத லாலே உவமையணி என்னாது பரிமேலழகரும், உவமம் என்றனர். சபாபதி நாவலர் உவம அளவை என்றனர் என்க.

மேலும் அணியெனக் கொள்ளுதலால் வரும் இழுக் கென்னையோ எனின், வள்ளுவனார் இறைவனைத் 'தனக்கு உவமையில்லாதான்' எனப் பிற்கூறுதலும் அதற்கு உரையாசிரியர்கள் ஒருவாற்றானும் தனக்கு உவமையாக ஒரு பொருளும் இல்லாதவன் எனக்கூறுதலும் பயனில் கூற்றாய் முடியுமாறும் காண்க.

'ஒருவாற்றானும் உவமையில்லாத முதற்பொருளை உவமையளவையான் அறிந்து கண்ட குற்றந்தங்காதோ என்னின், ஆகாது; அளவையால் அளக்கப்படும் பொருள் அளக்கப்பட்ட அளவு அறியப்படுவதுபோல, எல்லையிலாப் பரம்பொருளாகிய இறைவன் ஒருவன் உளன் என்று துணியப் பெறுமளவு அவனுடைய முதன்மை அளக்கப் பெறுவதன்றி முழுதும் அளக்கப்படாமையும் காண்க.

அரசஞ்சண்முகனார், பரிமேலழகருரையைக் காண்டிகை யுரையாகக் கொண்டு 40 அதிகாரங்கட்கு விருத்தியுரை எழுதி யிருக்கலாம். அதில் முதற்குறளுக்கு எழுதிய விருத்தியிற் கண்ட உரைச்சிறப்புக்கள் சில:-

1. குறள் முறை வைப்புக்களை உரையாசிரியர்கள் தாம்தாம் விரும்பின வண்ணம் மாற்றியது ஆசிரியர் வள்ளுவனார் கருத் திற்கு ஏற்றதன்று[1] (அர—சண்—விருத்தி பக். 4-10)

2. பாயிரம் ஏனைய நூல்களைப் போல நூற்குப்புறமாய் புற னுரையாய்த் தந்துரைக்கப் பெறாமல், நூல் நுதலிய பொரு ளில் அறத்தின் பகுதியாகவே முடிதலின், பிறராற் கூறப் படாவிடினும் நூலின் அகத்துறுப்பாகவும் ஆசிரியராலேயே கூறப்பட்டன.[2]

3. கடவுள் வாழ்த்து - கடவுளை வாழ்த்துதலாகிய ஒழுக்கம்.

4. கடவுள்—சார்பினாற்றோன்றாது, தான் அருவாய், எப் பொருட்கும் சார்பாய் நின்று பிற எல்லாம் கடந்த பொருள், கட-பகுதி. உள்-விகுதி, இயவுள் என்பது போல வினைமுதற் பொருண்மைக்கண் வந்தது. அதிகாரம்—இடம். கடவுள் வாழ்த்து. கடவுளை வாழ்த்துக என அறம் உரைக்கும் இடம் என்க.

5. பரிமேலழகர் உரைப்பாயிரத்தில் அறமாவது மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழி தலும் ஆம் என்றாரேனும், அந்நூல்கள் ஓதியவற்றுள் அக் காலத்திற்கு ஏலாதன ஒழித்தும், அவற்றுள் சொல்லப் படாமலிருப்பினும் காலத்திற்கு ஏற்பனவற்றைக் கொண்டும் ஒழுகுக என்பதே உலகநடையை அறிந்து ஒழுகுக என்ற

---

1 பரிமேலழகர் உரையிற்கண்ட குறள் முறை வைப்பே வள்ளுவர் கருத் தென்பது அரசஞ்சண்முகனார் கருத்துப்போலும்.

2 பாயிரம் அறத்தின் அகவுறுப்பாய் வள்ளுவரால் படைக்கப் பெற்றது என் பதே அரசஞ்சண்முகனார் கருத்து.

வள்ளுவர் கருத்து. அதற்கியைய ஒழுகுக என்பது பரிமேலழ கர்க்கும் உடன்பாடாதல் காண்க என்பது.

6. 'வழக்கும் தண்டமும் உலகநெறி நிறுத்துதற் பயத்த வாவதல்லது ஒழுக்கம் போல மக்கள் உயிர்க்கு உறுதி பயத் தற் சிறப்பில; அதனால் அவற்றை ஒழித்தார்' என்பது ஏலா மைக்கு தேவர் கோட்டத்தின் சொத்துக்களைக் கவர்ந்தான் ஒருவனைப் பற்றி அரசற்கு அறிவித்து வழக்குத் தொடுத்தல் போல்வன பேரறச் செயலாகிய ஒழுக்கமே. அங்ஙனம் உணர்த் தாவழிப் பெருந்தீங்கு விளைதலானும் அவனை முறைகாக்கத் தண்டித்தலும், மக்கள் அல்லற்பட்டாற்றாது அழாவண்ணம் காத்தற்காக செல்வங்குவிப்பாரைத்தண்டித்தலும் தண்டமாய் அறம் விளைவிப்பனவே. ஆகவே வழக்குந்தண்டமும் உலக நடைக்கு உதவலின் அவற்றை வள்ளுவர் ஒழித்தாரல்லர்; பொருட்பாலில் கூறினார் என்பது(பக்.12).

7. வருணத்திற்கும் நிலைக்கும் ஓதப்பட்ட சிறுபான்மை யாகிய சிறப்பியல் ஒழித்தார் வள்ளுவர் என்பது பொருந் தாமை:-

ஒழுக்கமுடைமை முதலிய அதிகாரத்துள் 'மறப்பினும் ஓத்துக் கொளலாகும்'போன்ற பாவால் வெளிப்படையாகவும் ஏனைய அதிகாரத்துட் குறிப்பாகவும் கூறுகிறார் என்பது.

8. இங்ஙனம் வழக்கும் தண்டமும் பொருட்பாலில் அடங்கக் கூறுதலும், பிரமசரியம் முதலிய நால்வகை நிலைகளை இன்னிலை—துறவுநிலை என இரண்டில் அடக்குதலும் தமிழ் மரபு ஆதலால் ஆசிரியர் தமிழ் வழக்குப் பற்றியே இந்நூலை ஆக்கினார் என்க.

9. இல்லறவியலை முன்னோதக் காரணம் கற்புடைய மனைவியோடு செய்யப்படுவதாலன்று:-

அன்பின்றி இல்லறமும், அருளின்றித் துறவறமும் நிகழா. அருள் அன்பின் குழவி. ஆதலால் இல்லறமே துறவறத்திற் குக் காரணம். காரண—காரியமுறைப்படி இல்லறம் முன்னும் துறவறம் பின்னுமாக ஓதப்பட்டதன்றிக் கற்புடை மனைவி யோடும் செய்யப்படுங் காரணத்தாலன்று.

10. துணையோடும் செய்யப்படுதலின் இல்லறம் சிறந்தது; முதலாதற்கு ஏற்றது என்பதன் பொருந்தாமை:—

துறவுள் அடங்குவதாய் அதன் முதனிலையான வானப் பிரத்தமும் துணையோடு இயற்றப்படுதல் உண்டு. ஆதலின்

அதுவும் முதலாதல் கூடும். ஆதலால் துணையோடியற்றப் படுதல் முதலாதற்குக் காரணம் ஆகாது.

11. எடுத்துக்கொண்ட இலக்கியம் இனிது முடிதற் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறினார் என்றல் சாலாது;

இருவகையறமும் கூறுதற்குக் கடவுளை வாழ்த்தும் அறமே சிறந்தது; கடவுளை வாழ்த்தாவழி ஏனைய அறங்கள் பயன்படாமையைக் "கற்றதனாலாய பயனென்?" "மனக் கவலை மாற்றலரிது" "பிறவாழி நீந்தலரிது" என்பவற்றால் உணரலாம்.

12. குணங்களான் உறுதிப் பொருள் மூன்றாம் எனலும், அதனால் கடவுளர் மூவராவார் எனலும் இம்மூவர்க்கும் பொது வகையான் வாழ்த்தினார் எனலும் பொருந்தாமை:

இலக்கியம் முடிதற் பொருட்டு வாழ்த்துதல் மரபாயினும் ஏற்புடைய-அல்லது-வழிபடுகடவுளை ஆசிரியன் மனத்தகத்து வாழ்த்துதல் மரபு. அவ்வழக்கத்தை மாணாக்கரும் பின்பற்றுவார்களாக என்று புறத்தும் வாழ்த்துதல் நியமந்தவறுதல். தொல்காப்பியனார் செய்யுளால் வாழ்த்தாமையும் உணரப் பெறுதலானும், இது ஆசிரியர் கடவுளை வாழ்த்தியதாகாது; கடவுளை வாழ்த்துக என விதித்தவாறாம்.

13. 'அகர முதல' என்னும் இப்பாட்டு:-

1. கடவுள் காட்சி அனுமானங்களால் தானே யுணரும் பொருளன்று 2. வேத விழுப்பொருள் காட்சியானும் அனுமானத்தானும் தாமே யுணர்பொருளுமன்று. ஆகவே நூலளவையால் உணர்ந்ததை அனுமானத்தாலும் தாமே யுணர்பொருளுமன்று. ஆகவே நூலளவையால் உணர்ந்ததை அனுமானத்தாலும் அளந்து காட்டி வலியுறுப்பது இக்குறள்.

14. ஆதிபகவன் என்பதுபோல ஆதி அகரம் எனவும் கூட்டுக. எழுத்தின் வகைகள் யாவும் அகரமாகிய காரணத்தை யுடைய. ஆதி அகரம்—அகரவுயிர்க்கும் உயிராய், கேட்கவும் ஒலிக்கவும் முடியாததாய் நாதமாத்திரையாயஅகத்தெழுஒலி. எழுத்து—தொழிற்பெயர்.

ஆகவே 'ஆதியகரம்' 'ஆதிபகவன்' எனப் பிரித்துச் செவிப் புலனாகா அகரமே எழுத்துக்களுக்கு முதல் என்று முதலிற் கூறியவர் அரசஞ்சண்முகனார். இவரைப் பின்பற்றியே திரு.வி.க. போன்றோர் உணர்த்தி வருகின்றனர் என்பதும் தெளிவு,

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*முற்றும்:*

ஆரும் அறியார் அகரம் அவனென்று —திருமந். 1751
அகர முதலாய் அனைத்துமாய் நிற்கும் —திருமந். 1753
அகர முதலானை அணி ஆப்பனூ ரானை —ஆப்ப. 5, சம்பந்தர் தேவாரம்
ஆனத்து முன் எழுத்தாய் நின்றார் போலும்—சம்பந்தர் தேவாரம்— ஆரூர். 7
அகரம் முதலின் எழுத்தாகி நின்றாய் —சுந்தரர் தேவாரம், நெல், அரத். 7
"அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றேல்" —மெய்கண்டார்— சிவஞானபோதம் சூ 2: பா. 2

அன்றவை பதிதான் ஒன்றென் றறையும்அக் கரங்கள் தோறும்
சென்றிடும் அகரம் போல நின்றனன் சிவனும் சேர்ந்தே சு.பக். 92

அக்கரங்கட்கு எல்லாம் அகர உயிர் நின்றாற்போல்
மிக்கஉயிர்க்கு உயிராய் மேவினோம் —உண்மை விளக்கம், 29

அகர உயிர்போல் அறிவாகி எங்கும்
நிகரில் இறைநிற்கும் நிறைந்து —திருவருட்பா 1

உய்த்திடும் அகாரத்திற்கு முதன்மையாய் ஒழுகுநாதர்
—திருவிளை, சங்கப். 9

*'ஆதிபகவன்'*

செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன் —சிலம்பு 10, 177
ஆதிபெருமானதிடம் —சம்பந்தர் தேவாரம், திருமறைக்காடு, 7
அருத்தனாய ஆதிதேவன்—சம்பந்தர் தேவாரம், நெடுங்களம், 6
முன்னவன் உலகுக்கு அப்பர் தேவாரம், திருமாற்பேறு, 8
அந்தமில் ஆதியம்பகவன்—திருவாய்மொழி 1, 3, 5
ஆதிக்காலத்து அந்தணன்—சீவக. 366
ஆதிநாள் அறக்கதிர் ஆழிதாங்கிய, சோதியான் —சூளா. மந்திர. 147
ஆதிவேதத்துநாதன் —மேருமந். 187
எழுத்துக்கள் அகரத்தை முதலாக உடையன; தீர்த்தங்கரர்கள் ரிஷபதேவரை முதலாக உடையர்—தத்துவார்த்த சூத்திரம்: 11

ஆதிபகவனை அருகனை
மாதுயர் நீங்க வழுத்துவம் பலவே —திருக்கலம்

ஆதிபகவன் அசோகவசலன்
சோதிடமுதல்வன் சினவரன் தியம்பகன் —திருப்பா.

அத்தனை என்னைஆளீர் சரணம்
ஆதிபகவன் அருளே சரணம் —தோத்திரத்திரட்டு

போதுசாந்தம் பொற்பவேந்தி
ஆதிநாதற் சேர்வோர்
சோதிவானந் துன்னுவாரே —யா: கா. மேற்கோள்

ஆதியம் கடவுள் அறவாழி அந்தணன்
அரியணைச் செல்வன் அருளாழி வேந்தன் —திவாகரநிகண்டு.

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*உவமை பற்றி*

1. *பேராசிரியர்:* அகர முதல எழுத்தெல்லாம் அதுபோல என்றானும், ஆதிபகவன் முதற்று உலகம் அதுபோல என்றானும், ஒன்றாகத் துணியுமாற்றான் உவமையும் பொருளும் கூறாமையின் அதுவும் வேறுபடவந்த உவமமாயிற்று.

வேறுபட வருதல் என்பது உவமைக்கும் பொருளுக்கும் ஒப்புமை மாறுபடக்கூறுதல் முதலாக....இரண்டு பொருளானே வெவ்வேறு கூறியவழி ஒன்று ஒன்றற்கு உவமை என்பது கொள்ள வைத்தல் ஈறாக வருவனவும் இவைபோல்வன பிறவும் ஆம் என்பர். இவற்றுள், இது, இரண்டு பொருளானே வெவ்வேறு கூறி ஒன்று ஒன்றற்கு உவமை என்பது கொள்ள வைத்ததாம் (தொல்.பொருள்.307).

2. *காரிரத்தினகவிராயர்:* எடுத்துக்காட்டுவமை எனவும், ஒன்று ஒத்த குறை உவமை எனவும்படும் என்பர் (மாறன் 95 உரை).

3 *திருப்பாற்கடல்நாத கவிராயர்:* ஒருபொருளுக்கு வேறொரு பொருளை உவமையாக எடுத்துக்காட்டியது என்பர் (முத்து வீரியம் 166 உரை).

4. *வைத்தியநாததேசிகர்:* மறுபொருள் உவமைக்குக் காட்டுவர் (இல. விளக்கம் 640 உரை)

*'அகர முதல எழுத்தெல்லாம்'*

1. *நச்சினார்க்கினியர்:*[1] க. 'அகர முதல' என்புழி அகரம் தனி உயிருமாய் அகரம் ஒற்று முதலியவற்றிற்கு உயிருமாய்

---

1 அகரம் தனிநிற்றலும் வேறுநிற்றலும் ஆகிய இரண்டைப்பற்றியே நச்சினார்க்கினியர் கூறுவர். ஆகாரம் முதலிய ஏனை உயிர்எழுத்துக்களோடு நுண்ணிதிற் கலந்து ஒன்றாய் இருக்கும் தன்மை பற்றிக் கூறிற்றிலர் ஆதலின் தனியாகவும், கலந்து ஒன்றாகவும் அகரம் முதலியவற்றோடு வேறாகவும்நிற்கும் மூவகைநிலை உடைத்தென்று கோடும் அவ்வாறாயினன்றித் தனித்தும், ஒன்றாயும், வேறாயும் நிற்கும் இறைவற்கு ஒப்பாகாது என்க.

வேறுநிற்றலின், அவ்அகரம் தனியே நிற்றலானும் பல மெய்க்கண் நின்று அவ்வம் மெய்கட்கு இசைந்த ஓசைகளைப் பயந்தே நிற்றலானும் வேறுபட்டது ஆகலின் 'ஒன்றேயாயும் பலவேயாயும் நிற்பதோர் தன்மை உடைத்து என்று கோடும் என்பர் (தொல். எழு. 8).

உ. இங்ஙனம் மெய்க்கண் அகரம் கலந்து நிற்குமாறு கூறி னாற் போலப் பதினோருயிர்க்கண்ணும் அகரம் கலந்து நிற் கும் என்பது ஆசிரியர் கூறாராயினார், அந்நிலைமை தமக்கே புலப்படுதலானும் பிறர்க்கு இவ்வாறு உணர்த்துதல் அரிதாக லானும் என்று உணர்க. இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்ப முடிந்தாற்போல அகரமும், உயிர்க்கண்ணும் தனிமெய்க் கண்ணும் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்கும் என்பது சான்றோர்க்கு எல்லாம் ஒப்ப முடிந்தது. 'அகர முதல' என்னும் குறளான் அகரமாகிய முதலையுடைய எழுத்துக்கள் எல்லாம் அதுபோல இறைவனாகிய முதலையுடைத்து உல கம் என வள்ளுவனார் உவமை கூறியவாற்றானும், கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே எனக் கூறியவாற் றானும் பிறநூல்களானும் உணர்க என்பர் (தொல். எழு.46).

2. *சங்கர நமச்சிவாயர்*: அகரமுதல என்பதில் ஆகிய என் னும் பண்புருபு தொக்கு வந்தது. (நன். 365)

3. *வீரமாமுனிவர்*: அகர முதல எழுத்தெல்லாம் என்பது அகரம் என்ற மங்கல முதன்மொழியை எடுத்தாண்டது என் பர் (தொன்.விள. 285). இது அகரத்தை மங்கலமொழியாகக் கருதிய பாட்டியல் காலத்திற்குப் பிந்திய கருத்து.

4. *வைத்தியநாத தேசிகர்*: எழுத்தின் முறைவைப்பைப் பற்றிக் கூறுமிடத்து நச்சினார்க்கினியர் எழுதியவற்றை எடுத்துக்காட்டிச் சிறப்புநோக்கி எல்லா எழுத்திற்கும் முன் னர் அகரம் வைக்கப்பட்டது என்பர். (இல. விள. 8)

*இசைஎச்சம் (அதுபோல)*:

1. *சேனாவரையர்*: 'அதுபோல என எஞ்சிய இசைப் பொருள் உணர்த்துதலான் இசை எச்சமாயிற்று. அதுபோல என்பது தொகுக்கும்வழி தொகுத்தலாயின் அதனைச் சுட்டிக் கூறா உவமை எனக் கூறின் அது ஒருமொழிக்கண்ணதாக லானும் இது பலசொல் தொக்கு வருதலானும் ஏலாது என்க (தொல்.சொல்.440). இதனால் சுட்டிக்கூறா உவமத்திற்கும்

இசை எச்சத்திற்கும் வேறுபாடு கூறி, இதனை இசையெச்சம் என வலியுறுத்தவாறு.

இதனை நச்சினார்க்கினியர் சேனாவரையர் இசைஎச்சம் என்ற 'அகரமுதல' என்பதன்கண் 'அதுபோல என விரிந்த உவமைச்சொல் துணியுமாறு விரியாது இரண்டற்கும் பொது வாய் வேறுபட வந்த உவமத்தின்பாற்படுதல் அல்லது இசை யாற் பிறவாமையானும் அவை பொருந்தாமை உணர்க (தொல். சொல்.441) எனச் சேனாவரையரை மறுப்பர்.

2. *வைத்தியநாத தேசிகர்:* சேனாவரையரை ஒத்து இசை எச்சம் என்பர். (இல. விள. 350).

(க)

*1.2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்*[1]
*நற்றா டொழாஅ ரெனின்*[2]

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* மேற்கூறிய எழுத்தினான் ஆகிய சொற்கள் எல்லாம் கற்றதனான் ஆகிய பயன் வேறு யாது? விளங்கின அறிவினை உடையவன் திருவடியைத் தொழாராயின் என்ற வாறு.

'சொல்லினானே பொருள் அறியப்படும் ஆதலான் அதனைக் கற்கவே மெய்யுணர்ந்து வீடு பெறலாகும்'[3] மீண்டும் வணக்கம் கூறியது எற்றுக்கு? என்றார்க்கு இஃது அதனால் பயன் ஈது என்பதூஉம், வேறுவேறு பயனில்லை என்பதூஉம் கூறிற்று. ''கற்பக் கழிமடம் அஃகும்''[4] என்றாரும் உளர்.

*ஆ) பரிதி:* சாத்திரம்[5] கற்றும் அதனால் ஆகிய பயன் என்ன? மேலறிவாளனான[6] சிவன் ஸ்ரீபாதத்தை வணங்கா ராகில் என்றவாறு.

---

1 வாலறிவன் - இயல்பாகவே தூய அறிவை உடையவன். தூய அறிவே வடிவாக உடையவன் எனினும் ஆம். ஐயம் திரிவு இன்றிய ஞானம் என்பாரும் உளர்.

2 தொழாஅர் எனின் - முற்றெச்சம். தொழாஅர் - வினைமுற்று. 'எனின்' என்பது எச்சம். எனின் என்பது வேறு பொருள் கருதாது முற்றை எச்ச மாக்கபயன்பட்டு, இரண்டும் ஒரு சொன்னீர்மையின் நிற்றலின் முற் றெச்ச மாயிற்று

3 கற்பக் கழிமடம் அஃகும்; மெய்யுணர்வு உண்டாம். ஆகவே கற்றான் மீண்டும் வணங்கலின் பயனும் இதுவே என வற்புறுத்தியவாறாம் என்பது கருத்து 4 நான்மணி. 30

5 சாத்திரம் - கடவுள் வழிபாட்டை வற்புறுத்தும் நூல்கள்

6 மேலறிவு - வேறு எவருக்கும் இயையாத மேலான அறிவு

*இ) பரிப்:* (மணக்குடவர் உரையே)

*ஈ) காளி:* பலவகைப்பட்ட கலைகளையும் கற்றதனால் உள்ள பயன் யாது கொல்லோ? மாசற்ற அறிவுருவாகிய இறைவனது தூய அடியினை வணங்காராயின் என்றவாறு.

வாலிமை என்பது வெண்மை; பெருமை என்றும் ஆம்.

*உ) பரிமேல்:* எல்லா நூல்களையும்[1] கற்றவர்க்கு அக்கல்வியறிவானாய பயன் யாது? மெய்யுணர்வினை உடையானது நல்லதாள்களைத் தொழாராயின்.

எவன் என்னும் வினாப்பெயர் என் என்றாய் ஈண்டு இன்மை குறித்து நின்றது. கொல் என்பது அசைநிலை. பிறவிப்பிணிக்கு மருந்து ஆகலின் நற்றாள் என்றார். ஆகம அறிவிற்குப்[2] பயன் அவன் தாளைத் தொழுது பிறவி அறுத்தல் என்பது இதனால் கூறப்பட்டது.

*காரி:* கற்றது[3] 'உடுப்பதூஉம் உண்பதூஉம் இன்றிக் கெடும்'[4] என்பது செயப்படுபொருளாய்க் கல்வி ஆயிற்று 'காலைக்குச் செய்த நன்று என்கொல் எவன்கொல்யான், மாலைக்குச் செய்தபகை'[5] என்புழி எவன்கொல் என்பதனானும் எவன் என்னாகத் திரிந்தது அறிக. மூன்றாவதும், எனின் என் எச்சமும் ஆய என்பதனோடு முடிந்தன. 'என் கடைக்கண்ணினும்''[6] என்னும் கோவையாரும் அது.[7] அவற்றுள், 'பிரிநிலை'[8] என்னும் சூத்திரத்து நச்சினார்க்கினியர் சோற்றைப் பசித்துண்டான் எனக் காட்டியதும் அது.

*இராமாநுசர்:* எவன் என்னும் வினாவினை[9] என் என்று விகாரப்பட்டு, இல்லை என்கிற இன்மைப்பொருள்பட நின்றது.

---

1 எல்லா நூல்களையும் - 'அலகுசால் கற்பின் அறிவு நூலும் உலக நூலும்' ஆகிய அனைத்து நூல்களையும்.

2 ஆகமம் - நூல்கள்; அவை வாலறிவனால் இயற்றப்பட்டு வழிவழியாக வருவன "ஆகமம் என்பன மனு முதலாகிய அறனொடு புணர்ந்த திறனறி நூலே" என்பது தண்டி (சூ. 124) "ஆப்தர்கள் கூறிய சாத்திரம்" (தண்டி. சூ. 124 உரை). ஆகமங்கள் சிறப்புவகையான் கடவுள் வழிபாட்டையே உணர்த்துவன. அவைபடித்தும் அதன்படி ஒழுகாராயின் பயனில்லை என்பது.

3 கற்றது - கற்கப்பட்டது. 4 குறள், 196 5 குறள், 1225

6 திருக்கோவை. 298

7 'கடைக்கண்ணினும் என்னும் வேற்றுமைச் சொல்லும், ஏத்தாவகை என்னும் வினை எச்சமும் கடைக்கண் வைத்த என்னும் வினை கொண்டன' - திருக்கோவை உரை. 8 தொல். சொல். 431

9 பரிமேலழகர் 'எவன்' என்னும் வினாப்பெயர் என்றார். இராமாநுசகவிராயர் 'எவன் என்னும் வினாவினை என்றார்.

ஊ) *கவிராசர்*: ஒருவன் எல்லா நூல்களையும் கற்றாலும், அந் நூல்களினுடைய அர்த்தங்களை அறிந்தாலும் கேவல அறிவினை[1] உடைய சுவாமி பாதங்களைத் தோத்திரம் பண்ணா விட்டால், அவனுக்கு ஒருபலனும் இல்லை.[2]

எ) *பழைய 1*: பல கல்வியைக் கற்றதனாலே பிரயோசனம் என்ன? அந்த ஞானம்[3] பெற்றுப் பரமேசுரனுடைய பாதம் தொழாதவர்க்கு.

ஏ) *பழைய 2*: எல்லா நூல்களையும் கற்ற அக்கல்வி அறிவினான் ஆய பயன் யாது; தூய அறிவை உடையவன் நல்ல பாதங்களைத் தொழாது[4] ஒழிவாராயின்.

*மல்லர் உரை*: என்பது சகல சாத்திரங்களும் படித்திருந் தாலும், சுத்தமான அறிவு உள்ள கடவுளின் நல்ல பாதத்தை வணங்காதே போனால், அக்கல்வியினால் ஆகத்தக்க நன்மை என்ன? எ.று.

ஒருவன் எத்துணை சாஸ்திரியாயிருந்தபோதிலும், ஒரு வகையான மயக்கமும் அற்ற தெளிவான அறிவுள்ள கடவுளை வணங்காதே போனால், அவருடைய உதவியில்லாதபடி யாலே, தான் படித்த சாஸ்திரங்களுக்கு உண்டான மயக்கங் கள் ஒருக்காலும் தெளியமாட்டா. தெளியாதபோது மோட் சத்தையடையமாட்டாமல் நிர்ப்பாக்கியன்ஙவான், படுபாவ வான் ஆவான்; என்பதால் கடவுளை வணங்குதலையில்லா மல்போனால் படிப்பால் நன்மையில்லை என்பது.

கடவுள் பொய்யாத சுத்தமான அறிவையுடையது என் கிற லட்சணத்தைத் திரமாகச் சொன்னதுமன்றியே அவரை வணங்குகிறதற்கு இரண்டாம் ஞாயம் காட்டியவாறு.

கற்றல்-படித்தல், ஆய-ஆகிற, பயன்-பிரயோசனம், என்-என்ன, கொல்-அசைச்சொல், வால்-சுத்தம், அறிவன்-அறிவுடையவன், நற்றாள் - நல்லதாள், தாள் - பாதம், தாடொழாஅர்-தாள்தொழாஅர், எனின்-தொழாதேபோனால்.

---

1 கேவலஅறிவு - ஒப்புயர்வற்ற ஞானம்

2 இவ்வுரையால் கல்வி அறிவு விளக்கமும் பயன்எய்துவது கடவுள் வழி பாட்டால் என்பது குறிக்கப்பெறுகின்றது.

3 அந்த ஞானம் - முடிவாகிய (சித்தாந்த) அறிவு, சுட்டும் ஆம்.

4 தொழுதல் பூசனை செய்தல்

## ஐ) தொகுப்பும் குறிப்பும்

*'கற்றதனால்'*

'மேற்கூறிய எழுத்தினானாகிய சொற்கள் எல்லாம் கற்றதனால்'-*மணக்.*

'சாத்திரம் கற்றும் அதனால் ஆகிய பயன் என்ன' *பரிதி.*

'பலவகைப்பட்ட கலைகளையும் கற்றதனால்'-*காளி.*

'எல்லா நூல்களையும் கற்றவர்க்கு அக்கல்வி அறிவான்' *பரிமேல்., பழைய 2.*

'எல்லா நூல்களையுங் கற்றாலும் அந்நூல்களினுடைய அர்த்தங்களை அறிந்தாலும்'-*கவிராசர்.*

'பல கல்வியைக் கற்றதனாலே'-*பழைய 1.*

'பலவற்றைப் படிப்பதால்'-*வீரமா.*

'படித்ததனால்' -*கா.சு., சொ.த.*

'பல நூல்களையும் கற்றதனால்'-*திரு.வி.க.*

'கல்வி கற்றதனால்'-*இராம.*

'கற்றதனால்'-*குழந்தை.*

'கற்ற கல்வியால்'-*மு.வ.*

இவர்கள் அனைவரும் 'கற்றதனால்' என்பதற்குச் செயப்படுபொருளை வருவித்து உரைக்கின்ற முறையில் சிறிது வேறுபட்டவர்களாயினும் கருத்தால் ஒத்தவர்களே. ஆயினும் பொதுவாகக் கற்றதனால் என்பதைக் காட்டிலும், சிறப்பு நூல்களாகிய சாத்திரங்களைக் கற்றதனால் என்பது சிறந்தது ஆதலை எண்ணுக.

*'என்கொல்'*

கொல் என்ற இடைச்சொல்லை அசைநிலையாகக் கொண்டார்கள் உரையாசிரியர்கள் அனைவரும். *திரு.வி.க., இராமலிங்கனார்* இருவரும் என்னையோ? என்னவோ? என உரைகண்டு அசைநிலை என்னாராயினர். அன்றியும் தொல்காப்பியம் ''கொல்லே ஐயம்'' (*தொல். சூ.* 270) என்கிறது. இச்சூத்திரத்திற்கு ''யாதுகொல் மற்றவர் நிலையே'' (*அகநா.* 139:17) என்று எடுத்துக்காட்டுவர். ஈண்டு யாது என்பது வினாப்பொருளில் வந்தும் அதன்மேல் ஐயப்பொருளைத் தரும் 'கொல்' என்னும் இடைச்சொல் வந்ததுபோல, 'என்கொல்' என்றவழி 'என்' என்பது வினாப்பெயரின்

திரிபும் 'கொல்' என்பது அதன்மேல் வந்த ஐயமும் ஆயிற்று என்றலே சிறத்தல் காண்க. ''கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே'' எனல் *நன்னூலார்* காலத்து இலக்கணமாதலும் அது காலத்தால் முற்பட்ட குறளுக்கு இலக்கணம் ஆகாமையும் கண்டு 'என்னவோ', 'என்னையோ' எனப் பொருள் கோடலே பொருந்துவதாம். 'வழக்கிலும் நீ செய்வது என்னவோ?' என வினாவின்மேல் ஐயப் பொருளைத்தரும் ஓகாரம் இணைத்து வழங்குதலும் காண்க.

*'வாலறிவன்'*

'விளங்கின அறிவினை உடையவன்'-*மணக்*-

'மேலறிவாளனான சிவன்'-*பரிதி*.

'மாசற்ற அறிவுருவாகிய இறைவன்'-*காளி*.

'மெய்யுணர்வினை உடையவன்'-*பரிமேல்., கா.சு.*

'கேவல அறிவினை உடைய சுவாமி'-*கவிராசர்*.

'பரமேசுரன்'-*பழைய 1*

'தூய அறிவை உடையவன்'-*பழைய 2, வீரமா., திரு.வி.க., சொ.த.*

'தூய அறிவு உருவான இறைவன்'-*இராம*.

'உண்மை அறிவன்'-*குழந்தை*.

'தூய அறிவு வடிவாக விளங்கும் இறைவன்'-*மு.வ.*

இங்ஙனம் 'தூய அறிவு' எனப்பொருள் கண்டவர்கள் நேரே சொற்பொருளைக் கூறுகின்றவர்கள். 'மாசு அற்ற அறிவு' என்பவர் தூய்மை எதனால் விளைந்தது. மாசு அற்றமையால் என ஏதுப்பொருள் கண்டவர். 'விளங்கின அறிவு' என்றவர் தூய்மையின் பயன்விளக்கம் எனக் கருத்துப் பொருள் கொண்டவர். உண்மையறிவு, மெய்யுணர்வு என்றவர்களும் அங்ஙனமே. தூய்மையின் பயன் மேன்மை எனக் கருதிச் சொல்பவர் மேலான அறிவினன் என்றவர். கேவலம் -தனித்த சிறப்புடைமை. அது தூய்மையின் பயன். அதனால் கேவலஞானி என்பவர் ஒருவர். இது காரண இடுகுறிப் பெயராய்ச் சமணர் வழங்கும் மரபுச்சொல்லாயிற்று. பரமேஸ்வரன் என்பது சொற்பொருள் கருதாத சமயப் பெயராயிற்று. ஆகவே இந்த உரை அனைத்தும் ஒரே கருத்தின ஆதல் காண்க.

'மனக்கோள் நினக்கென வடிவு வேறிலை' என்பவாகலின் *காளிங்கர், இராமலிங்கனார், மு.வ.* ஆகிய மூவரும் அறிவே வடிவானவன் என்ற கருத்தமையைக் கூறியது சிறந்தது ஆகும். *தண்டபாணியார்* 'தூய்தாவது இயற்

கைப் பொருளே ஆதலால், தூய அறிவாவது இயற்கை அறிவு. எனவே, இயற்கை அறிவினன் ஆதல் பெறப்பட்டது' என்ற விளக்கமும் தருவர். இது சிறந்த குறிப்பாகும்.

*'நற்றாள்'*

'திருவடி'-*மணக்., சொ.த., இராமா., மு.வ.*
'சிவன் ஸ்ரீ பாதம்'-*பரிதி.*
'தூயஅடி'-*காளி.*

'நல்லதாள்கள்'-*பரிமேல்.,* குழந்தை 'பிறவிப்பிணிக்கு மருந்தாகலின் நற்றாள் என்றார் என்ற விளக்கமும் தருவர் *பரிமேலழகர்.*

'பாதங்கள்'-*கவிராசர், பழைய 1, 2.*
'நல்ல அடிகள்'-*வீரமா.*
'நல்ல திருவடி'-*திரு.வி.க.*
'நிலைத்த இன்பம் தரும் திருவடிகள்'-*கா.சு.*

அனைவரும் *'தாள்'* என்பதற்கு வேறுவேறு பெயர்ச் சொற்களை உரைப்பாராயினும் பொருள் ஒன்றே ஆதலைக் காண்கிறோம். ஆனால் 'நல்ல' என்ற அடைமொழிக்குப் *பரிமேலழகரும், கா.சு.*வும் சிறிது வேறுபடுகின்றனர். இவர்கள் கூறும் இருவகை விளக்கங்களும் சிறப்புடையன.

*'தொழாஅரெனின்'*

*கவிராசர்* தொழுதலைத் 'தோத்திரம் பண்ணுதல்' என்பர். தொழுதல் மெய்யின் தொழில். தோத்திரம் பண்ணுதல் மனமொழிகளின் செயல். இங்ஙனம் மாறிக்கூறும் இருவகையார் கருத்தும் முக்கரணங்களாலும் வணங்குதல் வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றது.

"தொழாஅரெனின் அளபெடை இடையறாமையைக் குறிப்பது. இதில் ஒருவித ஆணையும், இன்றியமையாமையும் ஆர்வமும், இரக்கமும், இன்னபிறவும் கிளர்ந்து நிற்றல் காண்க" என விளக்குவர் *திரு.வி.க.* அளபெடை இசைநிறை இன்னிசை, சொல்லிசை, இயற்கை என நான்கு வகைப் படும். அவற்றினும் இது வேறாயிருத்தல் காண்க. அதாவது தொழுதல் இடையறாது எப்பொழுதும் நிகழ்தல் வேண்டும் எனத் *திரு.வி.க.* குறிக்கிறார். இத்தகைய பொருள்கோள் அமைப்பு பழைய உரையாசிரியர்கள் உரையில் காணப்பட வில்லை.

## ஓ) ஒப்புமைப் பகுதி:

*முற்றும்*

கற்றவர் தாந்தொழுது ஏத்தநின்றான் காதலிக்கப்படும் காட்டுப் பள்ளி
—சம்பந்தர் தேவாரம், கீழைக்காட்டுப்பள்ளி, 9.

பிறைநுதலீர் உமைப் பேணுதல் கற்றறிவோர்கள் தம்கடனே
—சம்பந்தர் தேவாரம், திருநெல்வேலி-6

கற்றாங்கு எரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ் தில்லை
—சம்பந்தர் தேவாரம், கோயில்-1

கற்றவர் தொழுதுஏத்தும் சீர்க்கறையூரிற் பாண்டிக்கொடுமுடி
—சுந்தரர் தேவாரம், கொடுமுடி 1

கற்றாங்கு அவன்கழல் பேணினர் —திருவாசகம்-508

கற்றார் கண்ணற்கு ஆளன்றியாவரோ —திருவாய். 7-5-7

செய்யுள்நிகழ் சொற்றெளிவும் செவ்வியநூல் பலநோக்கும்
மெய்யுணர்வின் பயன்இதுவே எனத்துணிந்து விளங்கிஒளிர்
மையணியும் கண்டத்தான் மலரடிக்கே ஆளானார்
பொய்யடிமை இல்லாத புலவர்எனப் புகழ்மிக்கார்
—பெரிய., பொய்யடி-1

உள்ளநிறை கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால்
தெள்ளிவடித் தறிந்தபொருள் சிவன் கழலிற் செறிவென்றே
கொள்ளும் உணர்வினின் முன்னே கூற்றுதைத்த கழற்பண்பு
பள்ளமடை யாய் என்றும் பயின்றுவரும் பண்புடையார்
பெரிய., சிறுத்-4

கற்றவர் விழுங்கும் கற்பகக்கனியை —திருவிசை

*'வாலறிவன்'*

வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல் நூலாகும் —தொல்-649

அறிவன் அறவோன் அறிவுவரம்பு இகந்தோன்—சிலம்பு. 10., 176

அடலாழி கொண்ட அறிவின்-ஆழ்வார்

உலகுணர் கடவுள் —சீவகசி. 62713

கடையிலா வொண்ஞானக் கதிர் விரித்தாய் —சூளா. துறவு-65

எல்லாம் உணர்ந்தான் —நீல.1

உலகமூன்றும் ஒருங்குடன் ஏத்தும் மாண்
திலகமாய் திறல் அறிவன் னடி —வளையா.1

வையம் நின்ற பெற்றி, முற்றும் உரைத்தான் உரை
ஈரொன்பது ஆய தொன்றால் —மேருமந்தர.1

அறிவினாலறியாத அறிவன் —மேருமந்தர-630
வாலுணர்வு மேல் முடுகிறார் கம்பரா.-344
ஆதி யந்தம் அரியென யாவையும்
ஓதி னாரல இல்லன உள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நன்மைய
பாத மல்லது பற்றலர் பற்றிலார் —கம்பரா., தற்சிறப்பு-3
வாலறிவற்கு (பாடபேதம்) —கம்பரா., 439
கடைகண்ட காட்சியோடு கடைகண்ட வாலறிவன்—திருக்கலம்.
இலங்கொளி முக்குடைய எந்திரத்து இயங்க
அறிவர் சரிதம் முறையிற் காட்டி—பெருங். காண். 2,2:133-134

*'நற்றாள்'*

நவைசெய் பிறவிக் கடலகத்துள், பாதகமலந் தொழுவேங்கள்
பசையாப் பவிழப் பணியாயே —சீவகசி., 1248

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி*

*காரி:* இக்குறட்பாவைத் தொடர்நிலை முழுதும் நோக்கிக் கொள்ளப்படுவதும், தனித்து ஒரு பாட்டாற் கொள்ளப்படாத தும் ஆகிய பாவிக அணிக்கு மேற்கோள் என்பர் (மாறன். 251 உரை).

(உ)

## *1.3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்*
## *நிலமிசை நீடுவாழ் வார்.*

**உரைப்பகுதி:**

அ) *மணக்.:* மலரின்மேல் நடந்தானது[1] மாட்சிமைப்பட்ட திருவடியைச் சேர்ந்தவர் அன்றே நிலத்தின்மேல் நெடுங் காலம் வாழ்வார் என்றவாறு. நிலம் என்று பொதுப்படக் கூறியவதனான் இவ்வுலகின்கண்ணும் மேலுலகின் கண்ணும் என்று கொள்ளப்படும். தொழுதால் பயன் என்னை என்றார்க் குப் போகம் நுகர்தலும் வீடு பெறலும் என்று கூறுவார் முற் படப் போக நுகர்வார் என்று கூறினர்.[2]

ஆ) *பரிதி.:* பக்த சனங்கள் இட்ட[3] புஷ்பத்தின்மேல் எழுந்தருளி இருக்கும் சிவன் ஸ்ரீபாதத்தை மனசிலே பற்ற

---

1 மலர்மிசை ஏகினான் என்பதற்கு இவர் எழுதும் உரைப்போக்கால் இவரைச் சைனர் என்று கருதலாம். மாயாதேவியின் வயிற்றிலிருந்து வலதுவிலாப்புறவழியாக வந்தபோது கௌதமபுத்தர் நீலத்தாமரைமலர் மேல் ஏழடி நடந்தார் என்ற புத்தசரிதத்தையும் நினைவூட்டுகின்றது.

2 நிலமிசை நீடுவாழ்வார் என்றதனால் இவ்வுலகில் போகம் நுகர்வார்கள் என்பதாம்.

3 இட்ட-வழிபட்ட (அருச்சித்த - சாத்திய).

வைத்தார் பூமியின்கண் சகலபாக்கியமும் அனுபவிப்பார் என்றவாறு.

ஈ) *காளி:* மலர்மிசை ஏகினன் என்பது எல்லாருடைய நெஞ்சத்தாமரையினுஞ்சென்று பரந்துள்ளான்.[1] மாணடி[2] என்பது மாட்சியுள்ள அடி. நிலமிசை நீடுவாழ்வார் என்பது நித்தராயுள்ளார்[3] இந்நிலத்தின்கண் இவ்வாறு வணங்கி வழி பட்டு எவ்வுயிர்க்கும் உயிராய் நின்ற இறைவனது குற்றம் தீர்ந்த அடியினைச் சேர்ந்தார் யாவர் மற்று அவரே முத்தர்[4] ஆவார் என்றவாறு.

உ) *பரிமேல்:* மலரின்கண்ணே சென்றவனது மாட்சிமைப் பட்ட அடிகளைச் சேர்ந்தார் எல்லா உலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண் அழிவின்றி வாழ்வார்.

அன்பான் நினைவாரது உள்ளக்கமலத்தின்கண் அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின் 'ஏகினான்' என இறந்தகாலத்தாற் கூறினார்; என்னை? 'வாராக்காலத்தும் நிகழுங்காலத்தும், ஓராங்கு வருஉம் வினைச்சொற்கிளவி, இறந்தகாலத்துக் குறிப்பொடு கிளத்தல் விரைந்த பொருள என்மனார் புலவர், என்பது ஓத்துஆகலின்[5] இதனைப் பூமேல் நடந்தான் என்பதோர் பெயர்பற்றிப் பிறிதோர்கடவுட்கு ஏற்றுவாரும் உளர். சேர்தல்—இடைவிடாது நினைத்தல்.

*காரி:* 'ஏற்றுவாருமுளர்' என இவ்வாறு பிறர் கருத்து உரைப்பன எல்லாம் வடநூலார் பட்சாந்தரம் என்பர்.

அவனடி உடம்பாற் சேரப்படாமையின் சேர்தல் நினைத் தலாயிற்று. இதனை வடநூலார் உசிதம் என்பர். 'பொன் போற் பொதிந்து'[6] என்பதும் இவ்வாறு போந்த பொருள் படும் என்க. 'வாராக் காலத்தும்' என்னுஞ் சூத்திரம் 'ஏகினான்' என்பதற்கு உரைத்தார். 'இருமாப் பொழிந்த

---

1 பரத்தல் - எங்கும் நிறைந்திருத்தல்.

2 மாணடி-குற்றம் தீர்ந்தஅடி; என்றது முதற்பொருளின் தன்மை சினையின் மேல் ஏற்றப் பட்டது.

3 நித்தர் - தம்முடைய யோகவன்மையால் பல ஆண்டு வாழ்பவர்.

4 முத்தர் - வினைக்கட்டிலிருந்து விடுபட்டவர்.

5 விதியாதலான். ஓத்து—வேதம். வேதம்போல விலக்க இயலாவிதியை உணர்த்தியது ஆதலின் 'விதி' என்ற பொருளில் இச்சொல்லை இவரே ஆண்டனர் என்பதைப் பார்த்துத் தெளியலாம். சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் அகராதி.

6 குறள், 155. பொதிந்து வைத்தல்—சால்புடைமை பற்றி இடைவிடாது—நினைத்தல். (பரிமேல)

இணை முலையே'[1] என்னுங் கோவையாரும் அதுமாணடி வினைத்தொகை (நுண்பொருள்மாலை).

*இராமா:* ஏகினான் என்னும் தெரிநிலை வினைச்சொல் விரைவு பற்றி நிகழ்காலம் இறந்தகாலமாக மயங்கி நின்றது.

ஊ) *கவிராசர்:* தேவமலரின் மேலே நடந்த சருவக்கியனுடைய[2] நல்ல பாதங்களைச் சேர்ந்தவர்கள் எல்லா உலகத்திற்கும் மேலாய் இருக்கப்பட்ட மோக்ஷத்திலேபோய் ஒரு காலமும் அழியாமல் வாழ்வார்கள்.

எ) *பழைய 1:* அடியார் இடும் திருப்பள்ளித்தாமத்தின் மேல்[3] வரும் சீர் பாதம் துணையால் பூமியில் பெருவாழ்வு வாழ்வார்.

ஏ) *பழைய 2:* உயிர்களுடைய இதய கமலத்தில்[4] சென்றவனுடைய மாட்சிமைப்பட்ட பாதங்களைச் சேர்ந்தார் எல்லா உலகுக்கும் மேலாகிய மோட்ச வீட்டுலகின்கண்[5] அழிவில்லாமல் வாழ்வார்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'மலர்மிசை ஏகினான்'*

'மலரின் மேல் நடந்தவன்'-*மணக்., பரிமேல்., வீரமா.*

'பக்த ஜனங்கள் இட்ட புஷ்பத்தின்மேல் எழுந்தருளினவன்'-*பரிதி, பழைய 1.*

'எல்லாருடைய நெஞ்சத்தாமரையிலும் சென்று பரந்துள்ளவன்'-*காளி, பழைய 2, சுகா., சொ.த., இராம., மு.வ.*

'தேவமலரின் மேல் நடந்த சருவக்கியன்'-*கவிராசர்.*

'உள்ளக் கமலத்தின் மேலிடமாகிய பரவெளியில் கூத்தாடுகின்றவன்'-*கா.சு.*

'குருநாதனுடைய நெஞ்சத்தாமரையினுள் எழுந்தருளியவன்'-*திரு.வி.க.*

'உயர்ந்த அறிவினை உடையவன்'-*குழந்தை.*

---

1 திருக்கோவை. 373.
2 எல்லாம் உணர்ந்தவனுடைய
3 மாலை
4 நெஞ்சத்தாமரை
5 மோட்ச வீட்டுலகம் - பற்றறுதலாகிய மோட்சத்தால் அடையப்பெறும் நிலைத்த இன்பநிலை.

உருவகமாகக்கொண்டு மனமாகிய தாமரை என உரை காண்பவர்கள் பலர். அதிலும் சிறப்பாக அவலக்கவலை கையாறு அழுங்கல்களால் குவியாத மலர்ந்தநெஞ்சம் என்று உரைகண்ட *சுகாத்தியரும்* சிறந்த நோக்குடையவரே. நெஞ்சத்தாமரையின்மேலிடம் பரவெளியாகிய ஞானஆகாயம் என்னும் *கா.சு.* உரைபழுத்த சைவப்பாங்கு உடையது. *திரு.வி.க.* அவர்கள் அருவ உருவம் அற்ற கடவுள் குருநாதனுடைய நெஞ்சத்தைக் கோயிலாகக் கொண்டு இருக்கிறார்; குருநாதன் திருவடியை அடைதல் இறைவன் திருவடியை அடைந்ததுபோல என்ற கருத்தமைதிக்குக் கால்கோள் செய்கிறார். உயர்ந்த அறிவினை உடையான் என்ற குழந்தை உரை ஆய்வு ஊக்கத்தை அளிக்கிறது.

இவ்வுரையுள் மலரின்மேல் நடந்தவன் என்றதும் தேவ மலரின் மீது நடந்தவன் என்பதும் தெய்வத்தாமரைமேல் நடந்து காட்டிய அருகதேவன் வரலாற்றை உள்ளடக்கிய தொடர் ஆகும். மலரின்கண்ணே சென்றவன் என்று முன் எழுதிச் சிறப்புரையில் ‘பூமேல் நடந்தான் என்பதோர் பெயர் பற்றிப் பிறிதோர் கடவுட்கு ஏற்றுவாரும் உளர்’ எனப் பரிமேலழகர் கூறுவதால், தன்னால் நினைக்கப்படுபவன் நெஞ்சமலரின்மேல் சென்றவன் என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறார். “நினையுமாநினை” என்பதே மரபாதலின் நினைப்பவர் நெஞ்சம் கோயிலாக்கொண்டவன் எனலுமாம்.

ஏகினான், நடந்தவன், சென்றவன், பரந்துள்ளவன், எழுந்தருளினவன், உலவவிடுபவர் எனப் பல்வேறு வாய்பாடுகளால் கூறினும் போந்த கருத்து விளங்குபவன் என்பதே. சைன மரபினர் கூறும் ‘நடந்தான்’ என்பது வரலாற்றுப் பின்னணியை உடையது.

*‘மாணடி’*

‘மாட்சிமைப்பட்ட திருவடி’-*மணக்., காளி, பழைய 2, குழந்தை.*

‘ஸ்ரீ பாதம்’-*பரிதி.*

‘நல்லபாதம்’-*கவிராசர்.*

‘சீர்பாதம்’-*பழைய 2.*

‘வணக்கத்திற்குரிய அடிகள்’-*வீரமா.*

‘மாண்பாயபாதங்கள்’-*சுகாத்.*

‘அருள்அடிகள்’-*கா.சு.*

‘பெருமைதங்கிய அடி’-*சொ.த., திரு.வி.க.*

‘மிகச்சிறந்தசரணம்’-*இராம.*

இவற்றுள் புணர்க்கப்பெறுகின்ற ஓரிரு சொற்கள் தவிரப் பொருள் கருத்தால் ஒத்தவை. சீபாதம் என்பவர்கள் சமயச் சார்பில் நின்று உரைப்பவர்கள். மாட்சிமைப்பட்ட அடி என்பதற்கும் மாண்பாய அடி என்பதற்கும் சிறிது பொருள் வேற்றுமை உண்டு. மாண்பாய அடி; என்பதும் மாட்சிமையை இயல்பாக உடைய அடி என்ற கருத்தைத் தருதலால் இவ்வுரைப்போக்கு சிறந்தது என்கிறார்.

*'சேர்ந்தார்'*

'சேர்ந்தவர்'- *மணக்., காளி, கவிராசர், பழைய 1, குழந்தை.*

'மனசில் பற்றவைத்தவர்'-*பரிதி.*

'இடைவிடாது நினைத்தல்'- *காளி, கா.சு., சொ.த. மு.வ.*

'பற்றிக்கொள்வோர்'-*வீரமா.*

'யான்எனல் அற்று அடைந்தவர்'-*சுகாத்.*

'திருவடியை அடைந்தவர்'-*திரு.வி.க., இராம.*

இவ்வுரையுள் இருவகைக் கருத்தோட்டங்களைக் காண்கிறோம். ஒன்று அடைதல்; மற்றொன்று இடைவிடாது நினைத்தல் அல்லது பற்றுதல். இடைவிடாமல் எண்ணும் தகுதி எல்லாருக்கும் கூடுவது ஒன்று அன்று ஆதலின் அனைவரையும் நோக்கின் அடைந்தார் என்ற உரையும் தகுதியுடையார் மறவாதே நினைப்பர் ஆதலின், அவர்களைக் கருதி எண்ணுவார் என்ற உரையும் ஏற்புடையனவாம். யான் எனல் அற்று அடைந்தவர் என்ற சுகாத்தியர் விளக்கம் நயம் பயப்பது.

*'நிலமிசை'*

'நிலத்தின்கண்'-*மணக்., பரிதி, காளி, பழைய1, சொ.த., இராம., குழந்தை, மு.வ., வ.உ.சி.*

எல்லாஉலகிற்கும் மேலாய வீட்டுலகின்கண்-*பரிமேல்.* (இவர் மிசை உலகு என்றுகொண்டு கூட்டினர் ஆதல் வேண்டும்)-*கவிராசர், பழைய 2, மு.ரா.அரு.*

'விண்ணில்'-*வீரமா.*

'உலகின் மேலாய உலகம்'-*சுகாத்.*

'தத்துவம் கடந்த வீடு'-*கா.சு.*

'நிலத்தின்மீது'-*திரு.வி.க.* (நிலம் என்பது மண்ணுலகத்தை மட்டும் குறிப்பதன்று எல்லாவற்றையும் என்பர்).

இவ்வுரைகள் அனைத்தும், இவ்வுலகில் எனவும், இவ்வுலகிற்கு மேலாய வீட்டுலகில் எனவும், இருவகையுலகிலும் எனவும் அடங்குதல் காண்க. இவற்றுள் நிலமிசை எனப் பொதுப்பட இவ்வுலகிலும் வீட்டுலகிலும் என இரண்டு நிலத்தையும் கோடலே சிறப்புடைத்து என்ற *மணக்குடவர்* உரை சிறப்புரை. *திரு.வி.க.* ஆகியோரின் குறிப்புக்கள் மிக ஏற்புடையனவாகும்.

*'நீடுவாழ்வார்'*

'நெடுங்காலம் வாழ்வார்' — *மணக்., சுகாத்., சொ.த.*
'சகலபாக்கியமும் அனுபவிப்பவர்' — *பரிதி.*
'முத்தராவார்' — *காளி.*
'அழிவின்றி வாழ்வார்'—*பரிமேல்., கவிராசர், பழைய I.*
'பெருவாழ்வுவாழ்வார்' — *பழைய I.*
'என்றும் மகிழ்ந்து இருப்பார்' — *வீரமா.*
'நெடிதுவாழ்வார்' — *திரு.வி.க.*
'பெருக்கத்தோடு மிகச்சுகமாக இருப்பர்' — *இராம.*
'நிலைபெற்று வாழ்வார்' — *குழந்தை, மு.வ.*

இவ்வுரைகளுள் சொற்பொருள் சிலவே. கருத்துப் பொருளாக எழுதப்பெற்றவை பல. இவற்றுள் நமக்கு விருப்பத்தை விளைவிப்பன இம்மை இன்பம் கூறும் உரைகள். எதிர் நோக்கை அளிப்பன மறுமைஇன்பம் கூறும் உரைகள். இரண்டையும் கூறும் உரை சிறந்தது ஆகலாம்.

## ஓ) *ஒப்புமைப்பகுதி:*

*முற்றும்:*

ஆம்வகை நினைவொடு பதுமநன் மலரது மருவிய சிவன்
—*சம்பந்தர் தேவாரம், திருச்சிவபுரம், 1*

*மலர்மிசை ஏகினான்:*

ஏகினான்-நடந்தான்

மலர்மிசை நடந்தோன் மலரடியல்லது என்
தலைமிசையுச்சி தான் அணிப் பொறாஅ
—*சிலம்பு*, நாடுகாண். 204-205
மலர்மிசை நடந்த மலரடி-ஆழ்வார்
கால்நிலம் தோயாக் கடவுள் —*நாலடி*, கடவுள்வாழ்த்து
தண்டாமரை மலரின்மேல் நடந்தாய் —*சூளா*, 1911
தண்டாமரை மலரின்மேல் நடந்தான் —*நீலகேசி*, 3
திருமலர்மிசைஅடிஇடுதி — *நீலகேசி*, 158

ஏகினான்-சென்றான்

விரிபூந் தாமரை மேற்சென்ற திருவாரடி *சீவக,* 2814
விரைமணந்த தாமரைமேல் விண்வணங்கச் சென்றாய்—*சூளா* 187
முருகணங்கு தாமரையில் மொய்ம்மலர்மேல் சென்றாய்
—*சூளா* 188

தாவின்றி எப்பொருளும் கண்டுணர்ந்து
தாமரைப் பூவின் மேற்சென்றான் புகழடியை
—*அறநெறிச்சாரம்,* கடவுள்

தெய்வக்காமர் நளினத் தமரர் நடந்தோய் —*திருக்கலம்,* 92

ஏகினான்-வீற்றிருந்தான்

பொள்ளலிக்காயந் தன்னுட் புண்டரிகத் திருந்தவள்ளலை
—*அப்பர் தேவாரம்,* திருத்துருத்தி 6
புந்தியாய் புண்டரிகத் துள்ளாய் போற்றி
—*அப்பர் தேவாரம்,* திருவீரட் 9
......................ஞானப்
புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்
—*சம்பந்தர் தேவாரம்,* திருவீழிமிழலை, 6
போது கந்தேறும் புரிசடையான் —*திருமந்திரம்,* 632
மலர்மிசை எழுதரு பொருள்
—*சம்பந்தர் தேவாரம்,* திருச்சிவபுரம் 5
மனனக மலமற மலர்மிசை எழுதரு
மனனுணர் வளவிலன்-ஆழ்வார் 1-1-2
மனனுறு கடவுளர் —*கம்பரா.* 312
தேனவிழ்த் தளிகளெல்லாஞ் செவ்வழி பாடாநின்ற
பூநகைத் திலங்கு கஞ்சப் பொகுட்டின் மீதே ஒதுங்கும்
நான்முகக் கடவுள்—
நாண்மலர் வான், மீயகத்தே வர மேற்கொள் ளுந் தேவர்—
மடலவிழ் கமலவூர்தி வந்த வாமன்—
மலரேந்து சேவடியமால்—
செய்யதாமரையினங்கணடிவைத் தருளுமாதியாய்—
மலர்மிசை நடந்த மலரடி"
பூவின் மேல் வந்தருளும் புங்கவன்தன் பொற்பாதம்—*நேமி.*
மருவார் மலர்பிண்டி மன்னா நமஸ்தே
வண்டாரும் மலர்மேல் நடந்தாய் நமஸ்தே
—*தோத்திர.*

(ரு)

*1.4. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை இல.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* "வேண்டுதல்வேண்டாமை யில்லான்", "சேர்ந்தார் இலார்" என்பன மணக்குடவர் பாடம்.

இன்பமும் வெகுளியும்[1] இல்லாதானது திருவடியைச் சேர்ந்தவர் எவ்விடத்தும்[2] இடும்பை இல்லாதவர் என்றவாறு.

பொருளும் காமமும் ஆகா என்றற்கு 'வேண்டுதல் வேண்டாமை இலான்' எனப்பெயரிட்டார்.

*ஆ) பரிதி:* விருப்பு வெறுப்பு இல்லாதான் பாதம் சேர்ந்தார்க்குத் துன்பம் இல்லை என்றவாறு.

*இ) பரிப்:* இது கையாறு கெடும் என்றது. அறம் வேண்டும் என்றற்கு அறவாழி அந்தணன் என்று பெயரிட்டார்.

*ஈ) காளி:* உலகத்து யாதானும் ஒருபொருளை விரும்புதலும் விரும்பாமையும் இல்லாத இறைவன் அடியை அன்பொடு சேர்ந்தார்க்கு எவ்விடத்தானும் துயரம்இல்லை என்றவாறு.

*உ) பரிமேல்:* ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன் அடியைச் சேர்ந்தார்க்கு[3] எக்காலத்தும் பிறவித் துன்பங்கள் உளவாகா.

பிறவித்துன்பங்களாவன[4] தன்னைப்பற்றி வருவனவும்,[5] பிற உயிர்களைப்பற்றி வருவனவும்,[6] தெய்வத்தைப்பற்றி

---

1 வெகுளி - சினம். வேண்டாமையான் விளைவது இதுவாதலின் காரண காரிய ஒற்றுமை பற்றி வேண்டாமைக்கு வெகுளி என உரை கண்டார்.

2 யாண்டும் – எவ்விடத்தும். 'யாண்டும்' என்பதும் "யாண்டுச் சென்று யாண்டும் உளர் ஆகார்" (குறள் 905) "யாண்டும் உகாமை வல்லதே ஒற்று" (குறள் 585) என இடப்பொருளிலும், வள்ளுவர் வழங்குதலால் காளிங்கரும் மணக்குடவரும் எவ்விடத்தும் என இடப்பொருளில் உரை கண்டனர் போலும்.

3 இவ்வதிகாரத்து, 'அடிசேர்ந்தார்' 'தாள்தொழாஅரெனின்' எனப்பல இடங்களில் வருதலால் அதற்கு அருள் எனக் குணப்பொருள் காணாமல் கால் என்னும் உறுப்பு எனக்கொள்வோமாயின், ஏனைய முகம் முதலியன வும் உடன் எண்ணப்பட்டு ஏதாயினும் ஒரு சமயக் கடவுளைக் குறிப்ப தாகப் பொதுமையின் நீங்கும் என்க. இதனானே பரிமேலழகர் சேர்தல் என்பதற்கு இடைவிடாது நினைத்தல் எனப் பொருள் கண்டனர் போலும்.

4 பிறவித்துன்பங்கள்; பிறவியான் வரும் துன்பங்கள் அல்லது பிறவிக்கண் வரும் துன்பங்கள். வடநூலார் அத்தியான்மிகம் ஆதிபௌதிகம் ஆதி தெய்வீகம் என்பர்.

5 தன்னைப் பற்றி வருவன; உடலைப்பற்றிய தலையிடி போல்வனவும் மனத்தைப் பற்றி வரும் காமம் வெகுளி கவலை முதலியனவுமாம்.

6 பிற உயிர்களைப் பற்றி வருவன: மனிதர் விலங்கு ஊர்வன நீர்வாழ்வன நாகம் முதலிய பலஉயிர்களால் நேரும் துன்பங்களாம்

வருவனவும்[1] என மூவகையான் வரும் துன்பங்கள். அடிசேர்ந்தார்க்கும் அவ்விரண்டும் இன்மையின் அவை காரணமாக வரும் மூவகைத் துன்பங்களும் இலவாயின.

*காரி:* யாண்டும் என்பது காலப்பொருட்டு ஆயிற்று. ஒற்றினுள் 'யாண்டும் உகாஅமை'[2] என்பது சதுருபாயப் பொருட்டு. இனி இடப்பொருட்டு பெரும்பான்மையும் வரும். இல என்பது உண்டு என்பதற்கு மறையாய்ப் பொருண்மை சுட்டி, இல் என்னும் பொருட்டாய்ப் 'பிறன் கடை நின்றாருள் பேதையார்இல்'[3] என்றது போல நின்றது. 'கோளில் பொறியின் குணமில'[4] என்பது உடைய என்பதற்கு மறையாய்த் தலைகள் குணத்தைஇல என வினைக்குறிப்பாய் நின்றது. 'இன்றில்'[5] என்னும் சூத்திரத்துள் இளம்பூரணர் கல்லாடர் சேனாவரையர் நச்சினார்க்கினியர் முதலாயினோர் உரைத்த உரையினும் காண்க. முன்னர் உள, உளது, உண்டு, இலது, உடைத்து, அன்று, இன்று எனவருவன எல்லாம் இவ்வாறு வரும்; ஆண்டாண்டுக் காண்க. இடும்பை மூவகைத்து; இவற்றை வடநூலார் தாபத்திரயம் என்பர். (நுண்பொருள்மாலை.)

ஊ) *கவிராசர்:* ஒரு பொருளை வேண்டுகிறதும் வேண்டாததும் இல்லாத சுவாமி பாதங்களைச் சேர்ந்தவர்களுக்கு எந்தக் காலத்தும் பிறவியாகிற துக்கம் இல்லை.

வேண்டுதல் வேண்டாமை — ராகத்துவேஷங்கள்[6]

இடும்பை-பிறவித்துன்பங்கள். அவை மனோதுக்கமும் ஆகந்துக துக்கமும், சரீரதுக்கமும், சுபாவ துக்கமும் என

---

1 தெய்வங்களான் வரும் துன்பங்களாவன: இடி, மின்னல், வெயில் முதலியவற்றான் வருவனவாம். இவற்றுள் பன்னிரண்டு துன்பங்கள் வரும் வகையும் உபாயமும் 442 ஆம குறள் உரையில் வரும் பரிமேலழகர் உரை கொண்டு தெளிக.

பிறவித்துன்பங்கள் என்ற தொடர்க்குப் பிறவி ஆகியதுன்பம் எனவும் பிறவிக்கண் நேரும் துன்பம் எனவும் இருவகையானும் தொகைப்பொருளை விரித்து, மாணடிசேர்ந்தார்க்கு இவ்விருவகைத் துன்பங்களும் இல என்பர் 'இடும்பை இல' எனப் பொதுவகையால் கூறினர்.

2 "சுடாஅ உருவொடு கண்ணஞ்சாதி யாண்டும் உகாஅமை வல்லதே ஒற்று" என்ற குறளில் யாண்டும் என்பதற்குப் பரிமேலழகர் கூறும் 'நான்கு உபாயமும் செய்தாலும்' என்பதை உட்கொண்டு கூறியது. சதுருபாயம்-சாம தான பேத தண்டம் என்பன. இவைகளில் எதைச் செய்தாலும் என்பது கருதி நின்றது 'யாண்டும்' என்பது. குறள் 585 பார்க்க.

3 குறள் 142 4 குறள் 9 5 தொல். சொல். 222

6 ராகத்துவேஷங்கள் - விருப்பு வெறுப்புக்கள்.

நான்காம்.[1]

*ஏ) பழைய 1:* வேணும் என்ற விருப்பமும் வேண்டாம் என்ற வெறுப்பும் இவை இரண்டும் இல்லாத ஸ்ரீபரமேசுவரன் சீர் பாதம் சேர்ந்தார்க்கு இகபரத்திலும்[2] துன்பம் இல்லை.

*ஏ) பழைய 2:* ஒரு பொருளை வேண்டுதலும் ஒரு பொருளை வேண்டாமையும் ஆகிய விருப்பும் வெறுப்பும் இல்லாதவன் பாதங்களைச் சேர்ந்தார்க்கு எக்காலத்தும்[3] பிறவித்துன்பம் இல்லை.

*மல்லர் உரை:* என்பது கடவுளுக்கு அடுத்த காரியங்களில் எல்லாம் மெய் என்கிறதால் ஆகிற புகழை விரும்புகிற வனிடத்திலே இச்சை பண்ணுவிக்கிற மயக்கத்தால் வருகிற நல்வினை தீவினை என்கிற கலப்பு உண்டாகாது, என்ற வாறு,

ஒருவன், மெய்யான கடவுளையறிந்து அவர் ஓதின படிக்கு நடக்கிறான் என்கிற புகழைவிரும்பினால் அவருக்குப் பொருந்தாத இச்சைகளை வெறுப்பான். ஆனபடியினாலே இச்சைகள் முகாந்திரமாக வருகிறதீவினைகள் அவனிடத்தில் உண்டாகாமல் நல்வினை மாத்திரம் உண்டாகும் என்பது.

ஆகையால் மற்றவர்களிடத்தில் புண்ணியமும் பாவமும் கலந்து நிற்குமே அவனிடத்திலே அப்படிப்பட்ட கலப்புக்கு இடம் இல்லை என்பது கருத்து.

சேர்-சேரும், இருவினை-நல்வினை தீவினை, சேரா-பொருந்தமாட்டா, இறைவன்-கடவுள், பொருள்-மெய்ம்மை, புரிதல்-விரும்புதல், மாட்டு-இடம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'வேண்டுதல் வேண்டாமை இலான்'*

'இன்பமும் வெகுளியும் இல்லாதான்'—*மணக்.*

'விருப்பு வெறுப்பு இல்லாதான்'—*பரிதி.*

---

1 மனோதுக்கம் - மனத்துன்பம்; ஆகந்துக துக்கம் - ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு வேறு ஒன்றாக விளையும துன்பம்; சரீரதுக்கம் - உடம் பால விளையும் துன்பம், சுவபாவதுக்கம் - மனிதகதி முதலிய நான்கிலும் தோன்றுகின்ற உயிர்களுக்கு விளையும் அவ்வக்கதிக்கேற்ற துன்பம். (மேருமந்தர, 473 காண்க.)

2 இகபரம் - இம்மை மறுமை.

3 யாண்டும் எவ்விடத்தும் எக்காலத்தும் என இருபொருளையும் கருதுதல் காண்க.

'உலகத்து யாதானும் ஒரு பொருளை விரும்புதலும் விரும்பாமையும் இல்லாத இறைவன்—'*காளி.*

'ஒரு பொருளையும் விழைதலும் வெறுத்தலும் இல்லாதவன்'
*—பரிமேல். மு.ரா.அரு.*

'ஒருபொருளை வேண்டுகிறதும் வேண்டாததும் இல்லாத சுவாமி'—*கவிராசர்*

'வேணும் என்ற விருப்பமும் வேண்டாம் என்ற வெறுப்பும் ஆகிய இவை இரண்டும் இல்லாத ஸ்ரீபரமேசுவரன்'
*—பழைய 1*

'ஒரு பொருளை வேண்டுதலும் ஒரு பொருளை வேண்டாதலும் ஆகிய விருப்பும் வெறுப்பும் இல்லாதவன்'—*பழைய 2*

'விருப்பமும் வெறுப்பும் இடம் பெறாதவர்'—*வீரமா*

'வேண்டுதலை வேண்டாமை என்னும் குறையில்லாராகிய கடவுள்'—*சுகாத்.*

'யாதொரு பொருளையும் விரும்புதலும் விரும்பாமையும் இல்லாத கடவுள்'—*கா.சு.*

'விருப்பு வெறுப்பு இல்லாத இறைவன்' —*திரு.வி.க., தேவநேயர்.*

'ஒரு பொருளை விரும்புதலும் வெறுத்தலும் இல்லாத இறைவன்'—*சொ.த.*

'விருப்பு வெறுப்பு இல்லாதவனாகிய பகவன்'—*இராம.*

'விருப்பு வெறுப்பு அற்றவன்'—*குழந்தை*

'விருப்பு வெறுப்பு இல்லாத கடவுள்'—*மு.வ.*

'தனக்கெனத் தனிப்பட்ட விருப்பச்சார்போ வெறுப்புச்சார்போ இல்லாதவராகிய கடவுள்'—*கா.அ.*

உரைகளில் வேண்டுதல் வேண்டாமை இரண்டையும்மறு பெயர்ச்சொற்களால் விளக்குவனவே அனைத்துரைகளும்; ஆனால், இரண்டையும் நமக்குக் குறைகளாகத் தெரிவிப்பவர் *சுகாத்தியர்.* உலகியல் மரூஉ வழக்கில் வைத்து வேணும், வேண்டாம் என்று விளக்கம் தருவது *பழைய உரை.* எங்ஙனமாயினும் வேண்டாமை பொருள்மேல் எழுந்த வெகுளியால் பிறத்தலின் வேண்டாமையை வெகுளி என்று உரைத்த *மணக்குடவர்* காரணத்தால் காரியத்தைப் பெற வைக்கிறவர் ஆகிறார்.

*அடி சேர்ந்தார்க்கு:*

'திருவடியைச் சேர்ந்தவர்'—*மணக்.*

'பாதம் சேர்ந்தார்க்கு'—*பரிதி*

'அடியை அன்போடு சேர்ந்தார்க்கு'—*காளி.*

'அடியைச் சேர்ந்தார்க்கு—' பரிமேல்
'பாதங்களைச் சேர்ந்தவர்களுக்கு'—கவிராசர்
'சீர்பாதம் சேர்ந்தார்க்கு'—பழைய 1
'பாதங்களைச் சேர்ந்தார்க்கு'—பழைய 2
'அடிகளைப் பற்றிக் கொள்கிறவர்'—வீரமா.
'திருவடிகளை அடைந்தவர்க்கு'—சுகாத்.
'திருவடிகளை இடைவிடாது நினைப்பவர்களுக்கு'—கா. சு.
'திருவடியை அடைந்தவர்க்கு'—திரு.வி.க.
'பாதங்களை இடைவிடாமல் சிந்திப்பவர்க்கு'—சொ.த.
'பாதத்தைக்கதி என்று சேர்ந்தவர்களுக்கு'—இராம.
'அடிகளைச் சேர்ந்தவர்க்கு'—குழந்தை.
திருவடிகளைப் பொருந்தி நினைக்கின்றவர்களுக்கு—மு.வ.
திருவடிகளை இடைவிடாது வழிபட்டு அவற்றின் பண்புருவில் தோய்ந்தவர்களுக்கு—கா.அ.
அடியைச் சேர்ந்தவர்க்கு—தேவநேயர்.

இவருள் 'சேர்ந்தார்க்கு' என்பதற்கு—அடைந்தவர்களுக்கு என்று உரைப்பவர்களைக் காட்டிலும் அன்போடு சேர்ந்தார். இடைவிடாது நினைப்பவர் என்று உரை கூறுகின்ற காளிங்கர், பரிமேலழகர், கா.சு. ஆகியோர் உரை சிறந்தன.

'யாண்டும்'

எவ்விடத்தும்—மணக்., காளி, திரு.வி.க, தேவநேயர்
எக்காலத்தும்—பரிமேல், கவிராசர், பழைய 1, 2, வீரமா, சுகாத், கா.சு., சொ.த., இராம, குழந்தை, மு.வ.,
எத்தகைய சூழ்நிலையிலும்—கா.அ.
எக்காலத்தும் எனக் காலப் பொருள் காண்பவர் பன்னிருவர், எவ்விடத்தும் என இடப்பொருள் காண்பவர் மற்றை மூவர்.

இவற்றுள் யாண்டும் என்பது இரண்டு பொருளிலும் வருதற்கு நுண்பொருள்மாலை ஆசிரியர் மேற்கோளும் காட்டுவதால் இருபொருளும் கொள்வார் சிறப்புடையார், எத்தகைய சூழ்நிலையிலும் எனப் பொதுமைக் குறிப்பும் இக்கருத்தை வலியுறுத்துவதே.

'இடும்பை இல'

'துன்பம் இல்லை'—பரிதி, பழைய1, இராம., குழந்தை, மு. வ., தேவநேயர்
'துயரம் இல்லை'—காளி.
'பிறவித்துன்பங்கள் உளவாகா'—பரிமேல்.

'பிறவியாகிற துக்கம் இல்லை'—*கவிராசர்*

'பிறவித்துன்பம் இல்லை'—*பழைய 2*

'இவ்வுலகத்தீமைகளிலிருந்து விடுபட்டு இருப்பர்'—*வீரமா.*

'அகந்தையால்வரும் துன்பம் இல்லை'—*சுகாத்தியர்*

'துன்பங்கள் உண்டாகமாட்டா'—*கா.சு.*

'துன்பங்கள் இலவாம்'—*திரு.வி.க.*

'துன்பங்கள் இல்லாதனவாகும்'—*சொ.த.*

'அலைக்கழிக்கும் அல்லல்கள் ஊழ்வழி ஏற்படும் துன்பங்கள் உண்டாகமாட்டா'—*கா.அ.*

'இடும்பையில' என்பதற்கு நேர்பொருள் துன்பம் இல்லை என்பதே. பிறவித்துன்பம், பிறவியாகிய துன்பம், பிறவிக்கண் ஆகின்றதுன்பம் என தொகை மொழியை விரிப்பது ஒன்றானே சிறிது மாறுபடுகின்றனராயினும், முடிபு ஒத்தலைக் காண்கிறோம்.

ஊழ்வழி ஏற்படும் துன்பங்கள் என்னும் *அப்பாத்துரையார்* கருத்தும் ஊழ்முதற் கொள்கையை ஒட்டி எழுந்ததாகும்.

'இடும்பை யிலர்' என்பது நச்சர் பாடம் என்பர் *வ.உ.சி.*

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*'வேண்டுதல் வேண்டாமை இலான்'*

கொடுமையும் செம்மையும் வெம்மையும் தண்மையும்
உள்வழி உடையை இல்வழி இலையே
போற்றார் உயிரினும் போற்றுநர் உயிரினும்
மாற்றே மாற்றல் இலையே நினக்கு
மாற்றோரும் இலர் கேளிரும் இலர் எனும்
வேற்றுமை யின்றது போற்றுநர்ப் பெறினே
—*பரிபாடல்*, 4:50-55.

ஆர்வமும் செற்றமும் அகல நீக்கிய...—சிலம்பு, 10:168.

வேண்டாமை வேண்டுவதும் இல்லான் தன்னை
—*அப்பர் தேவாரம்*, திருவாவடு, 9.

தம்பரமல்லவர் சிந்திப்பவர் தடுமாற்றறுப்பார்
—*சுந்தரர் தேவாரம்*, முப்பதும், 8.

கொள்கை கொளாமை யிலாதான்
எள்கல் இராக மிலாதான் — *திருவாய்.* 1.6:5

வேண்டுதல் வேண்டாமை யிலான்
பகைநண் பொடில்லான் — *சீவக.* 3

உரைமணந்தி யாம்பரவ வுண்மகிழ் வாயல்லை
—*துளா.*

அருக அணங்கி ஏத்தி யதுமகிழ் வாயல்லை — சூளா. 188

உவத்தல் காய்தல் உன்திருவுளத்து ஒன்றும் நீயிலையேல்
— மேருமந், 128

ஆழ்த்துதி ஆர்வமும் செற்றமும் நீக்கிய அச்சுதனே
— திருநூற்று. 20

*முற்றும்:*

வேண்டுதல் வேண்டாமை யில்லாத வீரனடி
பூண்டுகிடந்தால் புறத்திருந்த வெங்கூற்றம் போகும்போலும்
—திருக்கலம், 58.

மலர்தலை உலகின் மல்கிருள் அகல
இலகு ஒளிபரப்பி யாவையும் விளக்கும்
பருதியின் ஒருதானாகி முதலீறு
ஒப்பளவு ஆசை முனிவிகந்து உயர்ந்த
அற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிருளிரிய மாண்பொருள் முழுவதும்
—நன்னூல், சிறப்புப்பாயிரம்

**'இடும்பை இல'**

எங்கும் ஏத்திநின்று இன்புறும் அடியரை
இடும்பை வந்தடை யாவே
—சம்பந்தர் தேவாரம், கடிக்குள, 3

சாரா ஏதங்கள்
நீரார் முகில்வண்ணன்
பேரார் ஓதுவார்
ஆரார் அமரரே — திருவாய், 10:5-8

மனத்திடைப் பிறக்கும் துன்பம் வந்துறும் அவற்றின் துன்பம்
தனுத்தனில் பிறக்கும் துன்பம்தான் இயல்பாயதுன்பம்
எனச்சொல்லப்பட்ட நான்கும் யாவர்க்கும் ஆகும்
— மேருமந்தர, 473
(௪)

## 1.5. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு

### உரைப்பகுதி:

*அ) மணக்:* மயக்கத்தைச்சேர்ந்த[1] நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும் சேரா, தலைவனதாகிய மெய்ப்பொருள் சேர்ந்த[2] புகழ்ச்சிச் சொற்களைப் பொருந்தினார் மாட்டு என்றவாறு.

1 மயக்கத்தைச் சேர்ந்த - மயக்கத்தால் விளைந்த - வேற்றுமை மயக்கம்.
2 மெய்ப்பொருள் சேர்ந்த - நிலையான பொருள் பொதிந்த.

ஆ) பரிதி.: மும்மல வித்து ஆகிய பாவமானது[1] சிவகீர்த்தி[2] பாராட்டுவானிடத்து இல்லை என்றவாறு.

இ) பரிப்: தலைவனதாகிய மந்திரங்கள் எனினும் அமையும். புரிதல்-இடைவிடாமல் ஓதுதல். இனி வினைகெடும் என்றது.

ஈ) காளிங்கர்: தம் அறியாமையாகின்ற இருள் காரணமாக வந்து இயைகின்ற நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும்சேரா, அவ் இறைவனால் பெற்ற உபதேசப் பொருளோடு[3] பொருந்திப் புகழ்தங்கி நின்றவரிடத்து என்றவாறு.

உ) பரிமேல்: மயக்கத்தைப் பற்றிவரும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும் உளவாகா; இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினாரிடத்து.

இன்ன தன்மைத்து என ஒருவராலும் கூறப்படாமையின் அவிச்சையை இருள்[4] என்றும் நல்வினையும் பிறத்தற்கு ஏது ஆகலான்[5] இருவினையும் சேரா[6] என்றும் கூறினார். இறைமைக்குணங்கள்[7] இல்ராயினாரை உடையர் எனக்கருதி அறிவிலார் கூறுகின்ற புகழ்கள் பொருள் சேரா ஆகலின் அவை முற்றவும் உடைய இறைவன் புகழே பொருள்சேர்புகழ் எனப் பட்டது. புரிதல்-எப்பொழுதும் சொல்லுதல்.

---

1 மும்மல வித்தாகிய பாவம் - ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்களையும் விதையாகக் கொண்டு தோன்றிய பாவம்.

2 சிவகீர்த்தி - இறைவனது புகழ்.

3 உபதேசப் பொருள் - இறைவனால் அருளிச் செய்யப்பட்ட ஆகமங்கள் முதலிய அறிவு நெறிப் பொருள்கள்

4 இருள்-அவிச்சை. விச்சை-ஞானம். அவிச்சை-அதனின் வேறானது ஒளியின் வேறானது இருள் என்றால் போல விச்சை ஆகிய அறிவின் வேறாயது அவிச்சை ஆகிய அறியாமை. அவித்யா என்னும் வடசொல்லின்திரிபு.

இன்னதன்மைத்து என ஒருவரானும் அறியப்படாமையின் இருள் என்றார் என்பது. ஆயினும், இருள் தன்னைக் காட்டிப் பொருளைக் காட்டாது. அவிச்சை தன்னையும் காட்டாது பொருளையும் காட்டாது. ஆதலால் இருளினும் அவிச்சை கொடியது. ஆயினும் பொருளைக் காட்டாத பொதுமை பற்றி அவிச்சையை இருள் என்றார். "போதம் என்பதே விளக்கு ஒவ்வும் அவிச்சை பொய் பொருளாம்" என்பர் தாயுமான அடிகள்.

5 நல்வினையும் பிறத்தற்கு ஏதுவாதலாவது அதன் பயனாகிய இன்பத்தைத் துய்த்தற்காகப் போக பூமியிலும் இங்கும் பிறக்கச் செய்தலான் பிறவிக்கு ஏதுவாம் என்றார்.

6 இருவினை நல்வினையும் தீவினையும். இவற்றைப் புண்ணிய பாவம் என்பர் வடநூலார்.

7 எங்குமாம் தன்மை (வியாபகத்வம்); முற்றும்உணர்தல் (சர்வஞ்ஞத்துவம்) அளப்பில் ஆற்றலுடைமை (சர்வசத்திமதவம்); உருவம் இன்மை (நிட்களத்துவம்); நோயின்மை (நிராமயத்துவம்); அனைத்தையும் இயக்கும் தன்மை (சர்வபிரேரகத்வம்); ஒப்பின்மை (அத்துவிதீயத்வம்); தன்வயம் உடைமை (சர்வசுதந்தரத்வம்); எல்லாம் உடையனாதல் (சர்வேஸ்ரத்வம்) முதலியனவாம். எண்குணங்களைக் குறித்ததாம்.

*காரி:* நல்வினையும் பிறத்தற்கு ஏது ஆகலின் கூட்டினார். 'சார்புணர்ந்து...நோய்'[1] என்பதும்[2] அது.

*இராமா:* புரிதல் எப்பொழுதும் விரும்பி வாழ்தல். இறைவனை வாழ்த்தினவர் வீடுபெறுவர் என்பது கருத்து.

*ஊ) கவிராசர்:* காதிவினை[3] என்றும் அகாதிவினை[4] என்றும் சொல்லப்படும் இரண்டு வினையும் சேரா, மெய்யாய் இருக்கிற சுவாமியினுடைய கீர்த்தியை விரும்பித் தோத்திரம் பண்ணுகிறவர்களுக்கு.

*எ) பழைய 1:* 'சேராது' பாடம். இருவினை பற்றிய பாவமானது சிவகீர்த்தி[5] பாராட்டுவார் இடத்துச் சேராது.

*ஏ) பழைய 2:* பிறவி மயக்கத்துக்கு[6] ஏது ஆகிய இன்ப துன்பங்களை உண்டாக்கும் நல்வினையும் தீவினையும் ஆகிய இரண்டு வினையும் சேராமல் நீங்கும். இறைவனுடைய மெய்ம்மை சேர்ந்த புகழை விரும்பினார் இடத்து.[7]

*தருமர்:* தம் அறியாமை ஆகின்ற இருள் காரணமாக வந்து இயைகின்ற நல்வினை தீவினைகள் என்னும் இரண்டு வினையும் சேரா. அவ்விறைவனால் பெற்ற உபதேசப் பொருளோடு பொருந்திய புகழ் தங்கினாரிடத்து.

*தாமத்தர்:* அஞ்ஞானத்தால் உண்டாகும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளும் சேரமாட்டா; மெய்த்தன்மை பொருந்திய கடவுளுடைய புகழை விரும்பித் தோத்திரம்[8] பண்ணினார் இடத்து.

---

1 குறள் 359

2 'பிறப்பிற்குக் காரணம்' ஆகலான் நல்வினைப் பயனும் நோய் எனப்பட்டது' -பரிமேலழகர்

3 காதிவினை - இறைவனுடைய கடையிலா அறிவு, கடையிலாக்காட்சி கடையிலா இன்பம் கடையிலா வீரியம் என்பவற்றை மறைக்கும் கர்மங்கள் ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், மோஹநீயம், அந்தராயம் என்பன.

4 அகாதிவினை - உயிர்கள் பல பிறப்பு எடுத்தற்கும் தேவகதி முதலிய நால்வகை கதிகளுள் பிறப்பதற்குக் குறித்த காலம் வரை வாழ்ந்து இன்ப துன்பங்களை நுகர்வதற்கும் ஏதுவாகிய வினை; அது நால்வகைப்படும். நாமகர்மம், ஆயுஷ்யகர்மம், வேதநீயம், கோத்திரம் என்பன.

5 சிவகீர்த்தி - இறைவன் புகழ்

6 பிறவி மயக்கம் - பிறப்பில் விளையும் அறியாமை

7 புரிதல் - விரும்புதல் - விரும்பிச் சொல்லுதல் - அதாவது அன்போடு சொல்லுதல்.

8 'சேராது' பழைய உரை. பாடம். தாமத்தர் பாடம் என்பர் வ. உ. சி இருவினையுஞ் சேராது. என்பது பன்மை எழுவாய் ஒருமைப்பயனிலை கொள்ள வள்ளுவர் ஓதார் ஆகலின் இப்பாடம் பிழைபட்டது.

*நச்சர்:* அஞ்ஞானம் பற்றி எழாநின்ற இருவினைகளும் மெய்த்தன்மை வாய்ந்த சிவபிரானது திருப்புகழைப்பாராட்டு வார் இடத்து சேரா.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'இருள்சேர் இருவினையும் சேரா'*

'தமது அறியாமை ஆகின்ற இருள்காரணமாக வந்து இடை நின்ற நல்வினை தீவினைகள் சேரா'—*தருமர், காளி.*

'மயக்கத்தைச் சேர்ந்த நல்வினை தீவினை என்னும் இரண்டு வினையும் சேரா'—*மணக்.*

'மும்மல வித்தாகிய பாவமானது இல்லை'—*பரிதி*

அஞ்ஞானத்தால் உண்டாகும் நல்வினை தீவினை என்னும் 'இருவினைகளும் சேரா'—*தாமத்தர்*

'அஞ்ஞானம் பற்றி எழாநின்ற இருவினைகளும் சேரா'-*நச்சர்*

'மயக்கத்தைப்பற்றி வரும் நல்வினை தீவினைகள் உளவாகா'
—*பரிமேல்.மு.ரா.அரு.*

'காதிவினையும் அகாதிவினையும் சேரா'—*கவிராசர்*

இருவினை பற்றிய பாவமானது சேராது'—*பழைய 1*

'பிறவிமயக்கத்திற்கு ஏதுவாகிய இன்ப துன்பங்களை உண் டாக்கும் இருவினைகளும் சேரா —*பழைய 2*

'பொருள்களைத் தவறாகப் புரிந்துகொள்ளுதல் புகுத்தும் நல்வினை, கலந்த தீவினைகள் ஒட்டிக்கொள்ளா'—*வீரமா.*

'யான் என்னும் இருள்சேர் மனத்தின்கண் கூற்றும் செயலு மாகிய இருவினைகளும் சேராவாம்'—*சுகாத்.*

'அறியாமையால் வருகின்ற நல்வினை தீவினைகள் என்னும் இருவினைப் பயன்கள் ஆகிய இன்பதுன்பங்கள் சேராவாம்'
—*கா.சு.*

'அறியாமை அவிழ்ந்து ஒன்றும் வினைஇரண்டும் சென்று அடையா'—*திரு.வி.க.*

'அறியாமை சேர்ந்த நல்வினை தீவினை இரண்டும் சேரா'
—*சொ.த.*

நல்வினை தீவினைகளின் பயனாகிய பிறப்பிறப்புக்கள் எனப் பொருள்கண்டு நல்வினையே அறம். அது வீட்டையும் பயக்கும் ஆதலால் அதனைப் பொன்விலங்கிற்கு ஒப்பிடுவது பொருந்தாது எனவும் பரிமேலழகரை மறுப்பர், வ.உ.சி.

'அறியாமையைச் சேர்ந்த இருவினையும் சேரா'—*இராம.*

'அறிவின்மையால் உண்டாகும் பெரிய துன்பங்கள் சேரா'— *குழந்தை*

'அறியாமையான் விளையும் இருவகை வினைகள் சேர்வது இல்லை'—*மு.வ.*

'தன்னல மயக்கம் சேர்ந்த நல்வினை தீவினைகளாகிய இரு வினைகளின் விளைவும் வந்து ஒட்டா'—*கா.அ.*

'மயக்கம் செய்யும் நல்வினை தீவினை என்னும் இருவினையும் இல்லாதனவாம்'—*தேவநேயர்*

இருள் — மும்மலம், அறியாமை, அஞ்ஞானம், மயக்கம், பிறவிமயக்கம், பொருள்களைத் தவறாகப் புரிந்து கொள்ளு தல், யான் என்னும் இருள்சேரும் மனம். தன்னல மயக்கம் எனப் பலவகையான உரை கொள்ளப்பெறுகிறது. உண் மையை உணரவிடாது தடுக்கும் வகையில் எல்லா உரை களும் ஒத்த கருத்தின. ஆயினும் *வீரமாமுனிவர்* கூற்றில் இருளுக்குப் பொருட்களைத் தவறாகப் புரிந்துகொள்ளுதல் என்னும் விளக்கமும் இயைபு உடையதாக இல்லை. அறி யாமை தன்னையும் காட்டாது பொருளையும் காட்டாது. அது ஒன்றை ஒன்றாகப் புரிந்து கொள்வது என்பது மிகச் சிந்திக்கத்தக்க உரையாகும். ஒன்றை ஒன்றாகப் புரிந்து கொள்ளுதலைத் திரிபு உணர்ச்சி என்பர். மரக்கட்டையை மனிதன் என்று அறிவது போல, இதில் ஏதோ ஒன்று உள்ளது என்று பொதுவகையில் முன்னர் உணரப்பெற்றுப் பின்னர்த் திரிபு உணர்ச்சியால் மரக்கட்டையை மனிதன் என்று துணிந்தானாம்—இது உணர்வும் உணர்வின்மையும் ஒரு பொருட்கண் நிகழ்ந்ததாம். இது இருள் ஆகாது. ஆதலால் இருள் என்ற சொல்லுக்கு இவர்தரும் உரை சிந்திக் கற்பாலது என்றாம்.

'மும்மல வித்து ஆகிய பாவம்' என்னும் *பரிதியார்* உரை மும்மல வித்தால் ஆகிய பாவம் என்று இருந்தால் நல்லது. ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களுள் கன்மம் என்பது வினை ஆதலின் வினை, வினைக்கு வித்தாகுமா? என்ற ஐயம் எழும். ஆகவே மும்மலங்களுள் இருள் என்ற சிறப்புப்பெயர் ஆணவமலம் ஒன்றையே உணர்த்துதலையும் அதன் காரியம் ஆகிய அறியாமையில் உயிர்கள் அல்லற்படு தலையும் அதன் வலியை ஒடுக்க மாயை என்னும் மலம் உயிர் களைச் சார்ந்து நின்று வினைப்போகங்களைக் கூட்டியும் ஊட்டியும் உதவுதலையும் அங்ஙனம் வினைப்போகங்களை நுகரும்போது தற்போதமுனைப்பால் நுகரின் இருவினைகள் விளைதலையும் தத்துவநூல்களில் கண்டு இவ்வுரை ஏலாமை

தெரிக. வித்தால் ஆகிய எனின் ஏற்புடையது. அக்கருத்தி னும் பாவம்தான் விளையும் என்பதும் ஏற்புடையது அன்று. கன்மமலத்துள் நற்கன்மம் தீக்கன்மம் விளைதலின் பாவம் ஒன்றே விளையும் எனல் இயலாது. இதில் பாடம் பிழை பட்டிருக்க வேண்டும்.

'*யான் என்னும் இருள்சேர் மனம்*' என்னும் *சுகாத்தியர்* கருத்து அகங்காரம் ஒன்றையே இருள் என்று கருதுகிறார் என்பதைக் காட்டுகிறது. 'கூற்றும் செயலுமாகிய இருவினை என்பது புதிய கருத்து. பொருந்துமேல் ஏற்க.

இருவினை—நல்வினை தீவினை, பாவம், காதிவினை அகாதி வினை, நல்வினை கலந்த தீவினைகள் சொல்லும் செயலும் ஆகிய இருவினைகள், இன்பதுன்பங்கள், பெரியதுன்பங்கள் என உரை காண்கின்றனர். இவற்றுள் நல்வினை தீவினை எனப் பொருள் கோடலினும், அவற்றின் பயனாகிய இன்ப துன்பங்கள் எனக்கோடலே இயைபு உடைத்தாகும். வினை களை அவற்றின் பயனாலன்றி அறியலாகாமையின் என்க. வினை துன்பம்; ஆகுபெயர் என்பர் *குழந்தை*.

நல்வினை கலந்த தீவினையும், தீவினை கலந்த நல் வினையும் ஒன்றில் ஒன்று கலவாமையானும் பயன் அளிக்கும் காலம் தனித்தனியே நுகரப்படுதலானும் இதன் பொருள் நோக்கு அறியக் கூடவில்லை.

'மயக்கம் செய்யும் நல்வினையும் தீவினையும்' என்றும் நல்வினையும் பிறவிக்கு ஏதுவாம் என்பது கொண்முடிபாத லின் இருவினையும் சேரா என்றும் கூறிய தேவநேயர் தமது *தமிழர் மதத்தில்* (பக்.91) ''இருள்சேர் இருவினையும் என்றது தெரிந்தும் தெரியாதும் செய்யும் இருவகைத் தீவினை களையே'' என்றது ஆய்வுக்குரியது. முன்னோடு பின் முர ணானது.

'*பொருள் சேர்புகழ்*'

'இறைவனால் பெற்ற உபதேசப்பொருளோடு பொருந் தியபுகழ்'— *தருமர், காளி*.

'தலைவனது ஆகிய மெய்ப்பொருள் சேர்ந்த புகழ்ச்சிச் சொற்கள்'— *மணக்*.

'சிவகீர்த்தி'— *பரிதி, பழைய 1*.

'மெய்த்தன்மை இயைந்த சிவபிரானது திருப்புகழ்'

— *நச்சர்*

'இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழ்'— *பரிமேல், பழைய 2*.

'மெய்யாய் இருக்கிற சுவாமியின் உடையகீர்த்தி'
— *கவிராசர்.*

'மெய்யான புகழ். அதாவது கடவுட்குணங்கள் முழுதும் அமைந்தபுகழ்' — *மு.ரா.அரு.*

'கடவுளைப் பற்றிய உண்மையான எண்ணத்துடன் தொடர்புடைய புகழ்'— *வீரமா.*

'கடவுளுக்கு நாம் பொருள்எனச் சேரும் கீர்த்தி'
— *சுகாத்தி.*

'அருளைச் சேர்ந்த புகழ்' என உரைகண்டு இறைவனுக்குப்பொருள் அருளேயாம் என்பர் — *வ.உ.சி.*

'தலைமைக்குணங்களை உடைய கடவுளது மெய்ம்மையான புகழ்'— *கா.சு.*

'கடவுள் இயற்கையைச் சேர்ந்துள்ள புகழ்'— *திரு.வி.க.*

'கடவுளின் உண்மையுள்ள புகழ்'— *செ.த.*

'வேண்டுதல் வேண்டாமை இல்லாமல் எல்லாரையும் சமமாகக் கருதிக் காக்கிற கடவுளது பெருமை'— *இராம.*

'இறைவனது மெய்ப்பொருள் சேர்ந்த புகழ்'— *குழந்தை.*

'கடவுளின் உண்மைப்புகழ்'— *மு.வ.*

'கடவுளுடைய இனநலமாகிய மெய்ம்மை வாய்ந்த நற்பண்பு'— *கா.அ.*

'இறைவனின் மெய்யான புகழ்'— *தேவநேயர்.*

இவ்வுரைகள் இறைவன் புகழ் என்றும் அழியாதது; கொடுக்கிலாதானைப் பாரியே என்றாற்போல ஏற்றிக் கூறப்பட்டன அல்ல என்ற கருத்தையே வழங்குதல் காண்க. இவற்றுள் 'இறைவனது மெய்ம்மை சேர்ந்த புகழ். உண்மையான புகழ் என்பனவும், அக்கருத்து உடையனவும் சொல் அமைதிக்கு நேரிய பொருள். 'இறைவனால் பெற்ற உபதேசப் பொருளோடு பொருந்திய புகழ் என்ற *தருமர் காளிங்கர்* உரைகள் இறைவன் புகழும் அவனிடம் பெற்ற உபதேசப் பொருளோடு பொருந்தினால்தான் மெய்ப்புகழ் ஆகும் என்ற கருத்தை ஆக்குதலின் ஆழமும் நுணுக்கமும் உடையதாகும். *கவிராசபண்டிதர்* உரை பொருள்சேர் இறைவன் புகழ் எனக் கொண்டு கூட்டி உரைக்கப்பெற்றதாம். இதனால் மெய்யாய் இருத்தல் இறைவனுடைய தன்மையாம். அவனுடைய கீர்த்திக்கும் ஆகலாம் என்று கருதி இருப்பர் போலும். *வீரமாமுனிவர்* கடவுளை உண்மையாக எண்ணவேண்டும் அவ்வெண்ணத்துடன்கூடிய புகழே பொருள்சேர்புகழ் என எண்ணுபவருடைய தன்மையையும் இணைத்துத் தருகிறார்.

கடவுளுக்கு உள்ள கீர்த்தி உயிர்களாகிய நாம் அவனுடைய உடைமையாகச் சேர்தலால் என்ற கருத்தைத் தருகிறது. சுகாத்தியரின் உரை 'கடவுள் இயற்கையைச் சேர்ந்துள்ள புகழ்' என்ற திரு.வி.க.வின் சொல் அமைதி கடவுளும் இயற்கையும் ஒருபொருளே என்ற கருத்தையும் நமக்கு உதவுகிறது.

*'புரிந்தார்'*

'தங்கினார்'— *தருமர்.*

'பொருந்தினார்'— *மணக்.*

'தங்கிநின்றவர்'— *காளி.*

'விரும்பித்தோத்திரம் பண்ணினார்'-*தாமத்தர், கவிராசர்.*

'பாராட்டுவார்'— *பரிதி, நச்சர், பழைய 1.*

'விரும்பினார்'—*பரிமேல், பழைய 2, சுகாத்., திரு.வி.க., சொ.த., குழந்தை, வீரமா., தேவநேயர்.*

'இடைவிடாது அன்போடு சொல்லுவார்'— *கா.அ.*

'விரும்பி அவனை வணங்குகிறவர்'— *இராம.*

'விரும்பி அன்பு செலுத்துபவர்'— *மு.வ.*

தங்கினார் எனினும் விரும்பினார் எனினும் சொல் வேறுபடினும் கருத்துப்பொருளாய் ஒருநோக்கு உடையன. பாராட்டுவார், தோத்திரம் பண்ணுவார் போன்ற அனைத்தும் வாயினால் புகழ்தலைக் குறிப்பன. வணங்குகிறவர் என்பதில் வணங்குதல் மெய்ச்செயல். இவற்றுள் 'இடைவிடாது அன்போடு சொல்லுவார்' என்பதே சிறந்தது.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*முற்றும்:*

இருமை வினையும் இல ஏத்துமவை — *பரிபாடல்,* 13:48

...பெருமான்
ஆயபுகழ் ஏத்தும் அடியார்கள் வினையாயினவும் அகல்வதெளிதே
— *சம்பந்தர் தேவாரம், மாகறல் 9*

அழுதுவினைக எல்லாப்பாவறைந்தோய் நின்சொலறைந்தார்கள்
பழுதி னறுநெய்க் கடற்சுடர்போற் பல்லாண்டெல்லாம் பரியாரே
— *சீவக.* 320

இருள்புரி உலகஞ் சேரா இயல்நெறி பயந்த பெம்மான்
பொருள்புரி விடிவு காண்பார் புண்ணிய உலகங் காண்பார்
*சூளா.* துறவு. 27

வென்றான் வினையின் றொகையாகி விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின் னொழியாது முற்றும்

சென்றான் திகழுஞ்சுடர் சூழொளிமூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ் பணிந்தார் வினைநீங்கி நின்றார் — *சூளா.* 1
...தீவினை யிரண்டு தீர்ந்தோம்
கற்றைவார் சடையான் கோலம் காட்டியாட் கொண்ட அன்றே
— *திருவிளை:* வாதவூ உபதே. 33

*'இருவினை'*

திலகமாய திறலறி வன்னடி
வழுவில் நெஞ்சோடு வாலிதி னாற்றவும்
தொழுவல் தொல்வினை நீங்குக என்றியான் — வளை. 1.
இருள்புரி வினைகள் சேரா(து)இறைவனது அறத்தை எய்தின்
— *யசோதர.* 309

ஆதிநாள் புணர்
ஏதில் வல்வினை
கோதில் வாமனை
யோதில் ஒடுமே —*திருக்கலம்.*

*'புகழ்புரிதல்'*

பொய் யஞ்சி வாய்மைகள் பேசிப் புகழ்புரிந்தார்க்கருள்
செய்யும் — *அப்பர் தேவாரம்,* திருவாரூர் 10
வினைவல் இருளென்னும்
முனைகள் வெருவிப்போம்
சுனைநல் மலரிட்டு
நினைமின் நெடியோனே — *திருவாய்.* 10:5-10
தாவரு மிருவினை செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே — *கம்பரா.* 356

*'இறைவன்'*

சித்தன் பெரியவன் செம்மல் திகழொளி
இறைவன் குரவன் இயல்குணன் எங்கோன்
— *சிலம்பு,* 10.184
அறுவர்க் கிளைய நங்கை இறைவனை
ஆடல்கண் டருளிய அணங்கு சூருடை — *சிலம்பு,* 20-37
சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே — *சிலம்பு,* 24.7.2.
இருந்தான் என் உள்ளத்து இறைவன் — *ஆழ்வார்*

*1.6. பொறிவாயி லைந்தவித்தான்*[1] *பொய்தீ*
*ரொழுக்க*
*நெறிநின்றார் நீடுவாழ் வார்.*

*உரைப்பகுதி:*

அ) *மணக்:* மெய்வாய் கண் மூக்குச்செவி என்னும் ஐம் பொறிகளின் வழியாக வரும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்னும் ஐந்தின்கண்ணும் செல்லும் மனநெகிழ்ச் சியை[2] அடக்கினானது மெய்யற்ற ஒழுக்க நெறியிலே நின்றா ரன்றே நெடிது வாழ்வார் என்றவாறு.

இது சாவில்லை என்றது.

ஆ) *பரிதி:* எ-து[3] சத்த பரிச ரூப ரச கந்தம் என்கிற பொறியை வழியாக உடையவற்றிற்கு மனசைப் போக்காமல் காக்க வல்லார் இகபரம்[4] இரண்டிலும் நெறிநின்று அநேக காலம் வாழ்வர் என்றவாறு.

இ) *பரிப்......*

ஈ) *காளி:* சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்கின்ற ஐம் பொறிகளை நுகர்தற்கு வழிக்கருவியாகிய மெய் வாய் கண் மூக்குச் செவி என்கிற ஐம்பொறிகளையும் அகத்தடக்கி இறை வனது உபதேசமுறைமையாகின்ற நல்லொழுக்கத்தின்கண் வழிப்பட்டு நின்றவர்[5] முத்தராவர் என்றவாறு;

உ) *பரிமேல்:* மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் பொறிகளை வழியாக உடைய ஐந்தவாவினையும்[6] அறுத் தானது[7] மெய்யான ஒழுக்க நெறி[8] யின்கண் வழுவாது நின் றார் பிறப்பின்றி எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ் வார்.[9]

---

1 பொறிவாயில் ஐந்தவித்தான் - இருஷிகேசன் என்ற வடசொல்லின் தமி ழாக்கம்: இருஷிகேசன் என்பது திருமாலின் பன்னிரண்டு பெயர்களில் ஒன்று. இதன்பொருள் இந்திரியங்கட்கு தலைவன் என்பது.

2 மனநெகிழ்ச்சி-அவா.

3 சத்த முதலிய ஐந்தும் பொறிகளை வழியாகக்கொண்ட புலன்கள் என்பது கருத்து

4 இகபரம் - இம்மை, மறுமை; பரம் என்றது மேலானதாகிய வீட்டுலகை

5 அகத்தடக்கி வேதநெறி நின்றவன் நீடுவாழ்வான் என்றமையின் ஐந்தவித் தான் என்றது மக்களைச் சுட்டுதல் காண்க.

6 அவா - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தின்மேல் செல் கின்ற ஆசை.

7 அவித்தல் - அறுத்தல்; "ஒரு மூன்று அவித்தோன்" (சிலம்பு. அடியார்க்கு நல்லார்) அவர் இடையீடு இன்றி ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து வருதலின் 'அறுத்தான்' என உரைகண்டார் போலும்.

8 ஒழுக்கநெறி - வேதநெறி?

9 பிறப்பு இன்றி வாழ்வார் என்றது வீடுபேறு எய்துவர் என்றவாறு.

புலன்கள் ஐந்தாகலான் அவற்றின்கட் செல்கின்ற அவா வும் ஐந்தாயிற்று. ஒழுக்கநெறி ஐந்தவித்தானாற் சொல்லப் பட்டமையின் ஆண்டை ஆறனுருபு செய்யுட்கிழமைக்கண் வந்தது; 'கபிலரது பாட்டு'[1] என்பது போல. இவை நான்கு பாட்டானும் இறைவனை நினைத்தலும், வாழ்த்தலும், அவன் நெறிநிற்றலும் செய்தார் வீடுபெறுவர் என்பது கூறப் பட்டது.

*காரி:* ஒழுக்கநெறி பாரிபாட்டு என்றாற்போலாது கபில ரது பாட்டு என்றாற் போலும் செய்யுட்கிழமை. 'பற்றுக பற்றற்றான் பற்றினை'[2] என்பதும் அது.[3] 'தெரிந்து மொழிச் செய்தியின்'[4] என்னும் ஆறாவதன் சூத்திரவிதி பெற்று இடத்து நிகழ்பொருள் என்னும் பிறிதின் கிழமை யாயிற்று.

*இராமா:* ஐந்தவித்தானது என்கிற ஆறாம் வேற்றுமை உருபு செய்யுள் பிறிதின்கிழமைப் பொருள்பட நின்றது.

ஊ) *கவிராசர்:* மெய், வாய், மூக்கு, கண், செவி என்று சொல்லப்பட்ட ஐந்து பொறிகளை வழியாக உடையமித்யை அறுத்தவன்[5] சொன்ன குற்றமில்லாத நெறியிலே வழுவாமல் நடந்தவர்கள் ஒருகாலமும் அழிவில்லாமல் இருக்கிறமோக்ஷத் தில் எந்தக் காலமும் வாழ்வார்கள்.[6]

ஏ) *பழைய 1:* பொறியின் வழியே புலன் போகாமல் சிவ னுடைய பாதத்திலே தன் அறிவைச் செலுத்தப்பட்ட பேர் இகபரத்திலும் நீடுவாழ்வார்.

ஏ) *பழைய 2:* மெய்வாய் கண் மூக்குச் செவிகள் என்னும் பொறிகள் வழியாக உடைய ஐந்து அவாவினையும் விட்டு நீங்கின கடவுளுடைய மெய்யான ஒழுக்க நெறியின்கண் வழு வாது நின்றார் பிறவித்துன்பம் இல்லாமல் எக்காலத்தும் ஒரு தன்மையராய் வாழ்வார்.

---

1 'கபிலரது பாட்டு' என்பது போல அவித்தான் ஒழுக்கநெறி என்பது செய்யுட்கிழமைக்கண் வந்தது. அது ஒலியாகிய பாட்டைக் குறிக்குமாயின் செய்யுள் தற்கிழமையாம். ஏட்டில் எழுதியபாட்டைக் குறிக்குமாயின் பிறி தின் கிழமையாம். அவற்றுள் இது பிறிதின் கிழமை.

2 குறள் 350

3 பற்றற்றான் பற்று' என்புழி ஆறனுருபு செய்யுட்கிழமைக்கண் வந்தது—பரிமேலழகர். 4 தொல். சொல். 81

5 மித்யை—பொய். இவர் சைனர் ஆதலின் ஐந்தவித்தான் அருகனே என்றனர்.

6 தாமத்தர் உரை இவர் உரையுடன் ஒத்துள்ளது.

*தருமர் உரை:* சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்கின்ற ஐம்புலன்கொள்ளுதற்கு வழிக்கருவியாகிய மெய், வாய், கண், மூக்கு, செவி என்கின்ற ஐம்பொறிகளையும் அகத்தடக்கிய இறைவனது உபதேச முறைமையாகின்ற நல்லொழுக்கத்தின்கண் வழிப்பட்டு நின்றவர் முத்தராய் நெடுங்காலம் வாழ்வர். (தமிழ்ப் பொழில்துணர் 6 பக். 460)

அகத்தடக்கிய இறைவன் - ஐவகை அவாக்களுக்கும் வழியான பொறிகளை அகத்தடக்கியவன் என்பர்.

*நச்சர்:* ஐம்பொறிகளின் வழியாக நுகரப்படும் ஐம்புலன்களையும் வென்றானது, பொய்நீங்கிய ஒழுக்க நெறியில் நின்றார், இகத்திலும் பரத்திலும் நெடுங்காலம் வாழ்வர்.

*தாமத்தர்:* உடம்பு, வாய், கண், காது, மூக்கு, என்று சொல்லப்பட்ட ஐந்து பொறிகளை வழியாக உடைய ஐந்து ஆசைகளையும் அறுத்தவன் சொன்ன குற்றமில்லாத நேர் நெறியிலே, வழுவாமல் நடந்தவர்கள், ஒருகாலமும் அழிவில்லாமல் இருக்கின்ற மோட்சத்திலே எக்காலமும்வாழ்வார்கள். (தமிழ்ப்பொழில் துணர் 6. பக். 460.)

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'பொறிவாயில் ஐந்தவித்தான்'*

'ஐம்பொறிகளின் வழியாக வரும் சுவை முதலிய ஐந்தின் கண்ணும் செல்லும் மனநெகிழ்ச்சியை அடக்கினவனது'
—*மணக்.*

'பொறியை வழியாக உடையவற்றிற்கு மனசைப் போக்காமல் காக்க வல்லார்' —*பரிதி.*

'சுவை முதலான ஐம்புலன்களை நுகர்தற்கு வழிக்கருவியாகிய ஐம்பொறிகளையும் அகத்தடக்கி'—*காளி.*

'பொறிகளை வழியாகவுடைய ஐந்தவாவினையும் அறுத்தவனது' —*தாமத்தர், நச்சர், பரிமேல். மு. ரா. அரு.*

'ஐம்புலன்களை நுகர்தற்கு வழிக்கருவியாகிய ஐம்பொறிகளையும் அகத்தடக்கிய இறைவனது'—*தருமர்.*

'பொறிவழியே புலன்போகாமல் சிவனுடைய பாதத்திலே தன்னறிவைச் செலுத்தப்பட்டபேர்'—*பழைய 1.*

'பொறிகள் வழியாகவுடைய ஐந்தவாவினையும் விட்டு நீங்கின கடவுள்'—*பழைய 2.*

'பொறிகளை வழியாகவுடைய மித்யை அறுத்தவன்'
—*கவிராசர்.*

'ஐம்புலன்கள் வழியாக உள்ளத்திற்புகுந்து கொண்டிருக்கும் ஐந்து பற்றுதல்கள் இல்லாதவன்'—*வீரமா.*

இவருள் 'அவித்தான்' என்பது கடவுளைக் குறிப்பதாக மணக்குடவரும், காளிங்கரும், தாமத்தரும், நச்சரும், தருமரும், பரிமேலழகரும் கருதுகின்றனர். 'காக்கவல்ல மக்கள்' எனப் பரிதியாரும், பழையஉரை (1)ம் கருதுவர். பின்னின்ற இருவரும் கருத்துப்பொருள் கண்டவர்கள் ஆதலின் இங்ஙனம் கூறினராதல் வேண்டும். அங்ஙனமே மனம் பொறிகளைக் கருவியாகக்கொண்டு புலன்களை நுகர, அதனால் அவாவும் நுகரப்படுகின்ற புலன்வேறுபாட்டால் ஐந்தாகின்றன. இதனைப் பல்வேறு உரைகளால் பெறவைக்கின்றனர் உரையாசிரியர்கள். 'மனநெகிழ்ச்சி' என்ற மணக்குடவர் கருத்து ஓட்டம், தன்நிலையில் ஒன்றையும் பற்றாது நின்ற மனம் கண்வழிச்சென்று அழகையும் நிறத்தையும் பற்றியபோது நெகிழ்ச்சியை யடைகிறது. அதுவே அவா என்ற மனவியலை நுனித்தறிய வைக்கிறது.

'ஐம்பொறிகளையும் அகத்தடக்கி, இறைவனது உபதேசமாகியஒழுக்கநெறியில் நின்றார்' என்ற காளிங்கர், இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கினவன். அவன்பொறிகள் புலன்களைச் சென்று பற்ற அதனால் அவன் 'விகாரியாகான்'; தன்னிலை திரியாமை அவன் இயல்பு ஆதலால் பொறியடக்கம் அவனைச் சார்ந்தது என்றல் சிறிதும் இயையாது. ஆதலால் அவன் நெறிகளைக் கடைப்பிடிப்பாரே பொறிகளை அகத்தடக்க வேண்டியவர்கள்; எனக் கருதிப் பொறிவாயில் ஐந்தவித்தானாகி, (இறைவனது) ஒழுக்க நெறிக்கண் நின்றார் என நம்மைக் கருத வைக்கின்றாராதல் வேண்டும்.

'ஐம்புலன்கள் வழியாக' என்னும் வீரமாமுனிவர் கருத்து பொறிகளாகிய கருவிக்கும் புலன்களாகிய காரியத்திற்கும் ஒற்றுமை பற்றிக் கூறியதெனல் வேண்டும்.

'அடியாரது புலப்பொறி வழியிடத்தவாய ஐவகை அவாக்களையும் ஒழித்த கடவுளது.' —*சுகாத்தியர்.*

'ஐவகை யாசைகளையும் இயல்பாகவே இல்லாதவன்' —*கா.சு.*

'ஐம்பொறிகளை வழியாக உடைய ஐம்புலன்களையும் அடக்கினவனது' (ஒழுக்கநெறி)—*திரு.வி.க.*

'அநாதியே அவித்தவன்'—*சொ.த.*

'ஐந்து இந்திரிய ஆசைகளும் இல்லாதவனாகிய இறைவனுடைய'—*இராம.*

'ஐம்பொறி வாயிலாகச் செல்லும் ஐம்புலன்களையும் அடக்கினவன்.'—குழந்தை.

'ஐம்பொறிகளையும் வழியாகக்கொண்டு, புறப்பொருள் மீது படரும் ஐம்புல அவாக்களையும் தடுத்தடக்கி யாட்கொண்டகடவுள்.'—கா.அ.

இவருள் சுகாத்தியர், 'அடியார்களுக்கு அவாக்களை நீக்கியவன் இறைவன்; அவனது ஒழுக்கநெறி நின்றார் நீடு வாழ்வார்' எனப் புதிய திருப்பம் ஒன்று உதவுகிறார். கா.சு. பிள்ளையும், சொ.த. வும், நாமக்கல் இராமலிங்கனாரும் வழங்கும் உரைகள், இறைவன் இயல்பாகவே அவா அற்றவன் என்ற கருத்தைப் பயப்பதால் சிறந்தவை. அவற்றுள்ளும் "அருள் உருவம் அன்றி மாயா உருவம் இறைவற்கு இல்லை; ஆதலால் மாயா உருவத்திற்குள்ள பொறிகளும் இல்லையாம்; ஆகவே தூய வுணர்வன்றி மாயாசம்பந்தமான மாயா உணர்வும் இல்லையாம்; ஆகவே மாயையிற்றோன்றும் அவாவும் இல்லையாயிற்று. இவ்வுண்மை போதரவே பொறிவாயிலாக எழும் ஐந்து உணர்வையும் அவித்தவன் என்றார்" என்ற தண்டபாணியார் விளக்கமும் அரண் செய்கிறது. சுகாத்தியர் கருத்தும் இறைவற்கு அவா இயல்பாகவே இல்லை. அடியார்களின் அவாவை அவன் அடக்குகிறான் என இக்கருத்தையே வலியுறுத்துகிறது.

குழந்தைஉரை அவாவின்மை என்ற உயர்ந்த குணத்தையுடைய மனிதனையே உணர்த்துகிறது. அவன் கூறிய ஒழுக்க நெறிக்கண் நிற்கின்ற ஏனையோர் நிலமிசை நீடுவாழ்வார் என்கிறது. இது 'உயர்ந்தோரே உலகத்திற்கு இறை' என்ற கருத்தின்தாய்ப் பழைய உரைகளிலிருந்து மாறுபடுகிறது.

'அவித்தான்'

'அடக்கினவன்' 'காக்கவல்லவன்' 'அறுத்தவன்' 'விட்டு நீங்கினவன்' 'இல்லாதவன்' 'ஒழிந்த கடவுள்' எனப்பல சொற்களாக உரைகாண்பதை மேலே கண்டோம். இவற்றுள் 'இல்லாதவன்' என்ற பொருளே சிறந்தது.

மு. கோவிந்தசாமி, அவித்தல் — பக்குவப்படுத்துதல் எனின் ஒரைந்தும் காப்பான் என்பதோடும், காத்தல் எனின் வேண்டுதல் வேண்டாமையோடும் சென்றியைகின்றன. அவித்தல் எனின் உலக நலங்கருதியும் தன்னலங் கருதியும் இருத்தலையும் காண்க என்பர்.

*'பொய்தீர்ஒழுக்க நெறி'*

'பொய்யற்ற ஒழுக்கநெறி' 'நெறிநின்று' 'உபதேச முறைமையாகிற நல்லொழுக்கத்தின்கண்' 'மெய்யான ஒழுக்கநெறிக்கண்' என்பார்கள் பழைய உரையாசிரியர்கள் அனைவரும்.

'குற்றமற்ற ஒழுக்கநெறியின்கண்' என்பர் கவிராச பண்டிதர். 'தவறுகட்கு இடங்கொடாத நெறி' என்பர் வீரமாமுனிவர். 'யாங்கணும் பொய்மையில்லாத வழி' என்பது சுகாத்தியர் உரை. 'பொய்த்தல் அறியாத ஒழுங்கான இயல்பை உணர்ந்து நடக்கிறவர்கள்' என்பது குழந்தையுரை; இவைகள் அனைத்தும் சொல்லாலும், சொற்பொருள் விரித்தலாலும் வேறு வேறாகத் தோன்றினும் கருத்து வகையில் ஒத்தனவே. இவற்றுள், கடவுளது நெறி கடவுளிடமிருந்து வழி வழியாக உபதேசமுறைமையான் வரும்; அதுவே நல்லொழுக்கம் ஆவது; அது சிறிதும் தவறுகட்கு இடந்தராதது என்ற கருத்துதவும் உரைகள் சிறந்தனவாம்:

*'நீடுவாழ்வார்'*

'நெடிதுவாழ்வார்; சாவில்லை என்பது' என்பர் *மணக்குடவர்*. 'அனேக காலம் வாழ்வர்'—*பரிதி*. 'முத்தராவார்' —*தருமர், காளிங்கர்*.

'பிறப்பின்றி எக்காலத்தும் ஒருதன்மையராய் வாழ்வார்' —*பரிமேலழகர், மு.ரா.அரு., பழைய* 2. 'இகத்திலும் பரத்திலும் நெடுங்காலம் வாழ்வார்' — *நச்சர், பழைய 1*.

'ஒருகாலமும் அழிவில்லாத மோட்சத்திலே வாழ்வார்' கவிராசபண்டிதர். 'என்றும் மகிழ்ந்து இருப்பார்' - சுகாத்தியர். 'சுகமாக வாழ்க்கை நடத்துவார்கள். உலகில் நிலை பெற்று வாழ்வார்' - குழந்தை.

உரையாசிரியர்களில் இந்தவுலகில் நீடுவாழ்வார் என்பவர்களும், முத்தியுலகில் வாழ்வார்கள் என்பவர்களும், இகபரத்திலும் வாழ்வார்கள் என்பாரும் ஆக முத்திறப்படுகின்றனர். 'மகிழ்ந்திருப்பர்' என்பர் ஒருவர் 'நீடு வாழ்வார்' என்ற சொற்றொடர் அவரவர்கள் விருப்பிற்கேற்ப இருமையிலும் இன்பமுற்றிருப்பதற்கு உபாயம் உரைப்பதாகின்றது.

'ஐந்து அவித்தான்' என்பது, இயல்பாகவே தூய அறிவினன் ஆகிய இறைவற்குப் புகழ்மை தருவதாகாது எனக் கருதிய திரு.வி.க. அவர்கள் ஐந்தவித்தான் குருநாதனே என்பார்கள்.

பண்டிதமணி, பொறிவாய் இல் ஐந்து அவித்தான் எனச் சொற்சிதைவுகண்டு, பொறிகளை வாயிலாக இல்லாத புலன்கள் ஐந்தையும் அவித்தவன் எனப் பொருள்கொண்டு இறைவனையே குறித்தது என்பர்.

'ஐந்தவித்தான்' என்னும் இத்தொடர் நீத்தார் பெருமையினும் வருகிறது (குறள் 25). தன்வயத்தனாதல் முதலான எண்குணங்களை உடைய ஈசற்குப் பொறியடக்கம் ஒரு சிறப்பாகாது. நீத்தார்க்கும் இறைவர்க்கும் உரிய பொதுமைச் சொல்லால் இறைவனைக் குறித்தார் என்றதில் ஒரு தனிச் சிறப்பும் இன்று. இயல்பாகவே பாசங்களின் நீங்கி, வேண்டுதல் வேண்டாமையிலாதானை, வேண்டுதலை யடிப்படையாகக் கொண்டு விளைந்து பின் வேண்டாமையில் முடிகின்ற ஐந்தவித்தல் சிறப்பியல்பும் ஆகாது; அன்றியும் அவனாற் கூறப்படுகின்ற ஒழுக்கநெறியும் ஐந்தவித்தலையே உணர்த்துகிறது. ஆதலால், ஒருவன் ஐந்தவித்தவனாய் இறைவன் கூறிய ஒழுக்கநெறியில் வழுவாது நிற்பானாயின் அவன் நீடு வாழ்வான் என்ற பொருளே இக்குறட்பாவிற்குச் சிறப்புடையதாகும். ஐந்தவித்தான் என்பது வினையாலணையும் பெயராய் எச்சமாயிற்று.

இப்பொருள் கண்ட உரையாசிரியர்கள் ஒழுக்கநெறி யாராற் கூறப்பட்டது என்ற ஐயத்தைக் களைய 'இறைவனால்கூறப்பட்டது' என எழுவாயை வருவித்துக்கொண்டனர்.

தருமர் முதலிய சைனமரபின் உரையாசிரியர்கள், மக்களில் ஐம்பொறிகளை யடக்கி, மாரனை வென்ற வீரர்களே கடவுளாவர் என்ற கொள்கையினராதலின் அவர்கட்கு ஐந்தவித்தான் என்பது கடவுளையும் மக்களையும் உணர்த்தும் எனல் ஏற்பு உடைத்தாகும்.

'ஐம்பொறிகட்கும் புலன்களுக்கும் ஈசனாதலின் தம் விருப்பப்படி அடக்கியாள்பவன் என்பது கருத்தாம்' என்றது வைணவக் கோட்பாடாம் எனின் அவித்தான் என்பது அப் பொருளைத் தருமா? என்பது சிந்தித்தற்கு உரியதாம்.

எல்லீஸ் துரையவர்களும் 'ஐந்தவித்தல் இறைவர்க்கு ஏற்புடையதன்றென எண்ணியே பிறருடைய ஐம்பொறிகளையும் அவித்தவன்' என்றனர். சிந்திக்க.

'பொறிகளை வாயாக இல்லாத ஐந்தவித்தானாகிய இறைவன்' என்ற உரையோ பொறிகளை வாயிலாகக் கொள்ளாதவழிப்புலன்கள் ஐந்து என்ற தொகை பெறாமை தெளிவு.

உயிரின் உணர்வு மனமாகிய உட்கருவியைத் துணைக் கொண்டு சென்று பற்றும். அவா ஐம்பொறிகளையும் வழி யாகக் கொண்டு சென்று பற்றுவதாலேயே ஐந்தாகிறது. இல்லையேல் அவா ஐந்தாகலும் இல்லை என்க.

இவை யனைத்தையும் எண்ணி, மக்கள் ஐந்தவித்தார் ஆகி (இறைவன் அருளிய) ஒழுக்கநெறியின் நிற்பாராயின் நிலமிசை நீடுவாழ்வார் என்ற உரையே ஏற்புடையதாதல் காண்க. இதன்கண் ஐந்தவித்தான் (ஆகி) நெறிநின்றார் நீடுவாழ்வார் என முடிதலில் இலக்கண இடர்ப்பாடின்றாயின் இவ்வுரை ஏற்புடைத்தாகலாம். ஆனால் ஐந்தவித்தான் ஒரு மையும், நின்றார், வாழ்வார் என்பன பலர்பாலும் உணர்த்து தலின் ஒருமை எழுவாய் பன்மைப் பயனிலைகொண்டு முடி யும் இடர்ப்பாடு நேருதல் கூடும். ஐந்தவித்தான் ஆகி என ஆண்பால் எழுவாய் ஆகி என்ற வினைஎச்சத்தை ஏற்க, அங் ஙனம் அவித்தபலர் ஒழுக்க நெறி நின்றாராயின் நீடுவாழ்வார் எனச் சில சொல் வருவித்து முடிக்க இவ்விடர்ப்பாடு அகலும். இவையனைத்தையும் எண்ணியே கா.சு.பிள்ளை இயல் பாகவே அடக்கின இறைவன் என்று கூறியதும், தண்டபாணி யார் தருகின்ற விளக்கங்களும், இறைவன் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன். அவன் செய்த நூல் ஒழுக்கநெறி; அதன்கண் நின்றார் நீடுவாழ்வார் என்ற கருத்தினவாகி அமைவுடையதாகின்றன.

## ஒ) ஒப்புமைப் பகுதி:

*'பொறிவாயில் ஐந்தவித்தான்'*

ஐவரை வென்றோன் அடியிணை—சிலம்பு, 10.198
வென்றானைப் பலனைந்தும்— *அப்பர்*, உள்ளத்திருத். 7
பொல்லாப் புலனைந்தும் போக்கினான்காண்—
*அப்பர்*, திருக்காளத்தி 6
அறுத்தானாம் அஞ்சும்—*அப்பர்*, திருக்கா, 11.
அஞ்சுகொலாம் அவர்வெல் புலனே—
*அப்பர்*, 4ஆம் திருமுறை, பதிகம் 18: பாட்டு 5
நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தும் வென்றான்—
*அப்பர்*, 6ஆம் திருமுறை. பதி. 50:பாட்டு 13

அஞ்சென் புலனும் அவைசெற்ற
மஞ்சன் மயிலாடு துறையை
நெஞ்சொற்றி நினைந்து எழுவார்மேல்
துஞ்சும் பிணியாயினதாமே— *சம்பந்தர்*, மயிலாடு,4.

வென்றவன் புலனைந்தும்—*சம்பந்தர்*, திருவல்லம் 10
அஞ்சுபுலன்களை விலங்கினை —*சம்பந்தர்*, திருப்புறம்பியம் 8
புலன்கள் வென்ற எம்மிறைவன் —*சம்பந்தர்*, திருவெண்டுறை 7
ஐந்து புலன் நீர்மை புறங்கண்டார்—*சம்பந்தர்* பதிகம், 191, பா. 6
அஞ்சகம் அவித்த அமரர்க்கமரன்
—*சம்பந்தர்* பதிகம், 334, பா. 7
பொறிவாயில் இவ்வைந்தனையும் அவியப் பொருது
—*சுந்தரர்* நெல்வாயில் 2
பொறிவரம்பாகிய புண்ணிய முதல்வனை—*சீவகசிந்*. 2563
பொறியிலா அறிவின் நீ—*மேருமந்*. 1000
புலன்கள் ஐந்தும் செற்றவர்—*பெரியபுரா. திருஞா*. 343
பொய்வழியின் முனி—*கம்பரா*. 303
இகல்செய் பொறிகரணாதி வகைகளையும் நெறியால்...அரனாகி
—*திருவிளை*. வரகுண 3
பொறிவாயில் ஐந்தவித்த புனிதன் நீயே—*சீவசம்போதனை*

*'ஐந்தவித்தான் ஒழுக்கநெறி'*

பிணக்கற அறுவகைச் சமயமும் நெறிஉள்ளி உரைத்த
கணக்கறு நலத்தினன்—*திருவாய்*. 1. 3:5

அறிவினாற் குறைவில்லா அகல்ஞாலத்தவர் அறிய
நெறிஎல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்தொரு மூர்த்தி
—*திருவாய்*. 4. 8:6

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*'நெறிநின்றார் நீடுவாழ்வார்'*

*சுவாமிநாததேசிகர்*: நெறி நின்றார் நீடுவாழ்வார் என்பதனை முறையே பெயராக்க வேண்டில் எடுக்க; முற்றாக்க வேண்டிற்படுக்க. (இ.கொ. 120)

*சுப்பிரமணிய தீட்சிதர்*: 'நெறிநின்றார்' என்ற வினைமுற்று எழுவாயுருபு ஏறி நீங்கியதற்கு மேற்கோள் (பிரயோக., 37)

நெறிநின்றார் என்ற கிருத்தை எடுத்துச்சரிக்க; நீடுவாழ்வார் என்ற கிருத்தைப்[1] படுத்துச்சரிக்க. (பிரயோக., 40)

(சா)

1 கிருத்—வினைச்சொல்

**1.7.** *தனக்குவமை யில்லாதான்*[1] *தாள்சேர்ந்தார்க் கல்லால்*
*மனக்கவலை மாற்ற லரிது.*

*உரைப்பகுதி:*

அ) *மணக்:* தனக்கு நிகர் இல்லாதானது திருவடியைச் சேர்ந்தவர்க்கு அல்லது மனத்துண்டாம் கவலையை மாற்று தல் அரிது என்றவாறு.

வீடுபெறலாவது 'அவலக் கவலைக் கையாற்றின்'[2] நீங் கிப் புண்ணிய பாவம் என்னும் இரண்டினையும் சாராமல், சாதலும் பிறத்தலும் இல்லாததொரு தன்மையை எய்துதல். அதுபெறும் என்பார், முற்படக் கவலை கெடும் என்றார்; அத னால் எல்லாத்துன்பமும் வருமாதலின்.

ஆ) *பரிதி:* தனக்கு ஒருவரும் நிகர்இல்லாதவன் ஸ்ரீபாதத் தைச் சேராதவர் மனத்துயரம் மாற்றுவார் அல்லர். அவர் மனத்துயரம் மாற்றமாட்டார் என்றவாறு.

இ) *பரிப்:*

ஈ) *காளி:* எ-து எவ்வுயிர்க்கும் உயிர்ப்பொருள் ஆகின்ற வனாகிய முதற்பொருளாம் தன்மைக்கு இணையில்லாதான், தனது அடியினை உண்மையாகச் சேர்ந்தவர்க்கு அல்லது மற்றி யாவர்க்கும் தமது நெஞ்சத்துக் கவலை நீக்குதற்கு அரிது என்றவாறு.

உ) *பரிமேல்:* ஒருவாற்றானும் தனக்கு நிகர்இல்லாதவனது தாளைச் சேர்ந்தார்க்கு அல்லது மனத்தின்கண் நிகழும் துன் பங்களை நீக்குதல் உண்டாகாது.

'உறற்பால தீண்டாவிடுதல் அரிது'[3] என்றாற்போல ஈண்டு அருமை இன்மைமேல் நின்றது. தாள்சேராதார் பிற விக்கு ஏதுவாகிய காமவெகுளி மயக்கங்களை மாற்றமாட்டா

---

1 ஈண்டு ஒருவாற்றானும் தனக்கு உவமையில்லாதான் என்று விதந்து கூறிய ஆசிரியர் முதற்குறளில் அகரத்தை உவமையாகக் கொடுத்தது முரண் ஆகாதோ எனின், முரணாது. காட்சிப் பொருளையே கருத்துப் பொருளுக்கு உவமைகொடுத்தவாறு; உபசாரத்தால் என்க.

2 'அவலம்—வருத்தம் தோன்றி நிற்றல். கவலை—யாது செய்வல் என்றல். கையாறு—மூர்ச்சித்தல்—உ.வே.சா.மணிமேகலை உரை 4:119. கவலை, இலேசம், துயரம் என்பன ஒரு பொருட் சொற்கள்

3 வந்தடைதற்பாலனவாய இன்பதுன்பங்கள்வந்து தீண்டாமல் விடுதல் அரிது என்பது போல' என்பது பொருள். நாலடி 109

மையின் பிறந்து அவற்றான் வரும் துன்பங்களுள் அழுந்துவர் என்பதாம்.

*காரி*: அரிது இன்மை மேல் நின்றது. 'அருங்கோடன்'[1] என்பதும் அது.[2] அல்லால் என்பது வினைஎச்சக்குறிப்பு.

*இராமா*: முயற்கொம்பு அரிது என்றாற்போல இங்கே அருமையானது, இல்லை என்ற அருத்தத்திலே வந்தது.

**ஊ) *கவிராச*:** ஒரு வஸ்துவும்[3] தனக்குச் சரியில்லாமல் இருக்கிற ஜினேசுவரனுடைய பாதங்களைச் சேர்ந்தவர்களுக்கு மனத்தின் துக்கங்களைப் போக்கடிக்கலாம்; சேராதவர்களுக்கு மனத்தின் துக்கங்களைப் போக்கடிக்கப் போகாது.

எ) *பழைய 1*: தனக்கு ஒருத்தரும் உவமையில்லாத பரமேசுரன் பாதத்தைச் சேர்ந்தபேரே அல்லாமல் மற்றபேர் எல்லாம் மனக்கிலேசம் மாற்றமாட்டார்.

ஏ) *பழைய 2:* ஒரு காரணத்தினாலும் தனக்கு நிகரில்லாதவனுடைய திருவடிகளைச் சேர்ந்தவர்க்கு அல்லது மற்றவர்க்கு மனக்கவலையை நீக்கிக் கொள்ளப்படாது.

## ஐ) தொகுப்பாசிரியர் குறிப்பு:

*'தனக்கு உவமையில்லாதான்'*

''தனக்கு நிகரில்லாதவன்'' ''தனக்கு ஒருவரும் நிகரில்லாதவன்''

''எவ்வுயிர்க்கும் உயிராகின்ற முதற்பொருளாந் தன்மைக்கு இணையில்லாதான்''

'ஒருவாற்றானும் தனக்கு நிகரில்லாதவன்' என *மணக்குடவர், பரிதி, காளிங்கர், பரிமேலழகர்* ஆகிய பழையஉரையாசிரியர்கள் உரை காண்பர்.

'தனக்கு ஒருத்தரும் உவமையில்லாத பரமேஸ்வரன்'
—*பழைய 1*

'ஒரு காரணத்தானும் தனக்கு நிகரில்லாதவன்'
—*பழைய 2*

'ஒரு வஸ்துவும் தனக்குச் சரியில்லாமலிருக்கிற ஜினேஸ்வரன்'—*கவிராசர்*

'தனக்கு ஒப்பானவர் இல்லாதவர்'—*வீரமா*.

'தமக்குவமையில்லாத கடவுளது'—*சுகாத்*.

---

1 குறள் 210  2 'அருமை—இன்மை'—பரிமேலழகர்.
3 வஸ்து—பொருள்.

'தனக்கு ஒப்பில்லாத இறைவன்'—தனக்கு என்னும் குறிப்பு தனிமையைப் புலப்படுத்துவது—*திரு.வி.க*

'தனக்கு ஒப்பானது எதுவும் இல்லாதவன்'—*செ.த.*

'வேறு எவரும் தனக்கு இணையில்லாதவன்'—*இராம.*

'ஒத்தாரும் -மிக்காரும் இல்லாதான்'—*குழந்தை*

'தனக்கு ஒப்புமையில்லாத தலைவன்'—*மு.வ.*

'ஒருவகையானும் தனக்கு ஒப்பில்லாத இறைவன்'
—*தேவநேயர்*

'இனக்குறிக்கோளாகிய இரண்டற்ற ஒருமை வடிவினை யுடையவர் ஆதலால், தனக்கு இணையாக வேறு எதுவும் இல்லாதவரான கடவுள்'—*கா.அ.*

'உவமையிலான்' என்ற முடிபில் அனைவரும் ஒத்தும், காரணங்கூறும் வகையில், 'ஒருவாற்றானும்' 'ஒருவரானும், ஒருமை வடிவையுடையராதலான்' என மாறுபட்டும் உரைக் கின்றனர்.

*காளிங்கர்:* எவ்வுயிர்க்கும் உயிராய் முதற்பொருளாந் தன்மைக்கு நிகரிலான் என்ற உரை முதற்குறட்கருத்தை ஒட்டியும், ஒருவாற்றான் வெட்டியும் கூறுவது போன்றுள்ளது உற்றறிக.

இதனால், ஒருபுடை ஒத்து, ஒருபுடை ஒவ்வாமையன்றே உவமம் ஆவது. அதுவும் இல்லாத தனித்த பொருள் இறை என்ற திரு.வி.க., தண்டபாணியார், குழந்தை போன்றோர் உரைகள் கொள்ளத்தக்கனவாம்.

தாள், திருவடி, ஸ்ரீபாதம், பாதம் எனச்சொல்லால்வேறு பட்டு உரைப்பராயினும் பொருளால் ஒத்தனரேயாவர். இறை வன் உருவற்றவன். ஆகலான் அவன் அடி என்றது அவனது திருவருளையே ''இறைவன் அடி திருவருளுக்கு அறிகுறி'' என்பர் திரு.வி.க. (பக். 89, திருக்குறள் பகுதி1). மேலும் உருவமில்லாத — தோற்றக்கேடுகள் இல்லாத கடவுளுக்கு தோற்றக்கேடுகளுடைய பொருள்களில் எது ஒப்பாகும்? ஒன் றும் ஒப்பாகாமையின் அவனைத் தனக்குவமையில்லாதான் என்றார் என்ற அவர்கள் விளக்கமும் ஈண்டு நினைத்தற் குரியது. (பக்.24 தனக்குவமையில்லாதான் விளக்கம் காண்க) 'சரணாகதி அடைந்தவர்கட்கு, என்ற இராமலிங்கனார்உரை அடைக்கலம் புகுந்தவர் என்றவேறு கருத்தினை விளைவிக் கிறது. 'சேர்ந்தார்க்கு' 'சேர்ந்தவர்கட்கு' எனப் பொதுமை யில் அனைவரும் கருதுகின்றனர். பரிமேலழகர் தம் சிறப்புக் குறிப்பில் இடைவிடாது நினைப்பவர்க்கு என்பர். 'நீ பற்றிக்

கொண்டால் ஒழிய' என்னும் வீரமாமுனிவர் உரையும், நினைத்தலையே கருதியதாகிறது. குழந்தை அடிச்சுவட்டைப் பின்பற்றினோர் என்பதும் ஏற்புக்குரியதாகிறது. 'மனக் கவலை' என்பதற்குப் பரிமேலழகர் மட்டும் 'பிறந்து காம வெகுளி மயக்கங்கள்' என உரை காண்பர். அப்பாத்துரை யார் இனநெறிக்குழப்பங்களால் ஏற்படும் கவலை என்பர்.

இக்குறட்பாவின் உரைகள் யாவும் ஒரே கருத்தை விளக்குவன ஆயினும், உயிருக்குயிராயிருப்பவனாகிய முதற் பொருளாந்தன்மைக்கு இணையில்லாதவன் என்ற காளிங்கர் உரை சைனமரபுவழிக்கொள்கையைக் குறித்தது என்பர்.

மனக்கவலை உலகியல் வாழ்வுக்குத் தேவையான பொருள்களைப் பற்றியும், பகை-சினம்-அழுக்காறு ஆகிய குணங்களைப் பற்றியும் விளையும் சிதைந்த எண்ண ஓட்டங் கள். இவை விருப்பு வெறுப்புக்களால் விளைவன. வேண்டுதல் வேண்டாமையிலாதானது திருவருளாகிய திருவடிச்சார்பு டையார்க்குத் துன்பமும், அதனால் விளையும் கவலையும் இல்லை என்பதாம்.

'தாள் சேர்ந்தார்அல்லார்' நச்சர்பாடம் என்பர் வ.உ.சி.

## ஒ) *ஒப்புமைப்பகுதி:*

*முற்றும்*

எந்தையும் யாயும்எம் பிரானு எம்முனும்
அந்தமில் பெருங்குணத்(து)இராமன் ஆதலால்
வந்தனை அவன்கழல் வைத்த போதலால்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்கலாது என்றான்—
*கம்ப அயோத்தி பள்ளி*, 58

*'தனக்கு உவமை இல்லாதான்'*

நின்னொடு, புரையுநர் இல்லாப் புலமையோய்—*திருமுருகு*. 279-80
தன்னை ஒப்பாய் ஒன்றுமில்லாத் தலைமகன்—*திருமந்*. 6.
ஓர்உவமன் இல்லி—*அப்பர், வினாவிடை* 10.
மற்றாருந் தன்ஒப்பார் இல்லாதானை— *அப்பர்*, பெரியதிருத். 2
தன்னேர் பிறர் இல்லாதானை—*சம்பந்தர்*, திருமீயச்சூர்
தன்னானைத் தன்ஒப்பார் இல்லாதானை—*அப்பர்*, திருவாரூர் 2
உவமவில் இறந்தன ஒண்மலர்த்தாள்—*திருவா*. 43
தனைஒப்பாரை இல்லாத் தனியை—*திருவா*. 442
ஒப்புஉனக்கில்லா இறைவன்—*திருவா*. 538

ஒருதனி விளங்கிய உத்தமா போற்றி—*திருப்பாவை.*

ஒத்தார் மிக்காரை யிலையாய மாமாய—*திருவாய்*-2.3:2

ஈடும் எடுப்புமில் ஈசன்—*திருவாய்.*

தன் ஒப்பார் இல்லப்பன்—*ஆழ்வார்*

வெலற்கரும் வினைப்பகை வேரொடும் வென்றனை
சொலற்கரும் மெய்ப்பொருள் முழுவதும் சொல்லினை
அருவினை வெல்பவர்க் கரும்புணை யாயினை
ஒருவனையாகி உலகுடன் உணர்ந்தனை—யா. வி. சூ. 8.

(எ)

*1. 8. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லால்*
*பிறவாழி நீந்த லரிது.*

*உரைப்பகுதி:*

அ) *மணக்:* அறமாகிய கடலையுடைய அந்தணனது[1] திருவடியைச் சேர்ந்தவர்க்கு அல்லது, ஒழிந்த பேர்களுக்குப் பிறவாழியை நீந்துதல் ஆகாது; அது பெறுதல் அரிது என்றவாறு.

இது காமமும் பொருளும் பற்றி வரும் அவலம் கெடும் என்றது.

ஆ) *பரிதி:* எ-து தன்மம் என்னும் சமுத்திரமாக உள்ள பரமேசுரன் பாதத்துணை இல்லாதார் பாவக்கடலை நீந்த மாட்டார் என்றவாறு.

இ) *பரிப்:* அறத்தைச் சொல்லிப் பிற எனவே அறமுதலான மூன்றினும் ஒழிந்த இரண்டினும் என்பது பெறும்.

ஈ) *காளி:* அறமாகிய பெருவெள்ளமாய் அனைத்துயிர்கட்கும் அழகிய தண்ணளியை உடையனாகிய இறைவனது தாளிணையை வணங்கி வழிபட்டார்க்கல்லது, மற்று(றி) யாவர்க்கும் பிறவிப் பௌவத்தைக்[2] கடத்தல் அரிது என்றவாறு.

உ) *பரிமேல்:* அறக்கடலாகிய அந்தணனது தாளாகிய புணையைச் சேர்ந்தார்க்கல்லது அதனிற் பிறவாகிய கடல்களை நீந்தல் அரிது.

அறம் பொருள் இன்பம் என உடன்எண்ணப்பட்ட மூன்றனுள் அறத்தை முன்னர்ப் பிரித்தமையான் ஏனைப் பொருளும்

---

1 அறமாகிய கடலையுடைய அந்தணன் என இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகப் பிரிப்பர். 2 பௌவம்—கடல்

இன்பமும் பிற எனப்பட்டன. பல்வேறு வகைப்பட்ட அறங்கள் எல்லாவற்றையும் தனக்கு வடிவாக உடையன் ஆகலின் அறவாழி அந்தணன் என்றார். அறவாழி என்பதனைத் தரும சக்கரமாக்கி, அதனை உடைய அந்தணன் என்று உரைப்பாரும் உளர்.[1] அப்புணையைச் சேராதார் கரை காணாது அவற்றுள்ளே அழுந்துவராகலின் நீந்தல் அரிது என்றார். இஃது ஏகதேச உருவகம்.[2]

*காரி:* ஏகதேச உருவகமாவது 'காமக்கணிச்சி உடைக்கும் நிறை என்னும் நாணுத்தாழ் வீழ்த்த கதவு'[3] என்பது போல முற்றுருவகமாய் வாராது, ஒருவழி உவமை குறைந்து பொருள் நிற்பதும், ஒருவழிப் பொருள் குறைந்து உவமை நிற்பதும், ஒருமருங்கு உவமையும் பொருளுங் குறைந்து நிற்பதும், ஒருவழிக் குறைந்ததற்கேற்ற வினைபெற்று நிற்பதும் என்க. 'அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்'[4] 'பொருள் என்னும் பொய்யா விளக்கம் இருள் அறுக்கும்[5] 'சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம் என்னும் ஏமப்புணையைச் சுடும்'[6] 'காலை அரும்பிப் பகல் எல்லாம் போதாகி, மாலை மலரும் இந்நோய்'[7] எனவரும் ஏகதேச உருவகங்கள் எல்லாம் முறையே காண்க.

*இராமா:* அந்தணன் தாளாகிய தோணி என்றது ஏகதேச உருவக அலங்காரம் எனவும், ஏகாங்க உருவக அலங்காரம் எனவும் சொல்லப்படும். என்னவெனில் ஒரு பொருளின் பல அங்கங்களை எல்லாம் உருவகம் செய்வது அநேகாங்க உருவகம் என்றும், ஒரே அங்கத்தை உருவகம் செய்வது ஏகாங்க உருவகம் என்றும் காண்க. இனிப் பிறவாழி[8] என்பதற்குப் பாவக்கடல் எனினும் அமையும்.

ஊ) *கவிராசர்:* தரும சக்கரத்தை முத்திரையாகவுடைய சினேசுவரன் பாதங்களைச் சேர்ந்தவர்களுக்குப் பிறப்பு என்

1 இதுவும் கவிராச் பண்டிதர் உரைக்கருத்தும் ஒத்திருத்தல் காண்க.
2 உருவகமாவது உவமான உவமேயங்களை வேற்றுமை ஒழிவித்து ஒன்று என்று தோன்ற வைப்பது. கடல் போன்ற அறம் என்னாது அறமாகிய கடல் எனக் கூறியது காண்க ஏகதேசஉருவகமாவது ஒரு பகுதியை உருவகித்தலால் மற்றொரு பகுதியைக் கொள்ளவைப்பது. 3 குறள் 125.
4 குறள் 8. 5 குறள் 733. 6 குறள் 306. 7 குறள் 1227.
8 பிறவுஆழி- பிறப்பாகிய கடல் 'வேழப்பிறவும்' (பெருங்கதை 53—86) என்பதற்கு யானைப்பிறவியும் என்றும் 'பிறவாழிகரை கண்டாரே' (வில்லி. கிருஷ்ண. 1 )என்பதற் குப் பிறவியாகிய கடலைக் கடந்தவரே என்றும்பெரியோர் பொருள் கூறியிருத்தல் காண்க"—கவிராசபண்டிதர்.

னும் கடலைக் கடக்கலாம்; சேராதவர்களுக்குப் பிறவிக்கடலைக் கடக்கப்போகாது.

ஏ) *பழைய 1:* தன்மம் என்னும் சமுத்திரமாயுள்ள பரமேசுரன் சீபாதம் துணையில்லாதார்க்கு பிறவிச்சமுத்திரம் நீந்த முடியாது.

ஏ) *பழைய 2:* தருமக்கடலாகிய அந்தணனுடைய திருவடியாகிய தெப்பத்தைச் சேர்ந்தவர்க்கு அல்லது, பிறவிக்கடலை நீந்திக் கரையேறுதல் அரிது.

## தொகுப்பும் குறிப்பும்:

*'அறவாழியந்தணன்'*

'அறமாகிய கடலையுடைய அந்தணன்' என *மணக்குடவரும்* 'தன்மம் என்னும் சமுத்திரமாகவுள்ள பரமேசுரன்' எனப் *பரிதியாரும்*' 'அறமாகிய பெருவெள்ளமாய் அனைத்துயிர்கட்கும் அழகிய தண்ணளியையுடைய இறைவன்' எனக் *காளிங்கரும்*, அறக்கடலாகிய அந்தணன் எனப் *பமேலழகரும்* உரை கண்டனர்.

'தன்மம் என்னும் சமுத்திரமாயுள்ள பரமேசுரன்' எனப் பரிதியாரை ஒட்டிப் *பழைய உரை 1*ம், 'தன்மக்கடலாகிய அந்தணன்' எனப் *பழைய உரை 2*ம் கூறும்.

'தருமசக்கரத்தை முத்திரையாகவுடைய சினேசுவரன்' எனக் *கவிராசரும்* 'அறத்தின் கடலாக இருப்பவர்' என *வீரமாமுனிவரும்* கூறுவர்.

'ஒழிவு ஆகிய கடல் சூழ்ந்த அழகிய தண்மையுடைய கடவுள்' *சுகர்த்தியர்*.

'தீமையையறுத்து நன்மையைவிளைவிப்பதாகிய மாசற்ற கடல்'—*திரு.வி.க.*

'அறக்கடலாகிய அந்தணன்' — *சொ.த. குழந்தை.*

'தருமங்கள் எல்லாந் தங்கியிருக்கும் சமுத்திரம் போன்ற அமைதிமயமான பகவான்'— *இராம.*

'அறக்கடல்'—*மு. வ.*

'அறக்கடல் வடிவினனும், குளிர்ந்த அருளாளனுமாகிய இறைவன்'—*தேவநேயர்.*

'அறம் என்னும் அன்பொழுக்க உருவான எல்லையற்ற பெருங்கடலின் மீது எழுந்து ஒளிவீசும் பேரருட்கதிரவன் போன்ற செவ்விய தண்ணளியானாகிய கடவுள்'—*கா.அ.*

'அற வாழி—அறத்தில் அறத்திற்காகவே வாழ்பவர்; அந்தணர்—அறவோராகிய சான்றோர்-உயர்மனிதர்'—மு.கோ.

இவ்வுரையாசிரியர்கள் அனைவரும் அறக்கடலாகிய அந்தணன் எனஉருவகமாகவும் அறக்கடலையுடைய அந்தணன், தருமசக்கரத்தையுடைய அந்தணன் எனக்கிழமைப் பொருளனவாகவும் பிறவகையானும் உரைகாண்பதால் பலதிறத்தினராவர். இவருள் தனக்குவமையில்லாத கடவுளை, உவம வேறு பாடாகிய உருவகத்தின்பாற்படுத்து உரைப்பதினும் 'அறக்கடலையுடைய' அல்லது 'தரும சக்கரத்தையுடைய' எனல் சிறந்ததாகலாம். சமயக்கணக்கர் மதிவழி நடக்காத வள்ளுவரை ஒருசமயத்தினராக்குதலினும் பொதுமையிற் கூறுதல் சிறப்புடையது. அறவு ஆகிய கடல் என எல்லாவற்றினும் நீங்கி நிற்கும் தன்மையைச் சுகாத்தியரும், அறவாழி அந்தணன் என்பவற்றைத் தனித்தனியே இறைவற்குள்வான பெயராக்கித் தேவநேயரும், சொற்பொருளோடு கற்பனையும் உருவகமும் அமைய அப்பாத்துரையாரும் உரைக்கின்றனர். ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவகையான சுவையிருக்கத்தான் செய்கிறது ஆயினும், கடலின் எல்லையற்ற தன்மையாகிய வடிவைமட்டும் கருதாமல் தாகந்தீரப் பலருண்ணும் பருகுநீரன்மையை உணர்ந்து பெருவெள்ளம் எனப் பொருள் கொண்டு வெள்ளநீர் வெப்பம் போக்கிக் குளிர்ச்சியைத் தருவது போல கடவுள் பிறவி வெப்பம் போக்கிப் பேரின்பம் தரும் பண்பும் தோன்ற உரைக்கின்ற காளிங்கர் உரையும் பெருவெள்ளமாயினும், சமுத்திரகலச நீரயாயமாக உண்பவர்கள் தத்தம் நிலைக்குஏற்ப உண்பது போலக் கடவுளின் அருளை அவரவர் பரிபாகச்சிறப்புக்கு ஏற்ப நுகர்தலானும், கடலைக் கடலாகவே கருதாது பெருவெள்ளமாய்க் கண்ட காளிங்கர், தேவநேயர் உரையும் சிறந்தன எனலாம்.

*'பிறவாழி'*

பிறவாழி என்றே உரைப்பவர் மணக்குடவர். ஆனால், தொடர்ந்து, 'அது பெறலரிது' என்ற குறிப்பு பிறவாழி பெறுதற்குரியவற்றுள் ஒன்று. எனவே பொருளையும் இன்பத்தையும் உணர்த்தினார் எனக்கருதலாம்.

'பாவக்கடல்' என அறத்திற்குப்பிற பாவம் என்றார் பரிதி. பிறவியாகிய கடல் என்றார் காளிங்கர். பழையஉரை 1,2,

கவிராசர், 'பொருள் இன்பக்கடல்' என்று கூறிக் காரணமுங் காட்டுவர் —*பரிமேல்.*

'அறக்கடலுக்கு வெளியேயுள்ள பிறிதொரு கடல்; அதாவது இன்பத்துன்பக்கடல்'—*வீரமா.*

'யான் என்னுங்குற்றத்துள் ஆகுமதன்மையினின்று நீந்துதல்' —*சுகாத்.*

'பொருட்பற்றும் இன்பப்பற்றும் என்னும் இருகடல்கள்' —*கா.சு*

'பாவக்கடல்'—*திரு.வி.க.*

'அறத்தின் பிறவாகிய பொருள் இன்பக்கடல்' —*சொ.த., மு.வ.*

'அறங்களுக்கு மாறான மறம் எனப்படுகிற துன்பசமுத்திரம்'—*இராம.*

'பொருளின்பங்களைத் துய்க்க முடியாது'—*குழந்தை.*

இவ்வுரைகள், 'பிற' என்ற பொதுமையால் அறத்திற்கு எதிரான பிற எனக்கருதி, பாவக்கடல், பொருளின்பக்கடல், இன்பதுன்பக்கடல், அகங்காரக் கடல் என்றெல்லாம் கூறுவதாய் உரையாசிரியர்கள் தம்முள் மாறுபடுகின்றனர்.

பரிமேலழகர் 'பொருளின்பக்கடல்' என்றதற்குக் காரணம், மணக்குடவர் 'அது பெறுதல் அரிது' என விளக்கந் தந்தமையின் பிற என்பது பொருளின்பங்களை ஆதல் வேண்டும் எனக் கருதினர் போலும். இவ்வுரையை மறுப்பவர்கள், பொருளின்பங்களும் அறத்திற்கு உதவுவனவும், அறத்தான் வருவனவும் ஆகலான், அவ்விரண்டும் துய்த்தற்குரியன ஆமேயன்றித் துறத்தற்குரியவாகா. அதனால் பரிமேலழகர் உரை சிறப்பின்று என்பர் (உரைவேற்றுமை பக். 25). 'மறக் கடல்' எனப்பொருள்கண்டு பரிமேலழகரை மறுப்பர் **வ.உ.சி.**

'அறத்தான் வருவதே இன்பம்' எனவும் 'அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லை' எனவும் இன்பமும் பொருளும் அறநெறியால் ஈட்டவும் துய்க்கவும் பெறுவன என வள்ளுவர் உணர்த்தினரேயன்றிப் பொருளின்பங்கள் அறத்திற்குட்பட்டதாகக் கூறினாரல்லர். உட்பட்டதாயின் உறுதிப்பொருள் நான்கென்றல் பொருந்தாதாகும். இத்தகைய சிக்கலை நன்கு சிந்தித்த கா. சுப்பிரமணியபிள்ளை 'பொருளாலும் இன்பத்தாலும் வரும் பற்றினைக் கடல் என்றார்' என உரைகண்டனர். இது மிகச்சிறந்த ஏற்புடைய கருத்தாகும்.

'பாவக்கடல்' என்ற பரிதியார் உரையும் 'அறம்' என்பதற்கு எதிர்ச்சொல் மறமாதலானும், அறவினைக்கெதிராக

வந்த பிறவினை என்றசொற்குப் 'பாவம்' எனப் *பரிமேலழகர்* உரைகண்டிருப்பதாலும் இதுவும் ஏற்புடையதே.

'பிறவியாகிய கடல்' என்பதோ மேல்வருங்குறளில் 'பிற வாழி' நீந்தலரிது என்பதற்கும் இப்பொருளே கிடைத்ததா யின் அது கூறியது கூறலாய் முடியுமாதலானும், *காளிங்கர்* கருத்து ஏற்புடையதாகாமை துணிக. ஆனால்,

பிறவு + ஆழி எனப் பிரித்தல் கூடாது என *அப்பாத்துரை யார்* மறுப்பு வேழப்பிறவும் (பிறவியும்) எனவும், (பெருங் கதை 55-86) பிறவாழிக்கரைகண்டாரே (வில்லி.பா. கிருஷ்ண.1) எனவும் ஆன்றோராட்சியால் தவறின்மைகண்டு, முற்கூறியவாறு 'பிறவிக்கடல்' எனல் கூறியது கூறலாய குற்றம் ஒன்றேயுடையது எனக்கண்டு விடுக.

இவையன்றி, கொழும்பு *பொன்னம்பலம் இராமநாதன்* அந்தண்மை பொருந்தப் பெறாத இல்லற துறவறவங்களாகிய சமுத்திரங்களைக் கடக்கமுடியாது என்பர். இல்லறம்-துற வறம் என்ற இரண்டறங்களில் ஒன்றினின்றே அறவாழியந் தணன் தாளைச் சேரவேண்டுதலின் அவற்றை நீந்தல் என் பது பொருளற்றதாய் முடிதலானும் வலிந்துகோடலாக இருப்பதாலும் ஏற்றதாகாது.

அந்தணனை அறக்கடலாக உருவகித்தமையின், அவன் தாளைப் புணையாகக்கொண்டு ஏகதேச உருவகம் என்றது *பரிமேலழகர்* கருத்து. அந்தணன் கடல்ஆக—அவன் உறுப் பாகிய தாள் புணை என்ற வேறு பொருளாக உருவகிக்கப் பெறுவது சினைக்கும் முதலுக்கும் உள்ள தொடர்பிற்கு ஏற்ற தாகாமை கண்டு சில உரையாசிரியர்கள் திருவடியை உருவக மாக்காது வாளாவிடுத்தனர் போலும்.

பிறவாழி என்பதனைப் பிறவு என்னும் விகுதிபெற்ற தொழிற்பெயர் ஆழி என்னும் பெயரைக்கொண்டு பண்புத் தொகையாய் உழவுமாடு என்பது போல முடிந்தது. இதனி னும் பிற + ஆழி என முதனிலைத் தொழிற்பெயர், பெயர் கொண்டது சாலும் என்பர் சிலர். பிற என்பது முதனிலைத் தொழிற்பெயராயின் வினையடியாய் அது 'அறிகொன்று அறியான்' 'இரத்தக்கார்' என்பனபோல வினைகொண்டு முடியுமேயன்றிப் பெயர் கொள்ளாமையின் 'பிறவு + ஆழி' எனக்கொண்டனர் என்க. உகரம் தொழிற்பெயர் விகுதி. அன்றியும் 'பிற' என்பது முன்னர்ச் சுட்டப்பட்டதற்கு இன மாகிய அல்லது எதிராகிய பொருளைக்காட்டுங்கால் பலவின் பாற் பெயராமேயன்றி வினையாகாது; வினையாகாதபோது முதனிலைத் தொழிற்பெயராதலும் இல்லை என்க.

## ஓ) *ஒப்புமைப்பகுதி:*

*'அறவாழி'*—'தருமசக்கரம்'

அறவாழி அண்ணல் அவன் என்பர்—*சீவக.* 1611

உலகம் இருள்கெட விழிக்கும் ஒண்மணி அறவாழி—*சீவக.* 3023

வென்றோர் பெருமான் அறவாழி வேந்தன் விரிபூந்தாமரையே
—*சீவக.*

......தருமச் சுடரான (சுடர்-சக்கரம்-ஆழி)—*நீலகேசி,* கடவுள்

*'கடல்'*

அருளொடு எழும் அறவாழி அப்பா—*திருநூற்,* 5.

பள்ளி உணர்ந்திலையோ பாவாய்நீ முன்வந்து என்
வள்ளல் அறவாழி நாதன் மலரடியை—*திருவெம்.*

முக்குணத்தவரே முதலோர் அவர்
நற்குணக்கடல் ஆடுதல் நன்றரோ —*கம்பராமா.* 2

*'அந்தணன்'*—சிவன்

இமையோர் போற்றும் அந்தணனை—*அப்பர்* ஆரூர் 4

*'அறவாழி அந்தணன்'*

அறவனை ஆழிப்படை அந்தணனை—*திருவாய்,* 1.7.1.
அறவாழி கொண்டே வென்ற அந்தணனே—*திருநூற்.,*27

*'அறவாழி அந்தணன் தாள்சேர்தல்'*

அறவன் கழல் சேர்ந்து—*சம்பந்தர்,* அரிசிற். 11

*'பிறவாழி'*

தோற்றம் என்ன அத்தொல்வினைத் தொடுகடற்சுடுநின்று
—*கம்பராமா,*6360

கார்படைத்த நிறத்தோனைக் கை தொழுவார்
பிறவாழிக் கரைகண்டாரே—*வில்லிபாரதம்,* கிருஷ்ண,1

மருந்தவன் வானவர் தானவர்க்கும்
பெருந்தகை பிறவினோ டிறவுமானான்
அருந்தவ முனிவரொ டானிழற் கீழ்
இருந்தவன் வளநகரிடை மருதே—*சம்பந்தர்* திருவிடை1. 1

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*'அறவாழி.........அரிது'*

*காரிரத்தினகவிராயர்:* மாட்டேறு பெற உருவகம் செய்யாது, தொகைநிலை வாய்பாட்டான் கூறப்படும் ஏகதேச உருவகத்திற்கு மேற்கோள் (மாறனலங்காரம், 120).

'பிறவாழி நீந்தல் அரிது'

*சுப்பிரமணிய தீட்சிதர்:* இது நஞ்தற்புருடனில் (எதிர் மறைப் பொருளில் வந்த வேற்றுமையில்) ததந்நியத்திற்கு (கூறியது அல்லாத வேறு ஒன்றற்கு) வந்த மேற்கோள் (பிரயோகவிவே. 21).

(அ)

## 1.9. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத் தான்
## தாளை வணங்காத் தலை.

### உரைப்பகுதி:

அ) *மணக்.:* அறிவில்லாத பொறிகளையுடைய பாவைகள் போல ஒருகுணமும் உடையன அல்ல; எட்டுக் குணத்தினை உடையவன் திருவடியினை வணங்காத தலையினை உடைய உடம்புகள் என்றவாறு.[1]

உயிர் உண்டாகில் வணங்கும் என்று இழித்து, உடம்புகள் என்றார்.

ஆ) *பரிதி:* எ-து கோளாகிய நவக்கிரகங்களும், புலனாகிய கண்வாய் மூக்குச் செவி மெய் என்னும் ஐம்புலன்களும் உண்டாகிலும் பயனில்லை.[3]எட்டுக்குணங்களை உடைய சிவன் சிவந்ததாளை வணங்காத தலை சித்திரத்தில் எழுதிய மரப் பாவைக்கு நிகராம் என்றவாறு.

எட்டுக்குணத்தான்;எட்டுக்குணமாவன:—அனந்தஞானம் அனந்த வீரியம், அனந்த குணம், அனந்த தெரிசனம், நாம மின்மை, கோத்திரமின்மை, அவாவின்மை, அழியாவியல்பு என்பன.

இ) *பரிப்.:* குணமில்லை என்றது பயனில்லை என்றவாறு. இது வணங்காதார்க்கு உளதாகும் குற்றம் கூறிற்று. இவை எல்லாம் தலைமை பற்றிக் கூறியவாறு கண்டுகொள்க.

---

1 பொறியின் என்பதற்குப் பொறிகளை உடைய பொம்மை போல எனவும், தலை—தலையை உடைய உடம்பு எனவும் பொருள் கண்டனர். தகுதி வழக்குபற்றி உவமையாகப் பாவையையும், அதற்கிணைய உடலையும் கொண்டனர் போலும்.

2 நவக்கிரகங்கள்: ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது.

3 கோளின் பொறியின் குணமிலவே எனப்பிரித்து உரைகண்டனர் போலும்.

இவ்வதிகாரத்திற் கூறிய கடவுட் பெயர் எல்லாம் ஒரு சமயத்தார் கூறும் பெயரன்றி, வேறு வேறாகப்பலசமயத்தார் கூறும் பெயராகத் தோன்றாநின்றது. அதற்குக் காரணம் என்னை எனின் இஃது எமக்குப் புலனாயிற்றன்று. அச்சமயத்தார் எல்லாரும் நன்னெறிக்கண் செல்லும் உள்ளத்தார் ஆகலின் யாதானும் ஒரு சமயத்தார் கூறிய கடவுளை வணங்கின் நன்றிபயக்கும் என்பது போதுங் கருத்து.

ஈ) *காளி.*: எ-து கோட்பரமில்லாத[1] பொறியினைப்போலக் குணமில்லனவாம்; எண்ணப்பட்ட குணங்களை[2] உடைய இறைவனது தாளினை வணங்கப் பெறாத தலைகள் என்றவாறு.

உ) *பரிமேல்.*: தத்தமக்கேற்ற புலன்களைக் கொள்கை இல்லாத பொறிகளைப் போலப் பயன்படுதல் உடையவல்ல; எண்வகைப்பட்ட குணங்களை உடையானது தாள்களை வணங்காத தலைகள்.

எண்குணங்களாவன தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவில் ஆற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை என இவை. இவ்வாறு சைவ ஆகமத்துக் கூறப்பட்டது. அணிமாவை[3] முதலாக உடையன எனவும், கடையிலா அறிவை[4] முதலாக உடையன எனவும் உரைப்பாரும் உளர். காணாத கண் முதலியன போல வணங்காத தலைகள் பயனில எனத்

---

1 கோட்பரம்—கொள்கை நோக்கு

2 எண்குணம்-எண்ணப்பட்ட குணங்கள்;வினைத்தொகையாகக் கொண்டு உரை காணகின்றார்.

3 அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம். அணிமா-உடல் அணுவைப்போலச் சிறியதாதல். மகிமா-உடல் விண்ணளவு பருத்திருத்தல். கரிமா-உடல் மலைபோலக் கனமாயிருத்தல். லகிமா-உடல் துரும்புபோல இலேசாயிருத்தல். பிராப்தி-வேண்டிய வேண்டியாங்கு எய்தல். பிராகாமியம-பிறவுடலில் புகுதல் (கூடுவிட்டுக் கூடுபாய்தல்), விண்ணில் பறந்து திரிதல், இருந்த இடத்திலிருந்தே விரும்பிய எல்லாவற்றையும் பெறுதல், உடல் ஒளியால் அனைத்தையும் காண்டல், முக்கால அறிவு முதலாயின. ஈசத்துவம்-இயங்குவன நிற்பன ஆகிய யாவற்றையும் தன்வயமாக்கல். இதன் விரிவைத் திருவிளையாடற் புராணத்தில் அட்டமாசித்தி உபதேசபடலத்தில் காண்க.

4 கடையிலா அறிவு,கடையிலாக்காட்சி, கடையிலா வீரியம்,கடையிலாஇன்பம், நாமமின்மை, கோத்திரம் இன்மை, ஆயுள் இன்மை, அழியா இயல்பு என்பன. இங்ஙனம் உரைப்பவர்கள் பரிப்பெருமாள், கவிராசபண்டிதர்.

கடையிலா ஞானத்தோடு காட்சி வீரிய மேயின்பம்
இடையுறு நாமமின்மை விதித்தகோத்திரங்க ளின்மை
அடைவிலா வாயுவின்மை அந்தரா யங்க ளின்மை
உடையவன் யாவன் மற்றிவ் வுலகி னுக் கிறைவனாமே
-சூடாமணிநிகண்டு.

தலைமேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும் இனம்பற்றி வாழ்த்தாத நாக்களும் அவ்வாறே பயனில என்பதூஉம் கொள்க.[1] இவை மூன்று பாட்டானும் அவனை நினைத்த லும், வாழ்த்தலும், வணங்கலும்[2] செய்யாவழிப்படும் குற்றம் கூறப்பட்டது.

*காரி*: வணங்காத்தலை, காணாக்கண் கேளாச்செவி போலும் என்க.

ஊ) *கவிராசர்*: சுவாமிக்கு எட்டுக் குணங்களாவன: அநந்த ஞானம், அநந்ததரிசனம், அநந்தவீரியம், அநந்தசுகம், நிர் நாமம், நிர்கோத்திரம், நிராயுஷ்யம், சகலசம்யக்த்வம் என் பன. இந்த எட்டுக் குணங்களை உடைய சருவக்கியன் பாதங் களை வணங்காத தலைகள் பிராணனில்லாமல் செத்துக் கிடக்கிற பிணத்தோடே சரி.

எ) *பழைய 1*: அஷ்டாங்கயோகி[3]யான பரமேசுரன் இட பாதத்தை வணங்காத்தலை, மெய்வாய்கண்மூக்குச்செவி உண்டாயினும் புலனில்லாத சித்திரம் போலும்.

குணமிலரே என்று பாடமாயின் நற்கோள் இலராயும் தரித்திரராயும் குணமில்லாதவராயும் ஆவார்கள் என்றுரை கொள்ளலாம்.

ஏ) *பழைய 2*: மெய், வாய், கண், மூக்குச் செவி என்னும் பொறிகளுக்கு ஏற்ற செயலில்லாத சித்திரப்பாவை, மரப் பாவை, கற்பாவைகளாகிய (வற்றிற்குப்) பொறிகளுக்கு உண்டாகிய குணமுமில்லை; (போன்ற); எட்டுவகைப்பட்ட குணங்களை உடைய திருவடிகளை வணங்காத் தலைகள்.

*மல்லர்*: என்பது எட்டுக்குணம் உள்ள கடவுளின் பாதத்தை வணங்காத தலை குணங்கெட்ட பொறிகளைப் பார்க்கக் குணங்கெட்டது எ-று.

மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்பொறிகளும் குணங்கெட்டுப் போச்சுதானால் கண்டிப்பு ருசி பிரகாசம் வாசனை சத்தம் என்ற ஐம்புலமும் தெரியாது. ஆனால் ஐம் புலன்களும் தெரியாததனால் ஊன் உடம்பாகவே நிற்கும்,

---

1 வணங்காத தலை பயனிலை எனவே வாழ்த்தாத-காணாத-வாய்.கண், முதலியனவும் பயனிலை என்பது உபலக்கணம். உபலக்கணமாவது ஒரு மொழி ஒழிந்துநின்ற தன் இனங்களைக் கொள்ளுதற்கு உரித்தாய் வருவது.

2 நினைத்தல் முதலிய மூன்றும் முறையே மனமொழி மெய்களின் செயல் களாகும்.

3 அஷ்டாங்கயோகி- இயமம்,நியமம்பிராணாயாமம்,பிரத்தியாகாரம்,தாரணை, தியானம், சமாதி, ஆதனம் என்ற எட்டு உறுப்புக்களை உடையவன்.

கடவுளை வணங்காதே போனால் ஆத்துமத்துக்கு சென்மம் வரும் என்கிறதனால் கண் தெரியாமை, காதுகேளாமை இது முதலான ஊனங்கள் உண்டாம். இந்த ஊனங்களைப் பார்க்கக் கடவுளை வணங்காமை மிக்ககேடு என்பது கருத்து.

கடவுளின் எட்டுக் குணங்களாவன: முதலாவது வரம்பில் ஞானம்; அதாவது எல்லையில்லாத ஞானம். இரண்டாவது வரம்பில் காட்சி; அதாவது அறிவு. மூன்றாவது இன்பம்; அதாவது செல்வம். நாலாவது வீரியம்; அதாவது பெலம். அஞ்சாவது நாமமின்மை; அதாவது பேரில்லாமை. அநேகம் பேருக்குள்ள வித்தியாசம் அறிகிறதற்குப் பேரிடவேண்டியதே அல்லாமல் நிகரில்லாதவனுக்கு பேரிடத்தேவையில்லை என்கிறதனால் கடவுள் ஒன்றாயிருக்கிறான் என்கிறதற்கு நாமமின்மை என்றது. ஆறாவது கோத்திரமின்மை; அதாவது கோத்திரம் இல்லாமை. வேறொருத்தனுடைய வினையினால் பிறந்தவனுக்கு மாத்திரம் முன்னோர்களால் கோத்திரமும் உண்டு. கடவுள் முன்னோர்கள் இல்லாமல் தானாயிருக்கிறான் என்கிறதற்குக் கோத்திரமின்மை என்றது. ஏழாவது ஆயுஇன்மை. அதாவது வயசு இல்லாமை. துவக்கம் உள்ளவனுக்கு மாத்திரம் இத்தனை வயசு உண்டென்று சொல்லலாம். ஆகையால் அக்கடவுள் துவக்கமில்லாமல் அநாதியாயிருக்கிறான் என்கிறதுக்கு ஆயுஇன்மை என்றது. எட்டாவது தீவினையின்மை; அதாவது பாவம் இல்லாமை. பொறி—ஐம்பொறி. இல்—இல்லாதது. எண்குணத்தான்—கடவுள். தாள்—பாதம். வணங்கா—வணங்காத.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'கோள் இல் பொறியிற் குணம் இல'*

'அறிவில்லாத பொறிகளையுடைய பாவைகள்போல ஒரு குணமும் உடையன அல்ல'—*மணக்குடவர்*. பொறி என்பதற்கு அத்தகைய பொறிகளையுடைய பாவை எனச் சினையின் பெயரை முதற்காக்கிய சினையாகு பெயராக்கண்டார் இவர்.

'கோள்களும், பொறிகளும் இருந்தும் பயன் இல்லை என்கிறது பரிதியார் உரை. ஒரு மனிதன் புலன்களை நுகர்ந்து வாழப் பொறிகள் மட்டும் இருந்து பயனில்லை. அவ்வக் காலத்து அவ்வப்பயனை நுகர்த்துகின்ற ஊழுக்கு உதவியாகும் கோள்களும்வேண்டும் என்பதை விளக்குகிறதாயினும் ஈண்டுக் கோள்கட்கு இயைபின்மை அறிக. *பரிதியார்* இவ்

வுரைக்கு ஏற்ப 'கோளின்—பொறியின்குணம் இல' என ஒப்புப் பொருளில் வந்த ஐந்தன் உருபாகக் கொண்டிருப்பர் எனத் தோன்றுகிறது.

*காளிங்கரும், பரிமேலழகரும்* கோட்பரமில்லாத அதாவது தத்தமக்குரிய புலன்களைக் கொள்ளாத பொறிகள் போலப்பயன்படா என்பார்கள்.

*பழைய 1.*: 'புலனில்லாத சித்திரம் போலும்' என்னும்.

*பழைய 2.*: 'பொறிகளுக்கு ஏற்ற செயல் இல்லாத பாவைகளைப் போலும்' என்னும். 'உயிரற்ற பிணத்தோடே சமம்' என்பர் *கவிராசர்* உயிர் செயலற்ற தன்மையால் அவரவர்களும் தத்தமக்குத் தோன்றியவாறு கூறுகின்றனர்.

'தனக்குரிய பொருளையுணராத புலன்போல' என்பர் *வீரமாமுனிவர்*. இவர் பொறிகளுக்கும் புலன்களுக்கும் வேறுபாடறியாது கூறுகின்றார் எனத் தோன்றக்கூடும். பொறி புலன்கட்குள்ள ஒற்றுமை நயம்பற்றிக் கூறினர் ஆதல் வேண்டும். *சுகாத்தியரும்* அங்ஙனமே.

ஏனைய உரையாசிரியர்கள் அனைவரும் இத்தொடருக்குக் *காளிங்கர், பரிமேலழகர்* கருத்தை ஒட்டியே உரைப்பர்.

இவற்றுள் பாவை, சிலை என்பதைக் காட்டிலும், நேரே, புலன்களைக் கொள்ளாத பொறிகள் என்றது சிறந்த பொருளாகும்.

*எண்குணத்தான்*: எண்வகையான குணங்களையுடையவன் என்பதே பழைய உரையாசிரியர்கள் அனைவருடைய கருத்தும் ஆகும்.

*பழைய 1.*: 'அஷ்டாங்கயோகியான பரமேசுரன்' என்னும்.

*சுகாத்தியர், திரு.வி.க.* இருவரும் முறையே எல்லாரும் எண்ணத்தகும் குணமுடைய கடவுள் எனவும், அன்பர் எணணுங் குணங்களையுடையவன் எனவும் கூறுவர். *இராமலிங்கனார்*, முதற்கருத்தைத் தம் உரையினும், சிறப்புரையில் 'எண்' என்பதை வினைத்தொகையாகக் கொண்டு, எண்ணத் தக்ககுணங்கள் என்றும் கூறுவர்.

'எண்ணும் குணங்களையுடையவன் எனினும் ஆம்'
என்பர் —*வ.உ.சி.*

'குழந்தை எளிமையான குணத்தையுடையவன் எண்மை -எளிமை எண்பொருளவாக-எளியபொருளவாக' (*குறள்* 424

''எண்பதத்தான்'' (558) எளியநிலை என்பன காண்க என் பர்.

எட்டுவகையான குணங்களில், *பரிமேலழகர்* தம் கருத் தாகவும், பிறர் கூற்றாகவும் இருவகைகளைக்கூறுவர். *பரிதி யாரும், கவிராசரும்* அனந்தஞானம் முதலிய எட்டுக்கூறுவர். அணிமாவை முதலாகக்கொண்ட எட்டும் அட்டமாசித்திகள் ஆமேயன்றி அவை குணங்கள் ஆகா. 'அட்டாங்கயோகி' எனின், இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தி யாகாரம், தாரணை, தியானம், சமாதி என்ற எட்டுவகை யோகவுறுப்புக்களையும் உடையான் என்பது பொருளாகும். இவை எட்டும் மக்கட்குக் கூறிய ஒழுக்கநெறியாமேயன்றி இறைவற்குள்ள குணங்களாகாமை தெளிவாவதால் இவ் வுரை பொருந்தாது.

இறைவன் குணங்களை எட்டு என்ற வரையறைக்குட் படுத்த விரும்பாத சிலர் எண்ணத்தக்க—பலகாலும் எண்ணி எண்ணி இன்புறத்தக்க குணங்கள் என எண்ணினர். சிலர் எண்ணத்தக்க, பாராட்டத்தக்க குணங்கள் என்று கருதி எண்ணத்தக்க சிறந்த குணங்கள் மக்களிற் சிறந்தாரிடமும் காணக்கூடும் என எண்ணுவர். இங்ஙனம் எண்ணிவந்த உரைகளே குழந்தையுரை போல்வன. சிறந்தனவாக எண் ணத்தக்க குணங்கள் யாவும் முற்கூறிய எட்டிற்கும் அப்பாற் பட்டன ஆகாமையை நுனித்தறியலாம். ஆகவே ஒருவகை எட்டுக்குணங்களையுடையவன் என்றலே சிறந்த உரையாம்.

இறைமைக்குணம் என்பன ஒரு சமயச் சார்பில்லாதன ஆதல் வேண்டும். பொருட்குணத்திற்குச் சமயச்சார்பில்லா ததுபோல, இறைமைக்குணங்களுக்கும் சமயச்சார்பில்லா தாரை என்பதையும் காட்டியகுணங்கள் சொல்லான் வேறா யினும் கருத்தொற்றுமையுடையன என்பதையும் இணைத்து எண்ணித் தெளிக.

'பாவை அல்லது கற்சிலை போலத் தலை பயன்படுதல் உடையனஅல்ல' என்ற உரை. 'தலை' என்ற சினையோடு பாவை என்றமுதலை உவமித்த குறைபாடுண்டாம். ஆதலின், அவ்வுரையும் சிறப்பின்றாம்.

ஆகவே உருவமில்லாத இறைவனைக் குணவடிவின னாக்கிக்கண்டு வழிபடுதல் வேண்டும் என்பதே சிறந்த கருத் தாதல் காண்க.

## ஒ) ஒப்புமைப் பகுதி:

*முற்றும்:*

தம்பத்தின் மேற்புழை ஏழுள வாக்கித் தமித்து வைத்த
கும்பத்தி னோடுநிகர் ஒக்காங்குனிப்பின்றி யைந்தாம்
பம்பத்தி காயம் பணித்தபிரான்பசும்தாரைத்தாள்
செம்பத்தி யால்வணங்காச் சிறியார்தம் சிரத்திரளே

— திருநூற். 23

*'கோளில் பொறியில்'*

கோளும் ஐம்பொறியும் குறையப்பொருள்
நாளும் கண்டு நடுக்குறும் நோன்மை — *கம்பராமா.* 1509

*'எண்குணத்தான்'*

பண்ணவன் எண்குணன்— சிலம்பு, 10:188.
எட்டுக்கொலாம் அவர் ஈறில் பெருங்குணம்

—*அப்பர்*, விடந்தீர். 8

எட்டுவான்குணத்துஈசன் எம்மான் —*அப்பர்*, இடைமருது. 4
கலைஞானிகள் காதல் எண்குணவன்காண்

*அப்பர்*, தென்குரங். 4

குணங்கள் தோள் எட்டுமூர்த்தி

*அப்பர்*, வன்னி. 7

இறையவனை மறையவனை எண்குணத்தினானை

—*சம்பந்தர்*. கானாட்டு. 3

எண்குணத்து ஈசனை —*பொன்வண்ண*. 53
எண்குணனும் கோட்பட்டு *சீவக*. 1469
எண்பால் இகந்து உயர்ந்தாற்கு இசைந்த கோயில்

—*சீவக*. 2600

இருநால் வினைகெடுத்திட்டு எண்குணனும் எய்தி

—*சீவசம்போதனை*

*'தாளை வணங்காத் தலை'*

தாளினான் கானப்பேர் தலையினால் வணங்குவார்

—*சம்பந்தர்*, கானப்பேர். 6

*'தலைவணங்குதல்'*

வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை

—*அப்பர்*, தனி. 7

தலையே நீ வணங்காய்—*அப்பர்*, அங்கமாலை. 1
தலையினால் வணங்கத் தவமாகுமே— *சம்பந்தர்*, மழபாடி. 4
வணங்கத் தலைவைத்து—*திருவாசகம்* 281
வந்தனை செய்யத் தலை அமைத்தேன்—*பொன்வண்ண*, 92

(கூ)

## 1.10. பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா ரிறைவ னடிசேரா தார்.

*உரைப்பகுதி:*

அ) *மணக்.*: 'சேராதவர்' பாடம்—தாமத்தர்பாடமும் இது என்பர் வ.உ.சி.

பிறவியாகிய பெரியகடலை நீந்தி ஏறுவர் இறைவனது அடியைச் சேர்ந்தவர்; சேராதவர் அதனுள்அழுந்துவர் என்றவாறு.

ஆ) *பரிதி*: எ-து. பிறவியாகிய சமுத்திரத்தை நீந்துவர் சிவனடி சேர்ந்தார்; சேராதார் பிறவியாகிய சமுத்திரத்தை நீந்தமாட்டார் என்றவாறு.

இ) *பரிப்:...*

ஈ) *காளி:* பிறவியாகிய பெரிய பௌவத்தினைக்[1] கடந்து முத்தராவர் இறைவனடியைச் சேர்ந்தார்; மற்று இங்ஙனம் சேராதார் எஞ்ஞான்றும் பிறவிப் பௌவத்தைக் கடத்தல் இலர் என்றவாறு.

இனி இப்படி அருட்பெருங்கடவுளரை வழிபட்டு ஒழுகும் நன்னெறியாளர் உறையும் தேயத்து மழைவளம் குன்றாது வாய்ப்புடைத்தாம் என்பதினாலும், மற்றவர் முதலாயினார் யாவர்க்கும் மழை இன்றியமையாமையாலும், மற்றிதன் பின்னரே மழை பெய்தல் சிறப்பினை அறிவிக்கிறது மேலை யதிகாரம்.

உ) *பரிமேல்.*: இறைவன் அடி என்னும் புணையச் சேர்ந்தார் பிறவியாகிய பெரியகடலை நீந்துவர். அதனைச் சேராதார் நீந்தமாட்டாராய் அதனுள் அழுந்துவர்.

1 பௌவம்-கடல்

காரணகாரியத் தொடர்ச்சியாய்க்[1] கரையின்றிவருதலின் பிறவிப்பெருங்கடல்[2] என்றார். சேர்ந்தார் என்பது சொல் எச்சம்.[3] உலகியல்பை நினையாது இறைவன் அடியையே நினைப்பார்க்குப்[4] பிறவியறுதலும், அவ்வாறன்றி மாறி நினைப்பார்க்கு[5] அஃது அருமையுமாகிய இரண்டும் இதனால் நியமிக்கப்பட்டன.

*காரி.*: சேர்ந்தார் என்பது சொல் எச்சம் என்றார். அச் சொல் எஞ்சி நிற்றலின் 'செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்'[6], 'தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்'[7] என வினைமுதற்கண்ணும், 'ஒறுத்தாரை ஒன்றாக வையாரே வைப்பர்'[8] எனச் செயப்படுபொருட்கண்ணும் வருவனபோலப் பொருள் பெற்றுச் சொற்பெறாமையின் என்க. 'உடையார்முன் இல்லார் போல் ஏக்கற்றும் கற்றார், கடையரே கல்லாதவர்'[9] என்பதும் அது.[10] அடிப்புணை என்னாமையால் ஏகதேச உருவகம்.

*இராமா.*: "சொல்லென் எச்சம் முன்னும் பின்னும் சொல்லளவல்லது எஞ்சுதல் இன்றே"[11] ஆதலின் இக்குறளில் சேர்ந்தார் என்ற ஒருசொல் குறைந்து நின்றது காண்க.

ஊ) *கவிராசர்*: சுவாமியுடைய பாதங்களைச் சேர்ந்தவர்கள் பிறவி என்னும் கடலைக் கடப்பார்கள்; சுவாமி பாதங்களைச் சேராதார்கள் பிறவிக்கடலைக் கடக்க மாட்டார்கள்.

எ) *பழைய l.*: பரமேசுரனுடைய சீபாதகமலமாகிற தெப்பத்தைப் பிடித்தபேர் செனனசாகரம்[12] நீந்திக்கரை ஏறுவார்; அவர் பாத தெப்பையைப்[13] பிடியாத பேரெல்லாம் கரையேறமாட்டார்கள்.

1 வித்தும் மரமும் போலக் காரணமாய் இருந்தது காரியமாயும், காரியமாய் இருந்தது காரணமாயும் வருதலின் என்பது கருத்து.
2 'கரை காணாக் கடல் என்பார் பெருங்கடல் என்றார்'-சிலம்பு.15:28உரை
3 இக்குறளின் இராமாநுசகவிராயர் உரை விளக்கப்பகுதியைக் காண்க.
4 இறைவனடியை நினைத்தலாவது இடையீடு இன்றி எப்போதும் நினைத்திருத்தல்.
5 மாறிநினைத்தலாவது இறைவனை நினையாமல் உலகையும் தன்னையும் போகங்களையும் நினைத்திருத்தல். 6 குறள் 26. 7 குறள் 201.
8 குறள் 155 9 குறள் 395
10 இதில் தலையாயினார் என்பது சொல்லெச்சம் என்றதாம்.
11 தொல். சொல்.441. 12 செனனசாகரம்-பிறவிக்கடல்.
13 தெப்பை-தெப்பம்

*ஏ) பழைய 2:* இறைவன் திருவடி என்னும் தெப்பத்தைச் சேர்ந்தார் பிறவியாகிய கடலை நீந்துவர். திருவடியாகிய தெப்பத்தைச் சேராதார் பிறவிக்கடலைநீந்தமாட்டார்; அழுந்திக் கிடப்பார்.

## *ஐ) தொகுப்பும் குறிப்பும்:*

இக்குறட்பாவிற்குப் பழைய உரையாசிரியர்கள் அனைவரும் ஒரே வண்ணமாக உரைப்பர். *சுகாத்தியரும் வீரமாமுனிவரும்* மறுபிறப்புண்மையை ஒவ்வாத கிறித்தவர்களாதலின் பிறவிக்கடல் என்பதற்குப் பிறவித்துன்பம் என்பர். தலைமையான குணங்கள் இல்லாதவர்கள் வாழப்போதுமான வளங்களைப் பெற்றிருப்பினும் துன்பமின்றி இன்பத்துடன் வாழ்த்தெரியாதவர்களேயாவர் என்பர் *புலவர் குழந்தை.*

*வள்ளுவர்* மறுபிறப்புண்மையையும், அதன் ஏதுவாய ஊழையும் ஒப்பிய காலத்தவராதலின் அதற்கேற்பக் கூறலே எவ்வகையிலும் ஏற்புடையதாகும். பிறவிப் பெருங்கடல்—உருவகம். '*அ. கு. ஆதித்தர்* 'சேர்ந்தார்' என்றசொல் குறட்பாவில் இல்லாமையால் தனித்தொடராக வைத்துப் பொருள் கூறுதல் சாலாது என மறுத்து இறைவனடி சேராதார் பிறவிப் பெருங்கடலை நீந்துவரோ? நீந்தார் எனக் கொள்ளலாம் என்பர். நீந்துவர் என்பது ஒலிக்குறிப்பால் இப்பொருள் உணர்த்தியதாகக் கொள்வர்.'[1] தோன்றா எழுவாயும் இசைஎச்சத்தால் சொற்களை வருவித்து முடித்தலும் இலக்கணமரபு ஆதலின் சேர்ந்தார் என எழுவாய் வருவித்து முடித்தற்கு இழுக்கின்று.

## *ஓ) ஒப்பு[illegible]:*

*முற்றும்*

சுருங்கிடை; உன்னொரு துணைவன் தூயதாள்
ஒருங்கிடை உணர்வினார் ஒய்வில் மாயையின்
பெருங்கடல் கடந்தனர் பெயரும் பெற்றிபோல்
கருங்கடல் கடந்தனன் காலினால் என்றான்

— *கம்பராமா.* 6360

சாதல் நோய்சரை பிறவி, தாஞ்செய் தீவினைக் கடலுள்

---

1 முருக தனுஷ்கோடி மணிவிழா மலர், பக்கம்78

மாதுயர் உழந்து உறுநோய் மறுகு மன்னுயிர்க்கு எல்லாம்
தீதில் நன்னெறி பயந்து திரைசெய் நீள்கரை ஒருவிப்
போதறாம்புணை படைத்தாய் புலவர்தம் புலவர்க்கும் புலவா
*—நீலகேசி*, 155

*'பிறவிப்பெருங்கடல்'*

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையால் எற்றுண்டு *—திருவாசகம்*, 31

பிறப்பென்னும் பெருங்கடல்
*— திருவாசகம்*, கோயில்நான். 16

பிறவிமாக்கடல் பெயர்க்கு மாற்றலால்

இறைவன் அன்னவன் ஏந்து கொள்கையான் *—மேருமந்தர*,

பிறப்பெனும் பெருங்கடல் பிழைக்கலாகுமோ
*— கம்பராமா*. 1419

*'பிறவிப்பெருங்கடல் நீந்துவர்'*

அற்றார் பிறவிக்கடல் நீந்திஏறி *—சுந்தரர்*, நெல்வாயில். 3

பிறவிப்பெருங்கடலை நீந்திய பெய்வளையாய்
*— திருவெம்பாவை*

*'அடிசேர்ந்தார் நீந்துதல்''*

மறுபிறப்பறுக்கும் மாசில்சேவடி *— பரிபாடல்* 3:2

அறவியங்கிழவோன் அடியிணையாகிய
பிறவி என்னும் பெருங்கடல் விடூஉம்
அறவி நாவாய் ஆங்குள தாதலின் *—மணிமேகலை*, 11:23-25

அம்மையே பிறவித்துயர் நீத்திடும்.....
இடைமருதன் கழல் *— அப்பர்*, இடைமருது. 4

பிறவியும் மறவிசிறுவர்...மணிமிடறனதடியினை
தொழுமவரே *—சம்பந்தர்*, சிவபுரம். 4

உமதடி தொழும் இயலுளார் மறுபிறப்பிலரே
*— சம்பந்தர்*, இன்னம்பர். 9

புணைவன் பிறவிக்கடல் நீந்துவார்க்கே
*—திருவாய்*.28:1

ஆழ்கடற்புணையின் அன்னன அறிவரன்சரண் அடைந்தான்
*—சீவக.*, 380

......நவைசெய்பிறவிக் கடலகத்துள்
பாத கமலந்தொழுவேங்கள் பசையாப்பவிழப் பணியாயே
—சீவக. 1242.

அணைவுற வந்தெழும் அறிவு தொடங்கின அடியார்பால்
இணையில் பவங்கிளர் கடல்சள் இகந்திட இருதாளின்
புனையருள் அங்கணர் —பெரியபுரா. திருஞா. 833

பித்தமயக்காஞ் சுறவெறியும் பிறவிப் பெரிய கடல்கடக்க
உய்த்து மீண்ட நாவாயிற்றாமும் போவா ரொக்கின்றார்
—கம்பராமா. 2001

இப்பிறவிக்கடல் கடந்தேன் இனிப்பிறவேனிருவினையின்
துப்புறழு நீர்த்தசுடர்த் திருவடியால் துடைத்தாய்நீ
— கம்பராமா. 2665.

மரணந் தோற்றமென் றிவற்றிடை மயங்குப அவர்க்குன்
சரண மல்லதோர் சரணில்லை அன்னவை தவிர்ப்பான்
—கம்பராமா. 10201.

வேதனைக்கடலின் தனிப்புணை — திருக்கலம். 40

*'நீந்தார் இறைவனடி சேராதார்':*

'இல்லை பிறவிக் கடலேறல்...
உடையானைச் சாராதார் தாம் —சிவபெருமான் இரட்டை. 5
வீசுடலமெறி திரையின் மேவுகடன் மருவுபுணை—திருக்கலம். 53
பாதமலர் எழுபிறவிக்கடல் நீந்தும் பற்றிலாதோர்
—திருவிளையாடற்புரா., திருவாலவா. 2.

பீடில் பிறப்பெனும் ஆழிதனைக் கரையேற விடற்கருளாய்
பேரற நற்பலகைக் குருவாணியெனத்திக ழைந்துவதம்
கூடமெனப்பிறழ கப்பல் நிரப்பிய கொள்கைச் சரக்கெனவே
கூறியவேதமு மாதிபுராணமும் குற்றமில தத்துவமும்
நீடநிரப்பிய நிச்சநயம்பிரமாணமெனுங் கயிற்றால்
நேர்மையெனும் விரிபாயுமருட்கொடிகட்டி மீகாமனென
ஓடநடத்தியே உயிர்க்கரை ஏற்றுவன் உருட்டுக சிறுதேரே
உலகொரு மூன்றறியுந் திருஞானாஉருட்டுக சிறுதேரே
—ஆதிநாதர் பிள்ளைத்தமிழ் 95

## ஓ) மேற்கோள் விளக்கப்பகுதி:

*'பிறவிப் பெருங்கடல்...........சேராதார்'*

*'உருவகம்'*

*பெருந்தே:* பிறவிக்கும் கடலுக்கும் நீந்துதற்கு அருமை என்னும் பண்பு பொதுவாகி, உவமிக்கப்பட்ட பொருளையே உவமையாகச் சொன்னமையால் உருவகமாயிற்று. மேலும்

உவமைப் பண்பு எய்தியபின் ஆவது அது என்று தான் அது ஆகச் சொல் உருவகமாம்.

(*வீரசோழி, நூ. 150*)

பிறவி என்னா பெருங்கடல் என்னும் சொல் தொக்கு நின்றமையால் தொகை உருவகம். (*வீரசோழி, 358,*)

*வைத்தியநாத:* ஏகதேச உருவக அணிக்கு மேற்கோள்.

(*இல. விள. 644*)

*திருப்பாற் கடல்நாத:* உருவக அணிக்கு மேற்கோள்.

(*முத்து. 1175*)

*'எதிர்மறை எச்சம்'*

*மயிலை:* இதில் சேர்ந்தார் நீந்துவர்என எதிர்மறை கொண்டு முடிதலின் எதிர்மறை எச்சமாயிற்று. (*நன். 359*)

*'சொல் எச்சம்'*

*வைத்திய நாத:* சேர்ந்தார் என்பது போலச் சொல்மாத்திரம் எஞ்சி நிற்பது சொல் எச்சமாவதல்லது குறிப்பெச்சம் ஆகாமைக்கு எடுத்துக்காட்டுவர். (*இல. விள. 350*)

சொல் மாத்திரம் எஞ்சுவதல்லது தொடராய் எஞ்சுதலின்று. ஆதலின் 'சேர்ந்தார்' என்பதும் அன்ன.

(*இல. விள. 351*)

(௧௦)

## பண்டைய உரையாசிரியர்களின் குறள்வைப்புமுறை

### 1. கடவுள் வாழ்த்து

| | அகர | கற்றதி | மலர் | வேண்டு | இருள் | பொறி | தனக்கு | அறவாழி | கோளில் | பிறவிப் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மணக். | 1 | 2 | 3 | 6 | 7 | 8 | 4 | 5 | 10 | 9 |
| பரிதி. | 1 | 2 | 3 | 5 | 4 | 7 | 6 | 10 | 8 | 9 |
| காளி. | 2 | 1 | 3 | 7 | 6 | 8 | 4 | 9 | 5 | 10 |
| பரிமேல். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |

# 2. வான் சிறப்பு

அ) *மணக்.:* வான்சிறப்பாவது மழையினது தலைமை கூறுதல். இது கடவுட் செய்கைத்தாதலால் அதன்பின் கூறப்பட்டது. இஃது ஈண்டுக் கூறியது என்னையெனின், பின் உரைக்கப்படுகின்ற இல்லறமும் துறவறமும் இனிது நடப்பது மழையுண்டாயின் என்றற்குப் போலும். அன்றியும் காலத்தின் பொருட்டுக் கூறினார் எனினும் அமையும்.

ஆ) *பரிதி.:* பூலோகத்திலுள்ள தன்மதானம் செய்யும்போது மழையின்றி நடவாது; அங்ஙன் நடக்கில் வான்சிறப்பு வேண்டும் என்றவாறு.

இ) *பரிப்.:* ...

ஈ) *காளி.:* ...

உ) *பரிமேல்.:* அஃதாவது அக்கடவுளது ஆணையான் உலகமும்அதற்கு உறுதியாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக்கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

ஊ) *கவிராசர்.:* அஃதாவது ஆகாசத்திலே மேகங்கள் வந்து பெய்யப்பட்ட மழையினது நன்மையைச் சொல்லுகிறோம் என்பதாம்.

எ) *பழைய. 1:* அஃதாவது பூலோகத்தில் உண்டான தர்ம அர்த்த காமமோக்ஷ பரிபாலனம் மழையின்றி நடவாது ஆதலால் வான்சிறப்பு வைக்க வேண்டிற்று என்றவாறு.

ஏ) *பழைய. 2:* அஃதாவது மழையினது சிறப்புக் கூறியது, அக்கடவுள் ஆணையான் வந்து பெய்யும் மழையினது சிறப்பு எனக் கொள்க.

*மல்லர்:* வானத்தினின்று பெய்கின்ற மழையினுடைய மிகுதி யான நன்மை.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*டாக்டர் ஜி.யு.போப்:* உயிருள்ளவை அனைத்தும் தாம் உண்ணும் உணவை அடிப்படையாகக் கொண்டவை. உணவு மழையை அடிப்படையாகக் கொண்டது. மழை தெய்வீகஇறை வழிபாட்டினை அடிப்படையாகக் கொண்டது. தெய்வீகஇறை வழிபாடு நல்ல செயல்களை அடிப்படையாகக் கொண்டது.

*வீரமா:* மழைகொடுக்கும் வானத்தின் புகழ்.

*கா.சு.:* வானத்தில் ஞாயிறு முதல் விண்மீன் ஈறான ஒளிப் பொருள் பல இருந்து உதவினும், அவ்வுதவி மழையின் சிறப்பைப் போல அனைவருக்கும் பயன்படுவது அன்று. கடவுள் அருளைக் குறிக்க மழையே சிறந்த சான்று. ஆதலால் மழைச்சிறப்புக் கூறுதல் திருவருட் சக்திக்கு வணக்கம் கூறுதலாம். கடவுள் வாழ்த்தின்பின் அவரது திருவருளைச் சிறப்பித்து வாழ்த்துதல் பொருத்தம் உடையதே.

*திரு.வி.க.* மழையினது சிறப்பைக் கூறுதல்.

*தண்டபாணி:* கடவுளை அறிதற்குக் கருவியான ஆக்கவும் அழிக்கவும் வல்ல மழையினது சிறப்பைக் கூறுதலாம்.

*இராம:* மழையின் பெருமை.

*குழந்தை:* மழையினது சிறப்புக்கூறுதல். உலகியல் நடத்தற்கு ஏதுவாகலின் மழை முப்பாற்கும் பொதுவாய்ப் பாயிரத்தின் கண்ணதாயிற்று.

*தேவநேயர்:* இறைவனருளுக்கு அடுத்து, அவன் ஏற்பாட்டின் படி, உலக நடப்பிற்கும் அறம் பொருளின்பங்களைப் பெறுதற்கும் இன்றியமையாத துணைக்காரணமான மழையின் சிறப்புக் கூறுதல்

*கா.அ.:* மழையைக் கடவுளாக உருவகித்து இம்மழையுருவில் கடவுள் வாழ்த்தைத் தொடர்வது இவ்வதிகாரம். இது இன் பத்துப்பாலுக்குரிய பாயிரமாகும். வானைச் சிறப்பித்துக் கூறும் சிறப்புரை என்னும் பொருளது.

மழை 'கடவுட் செய்கைத்து' 'கடவுளாணையால் பெய்வது' என்ற கருத்து பழைய உரையாசிரியர்களிடம் நிலவியிருக்கிறது. பிற்காலத்தில் பாவாணரும் அக்கருத்தினரே. *அப்பாத்துரையார்* மழையைக் கடவுளாக உருவகித்து, அக்

கடவுள் உருவில் மழையைச் சிறப்பிப்பதாகக் கூறுவர். மழை கடவுள் உருவினது என்பதைக் காட்டிலும் மழை கடவுள தாணையால் பெய்வது என்ற கருத்து நம்மறிவிற்கு மிக அணுகத்தக்கதாம்.

## 2.1. வானின் றுலகம் வழங்கி வருதலாற் றானமிழ்த மென் றுணரற் பாற்று.

## உரைப்பகுதி:

*அ) மணக்.:* 'தானமுதம்' பாடம் 'தானமுதமென்றுணரும்' பாடம்என்பர் வ.உ.சி.

மழைவளம் நிலைநிற்றலானே உலகநடை தப்பாது[1] வருதலால் அம்மழைதான் உலகத்தார் அமுதம் என்று உணரும் பகுதியது என்றவாறு.

இஃது அறம் பொருள் இன்பங்களை உண்டாக்குதலானும், பலவகைப்பட்ட உணவுகளை நிலைநிறுத்தலானும் இம்மழையினை மற்றுள்ள பூதமாத்திரமாக[2] நினைக்கப் படாது என்ற நிலைமை[3] கூறிற்று.

*ஆ) பரிதி.:* எ-து மழையினாலே உலகந் தழைத்து வருகையால் மழையும் அமிர்தமும் நிலையாம் என்றவாறு.

*இ) பரிப்.:* ...

*ஈ) காளி.:* எ-து மழையானது வந்து நிலைபெற்று, மற்றதனால் இவ்வுலகத்து உயிர்களானவை நடைபெற்றுச் சேறலான் மற்றிம்மழையானது தான் இவ்வுலகத்துக்கு ஓர் அமுதம் என்று உணரும் பகுதியை உடைத்து என்றவாறு.

இனி, மற்று இக்கடவுள் வணக்கமும் வான்சிறப்பும் துறவறம் இல்லறம் முதலாகிய எனைத்து ஒழுக்கத்துக்கும் இன்றியமையாப் பணபினவாகலின் இவற்றின் பின்னர் அவ்விரு வகை ஒழுக்கத்திற்கும் தொகைநிலைப்பாயிரம் உணர்த்துகின்றார். ஆகலான் அவற்றுள் முன்னர் அவ் வீட்டுநெறிக்கு இயல்பாகிய துறவுநெறிப்பாயிரம் அறிவிக்கின்றது. மேலை அதிகாரம் முற்றும்.[4]

---

1 தப்பாது-தவறாது
2 ஏனைய விண், அனல், கால், மண் ஆகிய பூதங்கள் மட்டுமாக.
3 நிலைமை- இன்றியமையாத தன்மை
4 இக்குறளைப் பத்தாவதாகக் கொண்டமையின் இங்ஙனம் வருகின்ற அதிகாரத்துக்குத் தோற்றுவாய் தந்தார்.

உ) *பரிமேல்.:* மழை இடையறாது நிற்ப உலகம் நிலை பெற்று வருதலான், அம்மழைதான் உலகத்திற்கு அமிழ்தம் என்று உணரும் பான்மையை யுடைத்து.

நிற்ப என்பது நின்று எனத் திரிந்து நின்றது.[1] உலகம் என்றது ஈண்டு உயிர்களை. அவை நிலைபெற்று வருதலாவது பிறப்பு இடையறாமையின் எஞ்ஞான்றும் உடம்போடு காணப் பட்டு வருதல். அமிழ்தம் உண்டார் சாவாது நிலைபெறுத லின் உலகத்தை நிலைபெறுத்துகின்ற வானை அமிழ்தம் என்று உணர்க என்றார்.

*காரி:* நிற்ப என்பது பிறவினையாதலின் நின்று எனத் திரிந்து நின்றது.

*வை.மு.கோ.:* வானினால் உயிர்கள் நிலைபெற்றுத் தொழில் கள் நடந்துவருதலால் அது அமிழ்தம் என்று உணரற்பாற்று என்றும் கொள்ளலாம். வானின்று உலகம் வழங்கிவருதலான் எனவும் பொருந்தும்.

ஊ) *கவிராசர்:* மழை காலங்களிலே பெய்து வருகிறபடி யினால் பூலோகம் நன்றாய் இருக்கும். ஆனபடியினால் அந்த மழை இந்த உலகத்திற்கு அமிர்தம் என்று சொல்லப்படும்.

(வி-ரை) ஈண்டு உலகம் என்பது உயிர்களை. சீவன்கள் தம்தம் வினைக்கு ஈடாகப் பிறப்புக்களை எடுத்துச் சம்பாரத் தில்[2] வாழ்ந்து வருதலால் அவை நிலைபெற்று வருகின்றன. அமிழ்தம் உண்டவர்கள் சாவாது நித்தியமாய்இருத்தல்போல உலகத்திலுள்ள சீவன்கள் நிலைபெற்று வாழ்வதற்கு அனு கூலமாய் இருக்கின்ற மழையை அமிழ்தம் என்றார்.

எ) *பழைய 1:* மழையினாலே உலகம் தழைத்து வருகை யினால் மழையும் அமுதமும் நிகராம்.

ஏ) *பழைய 2:* தானமிர்த மென்றுணரப் பாற்று—பாடம். மழை இடையறாது நிற்ப உலகம் நிலைபெற்று வருதலால் அம்மழை உலகத்திற்கு அமிர்தம் என்று அறியும் பான்மை உடைத்து.[3]

மழைபெய்யாதாகில் உயிர்கள் இறந்துபோம். மழை பெய்யின் உயிர்கள் எக்காலமும் உளவாம். ஆதலால் அமிர் தம் என்று அறிக.

---

1 நின்று என்பது பிறவினை சொண்டு முடியாது ஆகலின் நிற்ப எனத் திரித்துப் பொருள் கொள்ளப்பட்டது.

2 சம்பாரத்தில்-குடும்பத்தில். 3 உணரப்பாற்று என்பது பாடம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'வானின்று'*

'வான் இடையறாது நிற்ப' எனச் செய்து என்னும் வினையெச்சம், பிறவினை வாய்பாட்டு வினைமுற்றைக் கொண்டு முடியாதாதலாலே, அதனைக் காரணப் பொருளில் 'செய' என்னும் வாய்பாட்டு வினைஎச்சமாகத்திரித்து, 'மழை இடையறாது நிற்ப' என உரைகண்டனர் *மணக்குடவர், பரிமேலழகர், பழையஉரைகாரர்* முதலிய அனைவரும்.

*பரிதியார்* சொற்பொருள் கருதாது, கருத்துப் பொருளாக 'மழையினாலே' என்றனர். இதனை 'வான்நின்று' என்பதில் நின்று என்பதை மூன்றாம் வேற்றுமையுருபாகக் கொண்டு காரணப் பொருளதாயிற்று என்பர் சிலர். நின்று என்பது மூன்றனுருபு அன்மையை, *தொல்.* சொல் 103 கொண்டு தெளியலாம்.

*காளிங்கர்* 'மழையானது வந்து நிலை பெற்று அதனால் உலகு வழங்குதலான் என 'நின்று' என்ற செய்தென் எச் சத்தை இயைக்க, 'அதனால்' என்ற மூன்றனுருபு ஏற்ற சுட்டுப் பெயரை வருவித்து முடிப்பர். இவருள் நிற்ப எனத் திரித்துப் பொருள்கண்ட *மணக்குடவர்* முதலியோர் உரையே சிறந்தது.

'வானின்று'—வானிலிருந்து (மழை வழங்கிவருதலால்) என ஐந்தனுருபு நீக்கப் பொருளதாக வைத்து உரைகண்டவர் கள் *சுகாத்தியர், திரு.வி.க.* ஆகிய இருவரும். அங்ஙனமா யின் 'வழங்கிவருதலால்' என்ற வினைக்கு வினைமுதல் வரு வித்துரைக்க வேண்டுவதாகும். அதனால் 'மழை' என்ற எழு வாயை வருவித்தனர் அவர்கள் அனைவரும் என்க. *வ.உ.சி.* மழையினின்று' என்பர்.

*'உலகநடை'*

உலகநடை — *மணக்குடவர்*, 'இவ்வுலகத்துயிர்களானவை' *காளிங்கர்*. ஏனையோர் உலகம் என்றே உரைப்பர். இவை சொல்லால் வேறுபடினும், பொருள்—கருத்து—இலக்கணம் இவற்றான் ஒத்த பொருளினவாதலைக் காணலாம்.

'தானமுதமென்றுரைக்கும்'—தருமர்பாடம்.

'தானமிர்தமென்றுரைப்பார்' நச்சர் பாடம் என்பர் *வ.உ.சி.*

'அமிழ்தம்', என்பதற்கு, அமிழ்தம், அல்லது உணவு என்ற இருபொருளிலும் உரையாசிரியர்கள் வழங்குகின்றனர்.

*தண்டபாணியார்* அமிழ்து என்ற சொல் ஆரியச் சிதைவு அன்று என்பர். அமிழ்தம் தமிழ்ச்சொல்லே என்பதற்கு அவர் காட்டும் அமைதி பாராட்டுக்குரியது.

இங்ஙனம் கருத்து மாற்றம் உடைய இக்குறட்பாவில், 'வானமானது காலங்களிற் பெய்து' என்ற *கவிராசர்* பாராட்டுக்குரியர். 'இடையறாது நிற்ப' 'வந்து நிலைபெற்று' என்கின்ற *பழைய உரை* (1) கருத்தும், *காளிங்கர்* கருத்தும். அத்துணைச் சிறப்புடையனவல்ல. வேண்டிய காலத்து வேண்டிய இடத்து வேண்டிய அளவிற் பெய்யாது நிலைபெற்று இடையறாது பெய்யுமாயின் கேடுதரும் ஆதலான் என்க.

ஒ) *ஒப்புமைப் பகுதி:*

*'வானின்று உலகம் வழங்கி வருதல்'*

பெய்தவன் பெருமழை உலகம் உய்யச்செய்தவன்

—*சம்பந்தர்*, திருவல்லம். 4

*'வான் அமிழ்தம்'*

அமிழ்து திகழ் கருவிய கணமழை—*பதிற்றுப்*. 17 11

அமுதளாவிய சீதக்கார்—*கம்பராமா*. 2088

ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*'வான்நின்று உலகம்'*

*பெருந்தேவனார்:* வான்நின்று என்பதில் ஏழாம் வேற்றுமை (பிரத்தியத்தின் மேல்) உருபின்மேல் 'நின்று' என்ற ஐந்தாம் வேற்றுமை உருபு வந்ததற்கு மேற்கோள் (*வீரசோழி*.35 உரை).

*தெய்வச்.:* உலகம் வழங்கி வருதற்கு மழை ஏதுவாகலின் இதற்குப் பொருள் உரைக்குங்கால் மழை நிலைநிற்றலான் உலகநடை தப்பாது என உரைக்க வேண்டுதலின், இது வேற்றுமை உருபான் வந்திலவாயினும் பொருண்மை முகத்தான் வேற்றுமையாதலின் இது இவ்வாறும் வரப்பெறும் என்று வழுவமைத்தவாறாம் (தொல். சொல். 103).

*வைத்தியநாத:* நிற்ப என்ற செயவென் எச்சம் நின்று என ஊகரஈறாகத் திரிந்து வந்தமைக்கு (*இல விள*. 246).

காரண காரியப் பொருட்டாய் இறந்தகாலம் உணர்த்தும் செயவென் எச்சம் செய்தென் எச்சமாய்ப் பிறவினை கொண்டமைக்கு மேற்கோள்.

*'உலகம்'*

*காரி*: 'அகரமுதல' என்ற முதற்குறளினைப்பார்க்க. உலகு என்றது உயிர்களை உணர்த்துமாறு விளக்க.
(*நுண்பொருள் மாலை*, குறள் 1)

*'அமிழ்தம் என்று உணரற்பாற்று'*

*இராமா.*: அமிழ்தம் போல்வது என்று உணரற்பாற்று என்பது உவம உருபின்றி வந்ததற்கு மேற்கோள் (நன். 407)

(கக)

## 2.2. *துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத் துப்பாய தூஉம் மழை.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.*: 'துப்பாவ்தூஉம்' பாடம். தாமத்தர் பாடமும் இதுவே என்பர் வ.உ.சி.

பிறிதொன்று உண்பார்க்கு அவர் உண்டற்கான உணவுகளையும் உண்டாக்கித் தன்னை உண்பார்க்குத்தானே உணவாவதும் மழையே எ-று.

இது பசியைக் கெடுக்கும் என்றது.

*ஆ) பரிதி*: எ-து துப்பாற்குத்—பாடம். எ-து உண்பாற்கு வேண்டின உணவை உண்டாக்குவதும், வலியாற்கு வலியுண டாக்குவதும் மழை எ-று.

*இ) பரிப்.*: உணவாக்கி என்னாது உணவினை உணவாக்கி என்றது உயிர்ப்பன்மையை நோக்கி, அவரவர் உண்ணத்தகுவன எ-று.

*ஈ) காளி*: எ-து உண்பவர் யாவர்க்கும் உணவுப்பொருளாய் இன்னும் அவற்றை உளவாக உறுதி பண்ணிக் கொடுப்பதூஉம் செய்து, மற்று உண்பவர் யாவர்க்கும்தானே உணவுமாய் நிற்பதூஉம் மழை எ-று.

*உ) பரிமேல்*: உண்பார்க்கு நல்ல உணவுகளை உளவாக்கி, அவற்றை உண்கின்றார்க்குத் தானும் உணவாய் நிற்பதூஉம் மழை.

தானும் உணவாதலாவது தண்ணீராய் உண்ணப்படுதல். சிறப்புடைய உயர்திணைமேல் வைத்துக் கூறினமையின் அஃறிணைக்கும் இஃது ஒக்கும். இவ்வாறு உயிர்களது பசியையும் நீர்வேட்கையையும் நீக்குதலின், அவை வழங்கி வருதல் உடைய ஆயின என்பதாம்.

*காரி*: முடிபு உயர்திணையாயினும் அஃறிணைக்கும் ஒக்கும். 'வலியார் முன் தன்னை நினைக்க'[1] 'சினம் என்னும்சேர்ந்தாரைக் கொல்லியும்'[2] அது, இஃது ஒருபாற் கிளவி எனைப்பாற் கண்ணும் வரும் என்னும் விதிபெற்ற பொருளாற்றல்.[3]

ஊ) *கவிராசர்*: உண்பவர்களுக்கு உண்ணத்தக்கவஸ்துவை[4] நல்ல உணவாக உண்டாக்கி அதை உண்கிறவர்களுக்குத் தானும் உணவாகி நிற்கும் மழை.

எ) *பழைய* 1: உண்பார்க்கு வேண்டின உணவை உண்டாக்குவதும், வலிதாவார்க்கும் வலிதான சத்துவம்[5] உண்டாக்குவதும் மழை.

*மல்லர்*: உண்கிறவர்களுக்கு மிகுதியான உணவுகளையுண்டாக்கித் தான் உண்கிறவர்களுக்கு ஒருணவாயிருந்து பெய்கிறது மழை எ-று.

உண்ணப்படும் தானியங்களும் கனிகளும்நானாவிதமான பதார்த்தங்களும் மழையினாலே உண்டாகிறதனாலேயும் குடிக்கப்படும் தண்ணீர் மழைத்தண்ணீராய் இருக்கிறபடியினாலேயும் மழையானது உயிர்களுடைய பசியையும் தாகத்தையும் தீர்க்கப் பெய்கிறது என்பது கருத்து.

துப்பு-மிகுதி, துப்பார்-உண்கிறவர், ஆய-ஆன, துப்பு-உணவு, தூஉம்-பெய்யும்.

ஏ) *பழைய* 2: உண்பார் நெல் முதலாகிய சகல புசிப்புக்களையும்[6] உண்டாக்கி அப்புசிப்புக்களை உண்பார்க்குத் தானும் ஒருபுசிப்பாகி, நிற்பதற்குப் பெய்யும் மழை.

---

1 குறள் 250 2 குறள் 306

3 'மெலியார் எனச் சிறப்புடைய உயர்திணைமேல் கூறினாராயினும் ஏனை அஃறிணையும் கொள்ளப்படும்' எனவும் "சேர்ந்தாரை என உயர்திணைப் பன்மை மேல் வைத்து ஏனை நான்கு பாலும் தம் கருத்தொடு கூடிய பொருள் ஆற்றலால் கொண்டார்" எனவும் உரைத்தார் பரிமேலழகர்.

4 வஸ்து-பொருள்

5 சத்துவம்-உடல்வலிமை

6 சகலபுசிப்புக்களையும்-உண்பொருள் அனைத்தையும்

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

துப்பு, இக்குறளில் ஐந்துமுறை வந்திருக்கிறது. பரிமே லழகரும், மணக்குடவரும், பழைய உரையாசிரியர், பரிதி யார், காளிங்கர் போன்றவர்களும் துப்பார்க்கு என்பதற்கு உண்பார்க்கு என்றே பொருள் கண்டனர். அடுத்துவரும் 'துப்பாய' என்பதில் உள்ள 'துப்புக்கு' உணவு என்றும், அடுத்து அண்மையில் வரும் துப்புக்கு வலிமை என்றும் பொருள் கண்டனர். பழையவுரையாசிரியர் இருவரும் பரிதியாரும் வலிமை என்றும், காளிங்கர் உறுதி என்றும் கொள்ளுவர். இவற்றுள் சிறந்தது கொள்க.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*'மழை உணவாதல்'*

உணவெனப்படுவ நிலத்தொடு நீரே —*புறநா*. 18:21

நெல்லும் நீரும் எல்லோர்க்கும் எளிய —*புறநா*. 58:10

இருமருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்
—*புறநா*. 70:9

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே —*புறநா*. 186:1

## ஓ) மேற்கோள் விளக்கப்பகுதி:

*'துப்பாய தூஉம்'*

*சுப்பிரமணிய*: 'துப்பாயதூஉம்' என்பதில் (துப்பாயது) என்ற குற்றெழுத்து நிற்குமிடத்தும் சிறுபான்மை அசைநிலை யாக அளபெடுத்து வந்தது காண்க (பிரயோக.5).

*சுவாமிநாத*: குற்றெழுத்து அளபெடுத்து வந்தமைக்கு (இல. கொ. 90)

*'துப்பார்க்கு...மழை'*

*திருப்பாற்கடல்*: சொல்மடக்கணிக்கு மேற்கோள் (முத்து வீரி. 1132).

(கஉ)

2.3. விண்[1]ணின்று[2] பொய்ப்பின் விரிநீர்[3]
வியனு[4]லகத்
துண்ணின் றுடற்றும் பசி.

உரைப்பகுதி:

அ) மணக்.: வானமானது நிலைநிற்கப் பொய்க்குமாயின், விரிந்த நீரினை உடைய அகன்ற உலகத்திடத்தே பசியானது நின்று வருத்தா நிற்கும் எல்லா உயிர்களையும் எ-று[5]

பொய்த்தல்-தன்தொழில் மறுத்தல். இது பசியென்று பொதுப்படக் கூறியவதனான் மக்களும், விலங்கும் பொருளும் காமமும் துய்க்கலாற்றாது துன்பமுறும் என்று கூறிற்று.

ஆ) பரிதி.: எ-து. கார்காலத்தில்[6] மழைபெய்யாவிடில் கடல் சூழ்ந்த பூலோகத்தில் பசிப்பிணி வருத்தும் எ-று.

இ) பரிப். ......

ஈ) காளி.: எ-து மழையானது நெடிதாக வறங்கூர்ந்து[7] தப்புமாயின் பரவை[8] சூழ்ந்த ஞாலத்தின்[9] கண் வாழும் உயிர்களிடத்து நிலைநின்று சுடுதலைச் செய்யும் பசியாகிய தீ எ-று.

உ) பரிமேல்.: மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாயின், கடலால் சூழப்பட்ட அகன்ற உலகத்தின் கண் நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.

கடலுடைத்தாயினும் அதனாற் பயனில்லை என்பார் விரிநீர் வியனுலகத்து என்றார். உணவின்மையின் பசியான் உயிர்கள் இறக்கும் என்பதாம்.

இராமா.: உடலல்-போர்செய்தல். விண் - ஆகாயம்; அது இடத்தாகு பெயராய் மழைக்குச் சொல்லப்பட்டது. மழை இல்லாமற்போனால் கடலிருந்தும் அதனாற் பிரயோசனம் இல்லை என்று சொல்லவந்தவர் விரிநீர் வியனுலகத்து என்றார். உணவு இல்லாததினாலே பசி

1 விண்-ஆகாயம்; அது இடவாகு பெயராய் மழைக்கு ஆயிற்று.
2 இன்றி இன்று என்ற வினைஎச்சத்து இகரம் உகரமாய் வந்தது.
3 கடலினும் பெரியது ஒன்று இல்லையாதலின் கடல் விரிநீர் எனப்பட்டது.
4 வியன்-இவ்உரிச்சொல்'அகன்ற' என்னும்பொருளில் வந்தது.
5 விணநின்று எனப் பிரித்துப் பொருள் கொண்டார் மணக்குடவர்.
6 கார்காலம்-மழைக்காலம். 7 வறங்கூர்ந்து-பஞ்சம்மிக்கு
8 பரவை-கடல் 9 ஞாலம்-உலகம்.

முதிர்ந்து நோயாய் அதனாலே உயிர்கள் இறந்துபோம் என்பது இதன் கருத்து.[1]

*ஊ) கவிராசர்:* மழை வேண்டின காலத்திலே பெய்யாமல் போனால், சமுத்திரம் சூழ்ந்திருக்கப்பட்ட பெரிய பூமியிலே இருக்கிற மனிதரைப் பசி வாதித்துக்கொல்லும்.

உயர்திணையைக் கூறினமையின் அஃறிணைக்கும் இது ஒக்கும். பெய்யாது பொய்த்தலை 'அனாவிருஷ்டி'[1] என்றும் மிகுத்துப் பெய்தலை 'அதிவிருஷ்டி' என்றும் கூறுவர். அவற்றுள் அனாவிருஷ்டியை இக்குறட்பாவாலும் அதிவிருஷ்டியைக் கெடுப்பதூஉம் என்ற குறட்பாவாலும் கூறுகின்றார்.

*பழைய 1:* மழை வேண்டுங்காலத்துப் பெய்யாது பொய்க்குமாகின் கடலான் சூழப்பட்ட அகன்ற உலகத்தின்கண் நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.

*பழைய 2:* மழை வேண்டுங்காலத்து நின்று பெய்யாது பொய்க்குமாகின் கடல் சூழ்ந்த உலகத்தின்கண் நிலைபெற்று உயிர்களை வருத்தும் பசி.

*ஜி.யு.போப்:* கருக்கொண்ட மேகங்கள், உரமளிக்கும் பொழிப்புக்களாகிய சத்தியத்தைக் கொண்டு குன்றுகளின் மீது நிற்கின்றது. அவை பொய்த்தாலும் தங்கள் சத்தியத்தை முழுமைப்படுத்தாவிட்டாலும், பூவுலகம், விரிந்த கடல் நீரால் சூழப்பட்டிருந்தாலும், பஞ்சத்தின் எல்லாத் துன்பங்களுக்கும் ஓர் இரையாக வேண்டும்.

விரி-வினைத்தொகை. விரிநீர்- விரிந்தநீரையுடைய கடலுக்கு ஆயினமையால் ஆகுபெயர் என்பர் வ.உ.சி. விரி-வினைத்தொகையன்று. காலங்கரந்த பெயரெச்சமாய முதனிலை. விரிநீர் என்பது விரிந்தநீரையுடைய கடலையுணர்த்தியது. வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாமேயன்றி ஆகுபெயர் அன்மை தெளிக.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

உரையாசிரியர் அனைவரும் விண்இன்று பொய்ப்பின் எனவும் விண்நின்று பொய்ப்பின் எனவும் சிதைவு செய்வதால் கருத்து மாறுபடுகின்றனர். மணக்குடவர், திரு.வி.க. நாமக்கல் கவிஞர், எல்லிஸ்துரை, வ.உ.சி. இவர்கள் நின்றெனப் பிரித்து நிலைபெற எனப்பொருள் காண்பர். ஏனையோர்

1 அனாவிருஷ்டி-மழை யின்மை 2 அதிவிருஷ்டி-மிகுந்த மழை

இன்று எனப் பிரித்து இல்லாமற் பொய்க்குமாயின் எனப் பொருள் காண்பர்.

'விண்இன்றிப்பொய்ப்பின்' என்பதில் இன்றி என்பதும் பொய்ப்பின் என்பதும் ஒரே பொருளைத் தருதலின் பொருட் கண் சிறப்பின்மையைக் கருதிப்போலும். 'வேண்டுங்காலத்து' 'கார்காலத்தில்' என உரைகண்ட பலருடைய சிந்தனை நீண்டகாலம் மழைபெய்யாமையினும் வேண்டுங்காலத்துப் பெய்யாமையின் விதை முதலும் கெட்டு, விளைவு பெரிதுங் கெடும் எனக் கருதியவாறாம்.

'உலகத்துள்' என 'உள்' என்பதை ஏழனுருபாகக் கொண்டு உலகத்தில் எனப் பொருள்கண்டனர் பரிமேலழகர் முதலிய பல உரையாசிரியர். மு.வ. 'உலகத்து உள் நின்று' எனச் சிதைவுசெய்து 'உலகத்தின் உள்ளே நிலைத்து நின்று' எனப் பொருள் கண்டனர். உள்நாடுகளில் பசி என்பது தோன்றி, என்ற நாமக்கல் இராமலிங்கனார், கடலோரங் களில் ஓரளவு உயிர்கள் பசியாற்றிக்கொள்ள நேர்ந்தாலும் உள்நாட்டில் உயிர்கள் வாடும் என்றார். இக்கருத்து புலா லுண்ணாமையை வலியுறுக்கும் வள்ளுவர் உள்ளத்திற்கும் பொருந்துமா என்பது சிந்தித்தற்குரியது.

*'உடற்றும் பசி'*

சுடுதலைச் செய்யும் பசியாகிய தீ என உடற்றும் என்ற வினைக்கு ஏற்பப் பசியாகிய தீ என உரைகாண்பர் காளிங்கர்.

மணக்குடவர் பசி எனப் பொதுப்படக் கூறியதனால், மக்களும் விலங்கும் பொருளும் காமமும் துய்க்கலாற்றாது துன்புறும் என விளக்கமும் தருவர். இது நயமான உரை விளக்கமாகும்.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*முற்றும்:*

மன்னுயிர் மடிந்த மழை மாறமையம் —*அகநா.* 34:4.

... ... ... வானம்
துளிமாறு பொழுதில் உலகம் போலும் —*கலி.* 25:27-28.

வறந்தெற மாற்றிய வானமும் போலும் —*கலி.* 146:14.

மாரிவளம் பொய்ப்பின் ஊர்க்கின்னா —*இன்னா நாற்பது*, 21

பயல்மறந்து மீன்சனிபுக்கு ஊன்கலக்கும் காலம்
—*சம்பந்தர்*, கழுமலம். 3

ஓ) *மேற்கோள் விளக்கப் பகுதி:*

*'விண்ணின்று பொய்ப்பின்'*

*சங்கர.:* 'இன்று' என்னும் வினை எச்சக்குறிப்பு பிறவினை கொண்டதற்கு மேற்கோள் (நன். 344).

*இராமா.* 'இன்றி' என்னும் வினை எஞ்சு இகரம் செய்யுட்கண் உகரமாயும், அதன் முன்னர் வரும் வல்லினம் இயல்பாதற்கும் மேற்கோள் (நன். 173).

'இன்றி' வினைஎஞ்சுஇகரம் வினைமுதல் கொள்ளுதற்கு (நன். 344)

*'விரிநீர் வியனுலகம்'*

*சுப்பிரமணிய.:* (மத்திய பதலோபன்) இடையில் உள்ள சொல் 'உடைய' என்பது கெட்டு வந்தமைக்கு (பிரயோக. 26)

(கரு)

**2.4.** *ஏரி னுழா அருழவர் புயலெ[1]ன்னும்*
*வாரி வளங்குன் றிக் கால்.*

*உரைப்பகுதி:*

அ) *மணக்.:* 'குன்றுங்கால்' பாடம். தாமத்தர் பாடமும் இது என்பர் வ.உ.சி.

ஏரின் உழுதலைத் தவிர்வார் உழவர்; புயலாகிய வாரியினுடைய[2] வளம் குறைந்த காலத்து எ-று.

இஃது உழுவாரிலர்[3] என்றது.

ஆ) *பரிதி:* எ-து உழவரும் ஏருழார்; மேகம் மழை பெய்யா விடில் எ-று.

இ) *பரிப்.:* ......

ஈ) *காளி:* எ-து உழவரானவர்கள் ஏரினால் உழுதல் செய்யார்; மழை என்னும் புனல் வளங் குறைக்கப்பட்டால் எ-று.

உ) *பரிமேல்:* உழவர் ஏரான் உழுதலைச் செய்யார்; மழை என்னும் வருவாய் தன் பயன் குன்றின்.

குன்றியக்கால் என்பது குறைந்து நின்றது. உணவின்மைக்குக் காரணங் கூறியவாறு.

---

1 புயல்-மேகம், அது கர்த்தா ஆகுபெயராய் மழைக்கு ஆயிற்று.

2 வாரி-வருவாய். 3 உழுவாரில்லை என்னும் பாடம்

*காரி:* வாரி-வருவாய்; வாரி பெருக்கி[1] என்பதும் அது. குன்றிக்கால் என்பது இன்னொலியாதல் செய்யுள் தொடையாதல் காரணமாக யகரம் குறைந்து நின்றது.

*இராமா.:* 'புயல்-மேகம்.' அது கருத்தா வாகுபெயராய் மழைக்குச் சொல்லப்பட்டது. அந்த மழை உண்டானால் ஆதாயப் பிரயோசனங்கள் உண்டாயிருப்பதும், இல்லை யானால் இல்லாதிருப்பதும் ஆகிய ஒற்றுமை பற்றி மழை என்னும் வாரிவளம் என்று காரியத்தைக்காரணமாக உப சரித்தார். வாரி-வரப்பட்ட ஆதாயத்தின் வழி. வளம்-ஆதாயப்பயன்.

ஊ) *கவிராசர்:* மழை பெய்யாத காலத்திலே, உழுகிறவர்கள் ஏருழுகிறது முதலான காரியங்களைச் செய்யமாட்டார்கள் (எ-று).

எ) *பழைய 1:* உழவரும் ஏருழார்; மழை பெய்யாவிடின்.

ஏ) *பழைய 2:* உழவர் ஏர்கட்டி உழுந்தொழிலைச்செய்யார். மழை என்னும் புனல், பொழியும்காலத்து வழங்குதல்குன்றிய விடத்து.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

பழைய உரையாசிரியர்களைப் புயல் என்னும் வாரி என்னுந் தொடர் புயலாகிய வாரி, மேகம், மழை, மழை என்னும் புனல், மழை என்னும் வருவாய். மழை என்னும் புனல் என்றெல்லாம் உரைகொள்ள வைத்துள்ளது. பலபொருள் ஒரு சொல்லாகிய புயல்-மேகம், புனல், மழை என்ற பல பொருளைத் தருதலாலும், அங்ஙனமே வாரி என்ற சொல்லும் நீர், புனல், வருவாய் எனப் பலபொருள் தருதலானும், இரண்டற்கும் பொருள் ஒற்றுமையிருத்தலின் இங்ஙனம் கூறத் தலைப்பட்டனராதல் வேண்டும். ஆனால் இயல்பாகப் 'புயல்' என்னும் சொல் மேகத்தையே உணர்த்தும். காரணவாகுபெயராகப் புயனின்று வரும் நீரையும், மழையையும் உணர்த்தும். இத்தகைய காரணகாரிய ஒற்றுமை நயங்கருதி இங்ஙனம் உரைத்தனர் போலும்.

'மழையின் நீர்க்கொடை'—*வீரமா.*
'புயலென்கின்ற வருவாய்'—*சுகாத்.*
'மேகம் என்னும் நீர்நிலை'—*கா.சு.*

---

1 குறள் 512

'மழை என்னும் வருவாய்' —*திரு. வி.க., சொ.த., தேவநேயர், மு.வ.*

'மழை என்னும் வருவாயின் வளப்பம்'—*குழந்தை.*

'மழை என்ற இயற்கையின் புதுவருவாய்' —*கா.அ.*

இங்ஙனம் ஆசிரியர் அனைவரும் சொற்கோப்பான் வேறு படுகின்றனர். ஆயினும் *மணக்குடவரும்* புயல்-மேகம்-மேகத்தால் வரும் மழை; வாரி—நீர், வருவாய், புதுவருவாய் எனவே பொருள் காண்கின்றனர். 'மேகம்' என்னும் நீர்நிலை என்பதால் மேகத்தை நீர்நிலை என்னும் வழக்குப் புதிது. இவற்றுள் மழை என்னும்வருவாய் என்ற பொருளே சிறந்தது.

'வாரிவளம்' என்பதனை ஆறாம்வேற்றுமைத் தொகை யாகக்கொண்டு வாரியினுடைய வளம் என்றும், அப்பொருள் படவும்உரைதந்தவர்கள் *மணக்குடவர், பரிமேலழகர், வீரமா முனிவர், கா. சுப்பிரமணியபிள்ளை, குழந்தை, அப்பாத் துரையார்* முதலியோர். ஏனையோர் மழையானது வளங்குன் றின்என எழுவாயாகக் கொண்டுரைப்பர்.

இக்குறளாற் போந்த கருத்தாகப் *பரிமேலழகர்* உணவின் மைக்குக் காரணம் கூறியவாறு என்பர். 'விளைவின்றேல் பசிவருத்தும்,' என்பர்குழந்தை. 'உழவில்லையானால் உணவு கிடைக்காது' என்பர் *சி. இலக்குவனார்.*

மழையில்லையானால் உழவுத் தொழிலே நடவாதாயின் உழுபயனாகிய விளைவு எங்கே? என எண்ணவைத்தவாறு.

## ஒ) *ஒப்புமைப்பகுதி:*

*'மழையால் உழவர் ஏர் உழுதல்'*

வானமும் வேண்டா வில்லேருழவர் — *அகநா.* 192:2:

இருங்கண் ஞாலத்து ஈண்டுதொழில் உதவிப்
பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையம்
— *நற்றிணை,* 157:1-2.

மழைதொழில் உதவ — *மதுரைக்.* 10.

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*'குன்றிக்கால்'*

*இளம்:* 'குன்றியக்கால்' என்னும் வினைஎச்சம் 'குன்றிக் கால்'என நின்றது (தொல். சொல். 450).

*கல்:* 'வாரி வளங்குன் றிக்கால்' என்பது குன்றின் என எதிர் காலக் குறிப்பாயிற்று (தொல். சொல். 231).

'ஏரின் உழாஅர்'

*சுப்பிரமணிய:* அகநிலைச் செயப்படுபொருளுக்கு மேற்கோள். (பிரயோக. 12)

(கச)

2.5. *கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே*
*யெடுப்பதூஉ மெல்லா மழை.*

*உரைப்பகுதி:*

அ) *மணக்.:* 'கெடுப்பதும்' 'எடுப்பதும்' பாடம். பெய்யாது நின்று எல்லாப் பொருளையும் கெடுப்பதும்,[1] அங்ஙனம் கெட்டார்க்குத் துணையாய்த் தான்பெய்து பொருள்கள் எல்லாவற்றையும் அவ்விடத்தே உண்டாக்குவதும் மழை எ-று.

இஃது இரண்டினையும் செய்யவற்று[2] என்றவாறு.

ஆ) *பரிதி:* எ-து வாழ்வாரைக் கெடுப்பதுவும், கெட்டாரை வாழ்விப்பதுவும் மழை எ-று.

இ) *பரிப்:* .........

ஈ) *காளி:* எ-து தான் பருவத்து வழங்காது யாவரையும் கெடுப்பதுவும், அங்ஙனம் கெட்டார்க்குப் பின்னும் செல்சார்வாகிய[3] உறுதுணையாய் வந்து அப்பொழுதே உற்றார்க்கு நட்டார்போல[4] எடுத்துக்கொண்டு பாதுகாப்பதுவும் எல்லாம் மழை எ-று.

உ) *பரிமேல்:* பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பதூஉம், அவ்வாறு கெட்டார்க்குத் துணையாய்ப் பெய்து முன்கெடுத்தாற்போல எடுப்பதூஉம் இவைஎல்லாம் வல்லது மழை.

1 'அவை கெடப்பட்டார்க்கு' எனவும் பாடம்.
2 செய்யவற்று - செய்யும் வன்மையை உடையது.
3 செல்சார்வு - நடைமுறை பற்றுக்கோடு.
4 உற்றார்க்கு நாட்டார்போல-வருந்தியபேருக்கு நட்புத் கொண்டவர்போல.

மற்று[1] வினைமாற்றின்கண் வந்தது. ஆங்கு[2] என்பது மறு தலைத் தொழில் உவமத்தின்கண் வந்த உவமச்சொல்,[3] கேடும் ஆக்கமும் எய்துதற்குரியார் மக்கள் ஆதலின் கெட்டார்க்கு என்றார். எல்லாம் என்றது அம்மக்கள் முயற்சி வேறுபாடுகளான் கெடுத்தல் எடுத்தல்கள் தாம் பலவாதல் நோக்கி. வல்லது என்பது அவாய்நிலையான்[4] வந்தது. மழையினது ஆற்றல் கூறியவாறு.

*காரி:* மற்று வினைமாற்று. 'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது'[5] 'மருந்தோமற்று ஊன் ஓம்பும் வாழ்க்கை'[6] என்னும் இரண்டுபாட்டினும், மற்று என்பதனை வினைமாற்றாகக்கோடல் அரிதாகலின் ஆண்டு விரித்தார். ஆங்கு மறுதலைத் தொழில் உவமச்சொல், எல்லாம் என்றார் கெடுத்தல் எடுத்தல்பலவாதல் நோக்கி. 'இயற்றலும் ஈட்டலும் காத்தலும்'[7] என்பது போலப் பொருள்பெற்று, 'வல்லது' என்னும் சொற்பெறாமையின் 'வல்லது' என்பது அவாய்நிலையான் வந்தது என்றார். வருவித்து என்னும் ஏவுதல் கருத்தாவின்தொழிலை இயற்றுதல் கருத்தாவின் தொழிலாகச் சுருக்கி எழுதினார். முன்னர் அவாய்நிலையான் வருவித்தது என எழுதுவது காண்க. அவாவிநிற்பது செய்யுட்கண் நின்ற 'எல்லாம்' என்னும் சொல். அவாவப்படுவது இவ்வுரையாசிரியர் 'வல்லது' என வருவித்து எழுதியது. அஃது உடைத்தம் வலியறியார்'[8] 'நகை வகையராகிய காரணம்'[9] என்பவற்றுள் விரிக்கப்படுதல் காண்க. அவாய்நிலை தகுதி அண்மைநிலை என்னும் மூன்றினாலும் ஒரு சொல்லோடு ஒருசொல் புணர்ந்து நிற்கும். இனி, தொகைநிலை, வினைநிலை, எண்ணுநிலையானும் புணரும் என்பர். யானைக்கோடு என்பது இவை மூன்றும் தோன்றப் புணர்ந்தது. முயற்கோடு, ஆமைமயிர்க்

---

1 பெய்யாது நின்று கெடுப்பது என்னும் வினையைப் பெய்து கெடுக்காது என மாற்றியதனால் மற்று வினைமாற்றின்கண் வந்தது. மற்று என்னும் இடைச்சொல் முன்சொல்லுகின்றது ஒழிய இனி வேறொன்று என்னும் பொருளைக் குறிக்குமிடத்து வினைமாற்று எனப்படுகிறது.

2 ஆங்கு என்பது உவமஉருபு; போல என்னும் பொருளது. அது பிற்கூறப்படும் எடுப்பது என்னும் தொழிலைக் குறிப்பித்தல் பற்றி மறுதலை உவமம் எனப்பட்டது.

3 தொழில் உவமத்தின்கண் வந்தது எனவும் பாடம்.

4 அவாய்நிலை-வேண்டிநிற்றல். இக்குறள் காரிரத்னகவிராயர் (நுண்பொருள்மாலை) உரைவிளக்கத்தில் காண்க. 5 குறள் 362.

6 குறள் 968. 7 குறள் 385. 8 குறள் 473. 9 குறள் 817.

கம்பலம், துன்னூசிக்குடர் என்பன அவாய்நிலைதகுதி களை ஒழித்துப் புணர்ந்தன. வல்லம்எறிந்த நல்லிளங் கோசர் தந்தை மல்லல்யானைப் பெருவழுதி இஃது அண்மைநிலை ஒழித்துச் சேய்மைநிலையாய்ப் புணர்ந் தது. பொருள்கோள் வகையும் மாட்டுறுப்பும் அது. இனி வனைந்தான்என்பது கருவியையும், செயப்படுபொருளை யும், கருத்தாவையும், இன்னதற்கு இது பயனாக என்ப தனையும் அவாய் நின்றது என்றார் 'அதுச்சொல் வேற் றுமை'[1] என்னும் சூத்திரத்துள் நச்சினார்க்கினியர் முத லாயினார்என்க. ஆதலான் இவ்வுரையாசிரியர் தோன்றா எழுவாயும் வினைமுற்றும், வினைஎச்சமும், கருவியும், செயப்படுபொருளும் முதலாகிய பலசொற்களையும் வரு விக்கும் இடத்தும் அவாய்நிலையான் வந்தது என்பர். இது சொல்எச்சம், 'இது தோன்றா எழுவாய்' என்பன வும் அவாய்நிலைக்குப் பரியாயம் என்க. இனி, கெட் டார்க்குச் சார்வாய் என நான்கனுருபினும் (சார்ச்சி) வந்தது, புறனடையாக இலேசானாக அமைக்க. 'இறை வனைச் சாரார் செவியோரார்'[2] என ஆசாரக்கோவை யில் சார்பு மெய்யுறாக்கண்ணும் வந்தது. 'கருமமில்லாச் சார்பென்கிளவிக்கு'[3] எல்லா உரைகாரரும் அல்லாச் சார்பு எனப் பாடமோதி அதற்கு உரை கருமமில் சார்பும் கருமச்சார்பும் எனச் சார்பு இரண்டு என்றும், கருமமில் சார்பாவது மெய்யுறாச்சார்பு என்றும், அதற்கு உதா ரணம் அரசர்கட் சார்ந்தான் என்றும், மெய்யுறுசார்பைக் கருமச்சார்பு என்றும், அதற்கு உதாரணம் தூணைச் சார்ந்தான் என்றும் நியமித்தார். சார்பு இரண்டன் முடி பாயினும் ஏழொடும் மயங்கும் என்பார் 'உரிமையும் உடைத்தே கண்ணென் வேற்றுமை' என்றார். கருமம் என்பது வடமொழியில் இரண்டாம் வேற்றுமைக்கு ஒரு பெயர்.

*இராமா:* கெடுப்பது என்ற வினையைக் கெடுக்காமல் என்று மாற்றி நின்றதினாலே, மற்று என்ற இடைச் சொல் வினைமாற்றுப் பொருளில் வந்தது. அவாய்நிலை என்பதற்குப் பொருள் வேண்டிநிற்பது.

ஊ) *கவிராசர்:* பூமியிலே வாழ்கின்றவரைத் தான் அதிக மாகப் பெய்து[4] கெடுத்தற்கும் கெட்டபேரைத் திரும்பப்

---

1 தொல். சொல். 213. 2 ஆசாரக் கோவை 70 3 தொல். சொல். 84.
4 அதிகமாகப் பெய்து கெடுத்தலை அதிவிருஷ்டி என்பர்.

பிழைக்கத்தக்கவராகத் தான் அளவாகப் பெய்து இரட்சித்தற்கும் வல்லது மழை.

பூமியிலே வாழ்கின்றவரைத் தான் பெய்யாமல்[1] கெடுத்தற்கும், அவ்வாறு கெட்டபேரைத் தான்பெய்து உய்யச் செய்வதற்கும் வல்லது மழை என்பது கர்ணபரம்பரையான பழைய உரை. மழை பெய்யாதபோது மழை கெடுக்கின்றது என்று கூறுவது பொருந்தாதன்றோ. 'விண்ணின்று பொய்ப்பின்' என்பதால் பெய்யாது கெடுத்ததாகக் கூறினர். இந்தப்பாட்டில் மிகுத்துப் பெய்தலின் கெடுதியைக் கூறுகின்றார் எனலாம்.

*எ) பழைய 1:* வாழ்வாரைப் பெய்யாது கெடுப்பதும் கெட்டாரைப் பெய்து வாழவைப்பதும் மழை.

*ஏ) பழைய 2:* பூமியில் வாழும் உயிர்களை மழை பெய்யாமற் கெடுப்பதுவும், அவ்வாறுகெட்டார்க்குத் துணையாய் மழை பெய்து முன் கெடுத்தது போல எடுப்பதுவும், இவையெல்லாம் வல்லது மழை.

ஆங்கென்பது அப்படியெனக் கொள்க.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*கவிராஜபண்டிதர்* அதிகமாகப் பெய்து கெடுப்பதும் அளவாகப்பெய்து இரட்சிப்பதும் என இரண்டும் வல்லது மழை எனக்கூறி ஏனைய உரையாசிரியரோடு மாறுபடுகின்றார். அன்றியும் பெய்யாமல் கெடுப்பதும் பெய்து வாழவைப்பதும் மழை என்பாரை மறுக்கவும் செய்கின்றார். மழை பெய்யாத போது கெடுக்கும் தொழில் எங்ஙனம் மழையினது ஆகும்? என்பது அவர் எழுப்பும் தடை. அடுத்து விண் இன்று பொய்ப்பின் என்பதனால் மழை இன்மையால் வரும் கெடுதலை முன்பே கூறிய ஆசிரியர் மீட்டும் கூறார் என்பது. இவ்வுரை மிகச்சிறந்ததாகும். *சுகாத்தியர்* எல்லாம் எனது எனது என்றிருக்கும் மனிதன் செருக்கினை மழை பெய்யாமல் நின்று அடக்கி உணர்த்துகிறது என்ற கருத்தினை இவர் எழுத்து காட்டுகிறது. ஈண்டு இந்த மெய்ப்பொருட் கருத்துத் தேவையா? தேவையாயின் கொள்க. *கா.சு.* இந்த இரு வேறு வகைப்பட்ட கருத்துக்களையும் ஒன்றாக்கி உரைக்கின்றார். அத்துடன் எடுப்பதூஉம் என்பதற்கு வறுமையினின்று

1 அனாவிருஷ்டி என்பர் வடநூலார். மழை பெய்யாதபோது கெடுத்தல் என்பது மழையின் தொழில் அன்று ஆதலாலும் விண் இன்று பொய்ப்பின் என்பதால் கூறிப் போந்தமையாலும இக்குறள் கூறுவது மிகுபெயல் பற்றியே என்பதைக் கருத வைக்கின்றார்.

மேல் எடுப்பதூஉம் என்கின்றார். ஆழ்ந்து சிந்திக்கின் இதுவும் தொல்லோர் கருத்தைத் தொடர்வதேயாகும். *தண்டபாணியார்* உரையில் கெடுவன தானம் முதலியன எனக் குறிப்பிடுகிறார். மற்று என்னும் இடைச்சொல் கெடுத்ததற்கு மாறான செயலை விளக்குவது என விளக்கமும் தருவர். *திரு.வி.க.* இதன்கண் எல்லாம் என்பதனை ஈரிடத்தும் கூட்டுதல் நல்லதொரு விளக்கமாகும். *குழந்தை* கூறும் வறுமைக் குழியில் இருந்து எடுத்தல் என்பது கா.சு. பிள்ளை கூறிய கருத்தை ஒட்டி எழுந்ததாகும்.

இத்தனைக்கருத்து வளர்ச்சியிலும், சொல்லும் முறையிலும் ஆக்குவதும் அழிப்பதும் வல்லது மழை என்ற கருத்தே வருதல்காண்க.

'பாலையில் அயல்நாடுகளிலும் பெய்து கெடுப்பது' என்ற உரை ஆங்காங்கே அது நன்மையாதலின் அது கெடுப்பதாகாது ஆதலால் அது கொள்ளத்தக்கதாகாது.

இங்ஙனமே 'எடுப்பதும்' என்பதற்கும் சிறிது வேறுபடுகின்றனர். ஆயினும் ஆக்கவும் அழிக்கவும் வல்லது மழை என்ற முடிந்த கருத்தில் மாறுபாடில்லை.

*'கெடுப்பதூஉம்'* பெய்யாமல் எல்லாப்பொருள்களையும் கெடுப்பது' *மணக்.*

'வாழ்வாரைக் கெடுப்பது' -*பரிதி.*

'பருவத்தில் பெய்யாது கெடுப்பது' -*காளி.*

'பூமியின்கண் வாழ்வாரைப் பெய்யாது நின்று கெடுப்பது' -*பரிமேல், பழைய2.*

'அதிகமாகப் பெய்து கெடுப்பது'-*கவிராசர்.*

'எனதென்னும் மாயையைக் கெடுப்பது'-*சுகாத்.*

'துயரத்துக்கு உள்ளாக்குவதும்'-*வீரமா.*

'பெய்யாமலாவது, அதிகமாகப் பெய்தாவது கெடுப்பதும்'—*கா.சு.*

'தான்பெய்யாது நின்று தானம் தவம் ஒழுக்கம் உணவு முதலியவற்றையும் கெடுப்பதும்'- *சொ.த.*

'எல்லாவற்றையும் அழிப்பதும்'-*திரு.வி.க.*

'பெய்யாதிருந்து உலகமக்களுக்குக் கெடுதி செய்வது' -*இராம.*

'பெய்யாமல் வாழ்வைக் கெடுப்பதும்'-*மு.வ.*

'தான் முறையாகப் பெய்யாததன் மூலம் வாழ்வு கெடும்படிச் செய்வது'-*கா.அ.*

'பெய்யாது நின்று, பண்பாட்டிலும் தொழிலிலும் மக்களைக் கெடுப்பது' —*தேவநேயர்.*

'பாலையிலும் உதவாத அயல்நாடுகளிலும் பெய்து கெடுப்பது'-*மு.கோ.*

பெய்துகெடுப்பதும்-பெய்யாது கெடுப்பதும் என்பதாலும் கெடுப்பதன் செயப்படுபொருளாக வாழ்வாரை எனவும், எல்லாப் பொருளையும் எனவும் 'எனதென்னும் மாயையை' எனவும், தானந் தவ முதலிய அனைத்தையும் எனவும் கூறுவதாலும் உரையாசிரியர்கள் மாறுபடுகின்றனர். இவருள், 'பாலையிலும் அயல்நாடுகளிலும் பெய்வது' கெடுப்பதாகாது; ஆங்காங்கு அது நன்மையே யாதலின் அவ்வுரை ஏற்புடைத்தாகாது; இங்ஙனமே 'எடுப்பதும்' என்பதிலும் சிறிது வேறுபடுகின்றனர். ஆயினும் ஆக்கவும் அழிக்கவும் வல்லது மழை என்ற முடிபில் மாறுபாடிலர்.

'வல்ல மழை" தாமத்தர்பாடம் என்பர் *வ.உ.சி.*

## ஔ) *ஒப்புமைப்பகுதி:*

பெயல்நந்தி வறப்பிற்சாம் புலத்திற்குப் பெயல்போல—*கலி.*73: 19

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*'கெடுப்பதூ உம்.........மழை'*

*நச்சர்:* அமரர்கண் முடியும் அறுவகை வாழ்த்துள் மழை வாழ்த்திற்கு எடுத்துக்காட்டு (*தொல்.பொருள்.* 81)

*காரி:* எதிர் நிரல்நிறை அணிக்கு மேற்கோள் (*நுண்பொருள்மாலை,* குறள் 410)

*'கெடுப்பதூஉம்'*

*சங்கர:* இசைகெடின் எனப் பொதுப்படக் கூறினமையால் குறில் நெடிலாய் அளபெழுந்து அலகுபெற்றும் பெறாதும் இன்னிசை நிறைப்ப வருதற்கு (*நன்.*91)

*இராமா:* மேற்படி (*நன்.*91)

*திருப்பாற்கடல்:* குற்றுகரம் அளபெடுத்த இன்னிசை அளபெடை (*முத்துவீரி.*32)

*வீரமா:* குற்றெழுத்து நெட்டெழுத்தாகி அளபெடுத்து வந்தமைக்கு (*தொன். விள.* 18)

(கரு)

2.6. விசும்பிற் றுளிவீழி னல்லான் மற்றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

*உரைப்பகுதி:*

அ) *மணக்.:* வானின்று துளிவீழினல்லது அவ்விடத்துப் பசுத்த[1] புல்லினது தோற்றமும் காண்டல் அரிது.

ஆங்கு என்பதனை அசையாக்கினும் அமையும். இஃது ஓரறிவுயிரும் கெடும் என்றது.

ஆ) *பரிதி.:* எ-து மழைத்துளி வருஷியாதபோது[2] பசும்புல் லின் தலையும் காண்பது அரிதாகலாம் எ-று.

இ) *பரிப்.:* ... ... ...

ஈ) *காளி.:* எ-து விசும்பினின்று மழைவந்து வீழின் அல்லது வேறு இவ்விடத்துப் பச்சென்றிருப்பதொரு புல்நுனியுங்கூடக் காண்பது அரிது எ-று.

உ) *பரிமேல்:* மேகத்தின் துளி வீழின் காண்பது அல்லது வீழாதாயின் அப்பொழுதே பசும்புல்லினது தலையையும் காண்டல் அரிது.

விசும்பு ஆகுபெயர். மற்று வினைமாற்றின்கண் வந்தது. இழிவு சிறப்பும்மை விகாரத்தான் தொக்கது.[3] ஓரறிவு உயிரும் இல்லை என்பதாம்,

*காரி:* புற்றலையும் என்றெழுதிச் சிறப்பும்மை விகாரத் தான் தொக்கது என்றார். விகாரத்தான் தொக்கது என் பது 'இருபெயர் பலபெயர் அளவின் பெயரே, எண்ணி யற்பெயரே நிறைபெயர்க்கிளவி, எண்ணின் பெயரோடு அவ்வறுகிளவியும், கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே'[4] இவ்ஆறுமன்றி வரும் உம்மைகள் தொக்கு நிற்பதனை என்க. காண்பரிது என்பது 'சால்புபடும்' என்பது போலச் செய்புவினைஎச்சந்திரிந்தது. அன்றியும் 'நுண்பொருள் காண்பதறிவு'[5] என்பதுபோல நில்லாமை யின் காண்பரிது என்பது விகாரம்; 'அள்ளிக்கொள் வற் றும்'[6] அது. ஆங்கு-அப்பொழுது.

---

1 பசுத்த-பசுமை என்ற பண்புஅடியாகப் பிறந்த பெயரெச்சம்.

2 வருஷியாதபோது-பெய்யாதபோது

3 பசும்புல்தலையும் என்பதில் உள்ள இழிவு சிறப்பும்மை செய்யுள் ஆதலின் விகாரத்தால் தொக்கது.

4 தொல்.சொல்.417 5 குறள் 424 6 குறள் 1187.

*இராமா:* விசும்பு-ஆகுபெயர். அது இடத்து ஆகுபெயராய் அந்த இடத்திலே சஞ்சரிக்கின்ற மேகத்திற்குச் சொல்லப்பட்டது. தலை என்ற இடத்தில் தலையும் என்ற இழிவு சிறப்பும்மை குறைந்து நின்றது. அது செய்யுள் விகாரம்.

ஊ) *கவிராசர்:* ஆகாயத்திலே இருந்து மழைதூறல் விழுந்தால் அல்லாமல் பூமியிலே பச்சைப்புல்லைக் காண்கிறதும் அருமை.

எ) *பழைய 1:* ஆகாசத்தினின்று மழைத்துளி வீழின் அல்லது பூலோகமவற்றிற்கும் பச்சைப்புல்லின் தலையும் காண்பரிது.

ஏ) *பழைய 2:* மேகத்தின் துளிவீழின் காண்பதல்லது. துளி வீழாதாயின், பசும்புல்லினது நுனியும் காண்பது அரிது.

மற்று ஆங்கு என்பன வினைமாற்று. பசும்புல் என்பது, பனையினது கன்றும் காண்பதரிது என்றுமாம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

பசும்புல் என்பதற்குப் பனையின்கன்று என்று உரை காண்பர் *பழையஉரையாசிரியர் 2*. காண்பு என்பதனைக் காண்பது என வினையாலணையும் பெயராகவும் காண்டல் எனத் தொழிற்பெயராகவும் கொண்டனர் *பழையஉரையாசிரியர் 1*.

'விசும்பு' எளிதில் விளங்கும் என்றெண்ணி, விசும்பு என்றே எழுதியவர் *காளிங்கர்*. விசும்பு இடவாகுபெயராய் மேகத்தையுணர்த்தியதாகக் கொண்டவர் *பரிமேலழகர், பழையஉரை 2, திரு. வி. க., சொ:த., வீரமா முனிவர், குழந்தை*.

மழையை உணர்த்தியதாகக் கொண்டவர் *பரிதி*.

வான்-ஆகாயம் எனக்கொண்டார்கள் *மணக்குடவரும் கவிராசபண்டிதரும், சுகாத்தியரும், கா. சுப்பிரமணியபிள்ளையும், தேவநேயப்பாவாணரும், அப்பாத்துரையாரும்*.

இயற்பெயராகக்கொண்டு காணும் உரையினும், ஆகுபெயராகக் கொண்டு மேகம் அல்லது மழை எனக் காணும் பொருள் சிறப்புடையது.

*'மற்று, ஆங்கே'*.

'மற்று எங்கும்' தருமர் பாடம். *'தளிர் காண்பரிது'* தாமத்தர் பாடம் என்பர் *வ.உ.சி.*

ஆங்கு என்பதனை அசையாகக் கொள்பவர்கள் *மணக்., பரிதி.*

'அப்பொழுதே' எனக்காலப்பொருளாகக் கருதியவர், *பரிமேல்.*

'அவ்விடத்து' 'இவ்விடத்து' எனக்கண்டவர் *மணக், காளி, பரிதி* கருத்துப்பொருள் தருபவராதலின் மற்றுஆங்கு இரண்டையும் விட்டுவிட்டனர்.

ஆங்கு-அப்படி. 'மற்று'அசை—*பழைய 2.*

'பூமியிலே' என்று உரைசெய்கின்ற *கவிராசர்* கருத்து 'ஆங்கு' இடப்பொருளுணர்த்தும் கட்டாகக் கருதியிருப்பர் என எண்ணச் செய்கிறது.

இரண்டையும் அசையாக விடுவர் *கா.சு.*

மற்று- '*மழைத்துளி வீழாதாயின்*' என வினைமாற்றின் கண் வந்ததாகக் கருதுவர் விசும்பின் தூளிவீழின் (காண்பதல் லது) மற்று-வீழாதாயின் ஆங்கே அப்போது பசும்புல்களின் தலையையும் காண்பரிது எனக் கொண்டுகூட்டியும் வருவித் தும் பொருள் காண்பர் *திரு.வி.க.*

மற்று-அசை என்பர் *தண்டபாணியார்.*

மற்று ஆங்கு இரண்டற்கும் பொருள் கூறாது விட்டனர் *வீரமா.* 'மற்று விளைவுகுறித்த பன்மைப் பொருள் இடைச் சொல். 'ஆங்கே தேற்றமும் விரைவும் பற்றிக் காலவழு வமைதி'

'மற்றாங்கே' என்பதனை மற்ற ஆங்கே எனப்பிரித்து. மற்ற—வேறு எவ்வகையினும் எனப் பொருள்தந்து, மற்ற என்பதிலுள்ள இரட்டித்த றகரத்தின் ஊமைக்கட்டொலி, துளி விழாமையின் விளையும் ஏக்கம் உயிர்ப்பண்பொழிவு இவற் றைத்தொனிப்பித்தது என்பர் *அப்பாத்துரையார்.* இவ்விரு இடைச்சொற்களுக்கும் பொருள் கூறும் வகையில் இத் தனை கருத்துமாற்றங்கள் இருப்பினும் 'மற்று' என்ற இடைச்சொல் 'விழின்' என்ற வினையை மாற்றி வீழாதாயின் என்ற பொருளைத்தந்ததாகவும், ஆங்கு என்பது அப்பொழுதே என விரைவுப் பொருட்கண் வந்ததாகவும் வரும் உரைகள் வானின் இன்றியமையாமையை வலியுறுத்தலின் சிறப்புடை யன.

'பசும்புல்தலை' பசிய புல்லின் நுனி என்பர் ஆசிரியர் அனைவரும். பனையின் குருத்தையும் என்பர் *பழையஉரை யாசிரியர் 2.* புறக்காழன அனைத்தும் புல் எனப்படுமாத

லாலும், பனை 'எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே' என நீர் ஊற்ற வேண்டாமலே வளரும் தன்மைத் தாதலானும், மழையில்லையாயின் பனையும் குருத்துவிடாது என்று கருதி இவர் பனையின் பசிய குருத்தையும் என்ற உரைமிக்க நலமுடையது.

"காண்பரிது" காண்பு அரிது எனத் தொழிற்பெயராகக் கொண்டு காண்டலரிது எனப்பலரும், காண்பது என்ற வினை யாலணையும் பெயரின் விகாரமாகக்கொண்டு காண்பதரிது எனச் சிலரும் கருதுவர். இலக்கணமாற்றமே; கருத்துமாற்ற மில்லை.

ஓ) *ஒப்புமைப் பகுதி:*

பயிர்காட்டும் புயல்—*சம்பந்தர்*, திருவெண்காடு 1.

பைங்கூழ்க்கு வானே என்ன நிரைகாக்க வந்த மறைச்சிறுவர்

—*பெரிய*. சண்டேசு. 24.

ஓ) *மேற்கோள் விளக்கப் பகுதி:*

*'விசும்பின்.........காண்பரிது'*

*நச்சர்:* மழையை வாழ்த்தியதற்கு (தொல். செய்.109)

*'புல்தலை காண்பரிது'*

*சுவாமிநாத.:* 'புற்றலை காண்பரிது' என்பதில் முதல்நிலை வினை ஆகாது பெயரானது (இல. கொ. 86)

*இராமா:* காண்பது எனற்பாலது காண்பு எனக் கடைக் குறைந்துவந்தமைக்கு (நன். 156)

(கசு)

2.7. *நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி*
*தானல்கா தாகி விடின்.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* நிலமே யன்றி நெடிய கடலும் தனது தன்மை குறையும்; மின்னி மழையானது பெய்யாவிடின் எ-று.

தடிந்து என்பதற்குக் கூறுபடுத்து என்று பொருள் உரைப் பாரும் உளர். இது நீருள் வாழ்வனவும் படுவனவும்[1] கெடும் என்றது. இவை நான்கினாலும் பொருட்கேடு கூறினார். பொருள் கெட இன்பம் கெடும் என்பதனால், இன்பக்கேடு கூறிற்றிலர்.

1 படுவன-தோன்றுவன

ஆ) *பரிதி*: எ-து பெருமையான கடலில் சங்கு முத்து பவளம் பிறவாது, மழை பெய்யாவிடில் எ-று.

இ) *பரிப்*.: ... ... ...

ஈ) *காளி*.: எ-து பெரிதாகிய கடலும் தன்றன்மை குறைபடும், பருவங்களில் வந்து பூரித்து[1] மழை வழங்காதாயின் எ-று.

உ) *பரிமேல்*.: அளவில்லாத கடலும் தன்னியல்பு குறையும்; மேகந்தான் அதனைக் குறைத்து அதன்கட் பெய்யாது விடுமாயின்.

உம்மை சிறப்பும்மை, தன்னியல்பு குறைதலாவது நீர் வாழுயிர்கள் பிறவாமையும் மணி முதலாயின படாமையுமாம். ஈண்டுக் குறைத்தல் என்பது முகத்தலை. அது 'கடல் குறை படுத்தநீர் கல்குறை பட எறிந்து'[2] என்பதனாலும் அறிக. மழைக்கு முதலாய கடற்கும் மழை வேண்டும் என்பதாம். இவை ஏழுபாட்டானும் உலகம் நடத்தற்கு ஏதுவாதல் கூறப் பட்டது.

> *காரி*.: தடிந்து என்பது குறைத்தலின் பரியாயமாய் முகத்தல் பொருட்கு ஆயிற்று. அதற்குச் சொற்சோதனை காட்டி 'கடல் குறைபடுத்த நீர் கல்குறைபட எறிந்து' என்னும் பரிபாட்டும் அது. கல்-இமையம். தடிந்து... விடின் என்றது காரணமாகிய கடற்கும் காரியமாகிய மேகம் இன்றியமையாச் சிறப்பு என்பார் இவ்வாறு உரை யிட்டார்.
>
> *இராமா*: குன்றும் - குறையப்படும். கடலும் என்ற உம்மை உயர்வு சிறப்பும்மை

ஊ) *கவிராசர்*.: அளவில்லாமல் இருக்கிற சமுத்திரமும் மழை பெய்யாத காலத்திலே குறைந்துபோம்; மழை பெய் தால் நிறைந்து இருக்கும் (எ-று).

எ) *பழைய I*: ஆழமும் அகலமும் அளவிடற்கரிய சமுத்திரமும் பெருமை குறையும்; அதெப்படி என்னில்? சமுத்திரத்திற்குப் பெருமை முத்தும் பவழமும் படுவது. வையாசியில் நாயத்துச் சோதியில்[3] மழையிலே முத்துக்கரு; ஐப்பசிமாசத்து பூர்வபக்கத்து மழையிலே பவழத்துக்குக்கரு; ஆதலால் பூமியிலே மழையில்லாவிடத்துச் சமுத்திரமும் பெருமைகுறையும்.

---

1 பூரித்து-நிரப்பி 2 பரிபாடல் 20: 1

3 நாயத்துச்சோதி-ஞாயிற்றுக்கிழமை சுவாதிநாள்.

*ஏ) பழைய 2:* நெடிய அளவில்லாத கடலும் தன்குணம் குறையும். அக்கடலை உண்டு குறைத்து அக்கடலில் பெய் யாது விடுமாயின்.

நீர்மை-குணம். தடிந்து-மின்னி என்றுமாம்.

## *ஐ) தொகுப்பும் குறிப்பும்:*

*பழைய உரையாசிரியர்*, கடலில் முத்தும் பவழமும் மழையால் தோன்றுவதைத் தெரிவிக்கின்றார். தடிந்து-மின்னி, குறைத்து என உரையாசிரியர்கள் பொருள் காண் கின்றார்கள். 'தடி' என்பது மின்னலுக்குரிய இயற்பெய ராயின், அதனடியாகத் தடிந்து என்ற வினையெச்சம் பிறக்க லாம். 'தடித்து' என்ற ஆரியச் சிதைவு ஆயின், தடிந்து என வருவது இயைபிலது. இதைக்கருதியே சில உரையாசிரியர் கள் குறைத்து எனப்பொருள் கொண்டனர். தடிதல்-குறைத் தல். *கவிராச பண்டிதரும்* தடிந்து என்பதற்குக் குறைத்து எனவே பொருள் காண்பர், 'இவருள் இருவர் மாறுகோள் ஒருதலை துணிவாகக் குறைத்து என்ற பொருளே 'கடல் குறைபடுத்தநீர்' என்ற 'கலியாலும்' சிறத்தலின் அதுவே சிறந்ததாகக்கொள்ளப்படும்.

'நீர்மைகுன்றும்-நீர் அளவில் குறைந்து போகும் என்பர்' *இராமலிங்கனார்*. இப்பொருள் எங்ஙனம் கிடைக்கும் என்பது அறியக்கூடவில்லை.

நல்லநீர் பருகாதுபோனால் உடம்பில் பலவகையான உப்புச்சத்து பெருகி உடல் வளர்ச்சியைக் கெடுப்பதுபோலக் கடலிலும் நன்னீர் மழையாலோ—பனியுருகியோ வந்து கலவா தாயின் உயிர்கள் வாழமாட்டா ஆதலின் இங்ஙனம் கூறினார் என்பர். *கொழும்பு பொன்னம்பலம் இராமநாதன்*. தடித்து-நுண்பொருள் பருப்பொருளாதல் எனவும் கூறுவர். கடனீர் சுருங்குதற்கும் உப்பு மிகுதற்கும் காரணம் வெயில் வெப் பத்தால் நீரை ஆவியாக மாற்றுதல். ஆவி மழையாகிச் சுருக் கிய நீரைப் பெருக்கி மீளவும் உப்பைக் குறைத்து நுண்பொரு ளாக்குகிறது. ஆதலால் இக்கருத்து எத்துணை ஏற்புடைய தாகலாம் என்பது ஆய்வுக்குரியது.

'நல்காது' என்பதனை எதிர்மறை வினைஎச்சமாகக் கொண்டு 'பெய்யாது' என்று உரைஎழுதுவர் *பரிமேலழகர்* முத லியோர். *வ.உ.சி.* 'நல்காதது' என வினையாலணையும் பெயராகக் கொண்டு தகரம் செய்யுள் விகாரத்தால் கெட்டது

என்பர். நல்காது—வழங்காதது ஆகிவிடின் என்பது அவர் உரை.

## ஓ) ஒப்புமைப்பகுதி:

*மழையால் கடல் வளமுறுதல்:*

வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்பப்
பாட்டம் பொய்யாது—*நற்றிணை*, 38: 1-2

*மேகம் கடலைத் தடிந்து நல்குதல்:*

நீண்டொலி அழுவங் குறைபட முகந்துகொண்டு
ஈண்டுசெயற் கொண்மூ வேண்டுவயின் குழீஇப்
பெருமலை அன்ன தோன்றல் சூல்முதிர்பு
உருமுரறு குருவியொடு பெயல் கடன்இறுத்து—*புறநா*. 161: 1-4

நிறையிரும் பௌவம் குறைபட முகந்துகொண்டு
... ... ... ... ... ... ... ... ...
கொண்மூ......பொழிந்தென—*குறிஞ்சிப்*. 47-53

கடல்குறைபடுத்தநீர் கல்குறைபட எறிந்து— *பரிபாடல்*, 20:3.

கலங்கு தெண்டிரை மேய்ந்த கணமழை—*சீவக*. 32.

வானிரைத்து மணந்து சொரிந்தவே—*சீவக*. 33.

தெள்ளறல் ஆறுபாய்ந்த திரைதவழ்கடல்—*சீவக*. 1387

நாட்களி னளிர்கடல் நாரம் நாவுற
வேட்கையிற் பருகிய மேகம்—*கம்ப*. 4257

## ஔ) மேற்கோள்விளக்கப் பகுதி:

*'நெடுங்கடல்'*

*அடியார்க்கு*: 'நெடுங்கடலும் நீர்மை குன்றும்' என்றலின் முந்நீர் முதியநீர் எனப் பொருள்படாது என மறுத்து உரைத்தற்கு (*சிலம்பு.ஆய்ச்*.31)

*'நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும்'*

*காரி*: இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது (*நுண்பொருள்மாலை, குறள்* 215)

நெடுங்கடல் என்பது ஆழமுடைய கடல் எனப் பொருள் படுதற்கு (*நுண்பொருள்மாலை குறள்* 495)

*இராமா*: அஃறிணையோடு அஃறிணையைச் சார்த்தி அஃறிணை முடிபு ஏற்றற்கு (*நன்*. 418).

(*கஎ*)

## 2.8. சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

### உரைப்பகுதி:

அ) மணக்.: சிறப்புச் செய்யப்படுகின்ற விழவு பூசனை நடவாது; வானம் புலருமாகில் தேவர்களுக்கும் இவ்வுலகின்கண் எ-று.

மழை பெய்யாக்கால் வரும் குற்றம் கூறுவார் முற்பட நான்கு வகைப்பட்ட அறங்களில்[1] பூசைகெடும் என்றார்.

ஆ) பரிதி: எ-து திருநாளும் தினப்பூசையும்[2] உண்டாகா; பூலோகத்தில் மழை வராவிடில் எ-று.

இ) பரிப்.: உம்மையான் முனிவர்க்கும் என்பதும் கொள்ளப்படும்.

ஈ) காளி: எ-து தேவர் மாட்டும் பிதிர்கள்[3] மாட்டும் விசேஷித்துச்[4] செய்யும் கருமங்களும், இங்ஙனம் நிமித்தீகரித்துச்[5] செய்தலன்றி உயர்ந்தோர் நாடோறும் செய்து வருகின்ற நற்கருமங்களும் மற்று இவை இரண்டும் சென்று தலைப்படாது; மழையானது வறந்து போமாயின் தேவர்கட்கும் இவ்விடத்தில் எ-று.

உ) பரிமேல்.: தேவர்கட்கும் இவ்வுலகின் மக்களான்செய்யப்படும் விழவும் பூசனையும் நடவாது, மழை பெய்யாதாயின்.

நைமித்திகத்தோடு[6] கூடிய நித்தியம்[7] என்றாகலின், செல்லாது என்றார். உம்மை சிறப்பும்மை. நித்தியத்தில் தாழ்வுதீரச் செய்வது நைமித்திகம் ஆதலின் அதனை முற் கூறினார்.

காரி: சிறப்பொடு கூடிய பூசனை என ஒருமை ஆக்கிச் செல்லாது என்றார். ஆசிரியனோடு மாணாக்கன் வந்தான் என்பதும் அது. வானோர்க்கும் என்பது சிறப்பும்மை.

---

1 தானம் தவம், நாட்பூசை, விழா என்ற நான்கு அறங்கள்.

2 தினப்பூசை—நாள்தோறும் நடக்கும் பூசை

3 பிதிர்கள்—43 ஆம் குறளின் காளிங்கர் உரையைக் காண்க.

4 விசேஷித்து—சிறந்து 5 நிமித்தீகரித்து—காரணமாக

6 நைமித்திகம்—யாதானும் ஓர் நிமித்தங் கருதி செய்யப்படும் பூசனையும் விழாவும் நோன்பும் முதலியன.

7 நித்தியம் - நாள்தோறும் வழக்கமாகச் செய்துவரும் நீராட்டு பூசை முதலியன.

ஊ) *கவிராசர்:* மழை பெய்யாத காலத்திலே சுவாமிகளுக்கும் தேவர்களுக்கும் சிறப்பும் பூஜையும் நடவா. ஆனபடியினால் சகலமான பேருக்கும் மழை வேண்டும் (எ-று).

எ) *பழைய 1:* வருஷத் திருநாளும்,[1] தினப்பூசையும் நடவாது; தேவர்க்கும் மழை பெய்யாவிடில்.

ஏ) *பழைய 2:* தேவர்க்கும் இவ்வுலகின்கண் மக்களான்(ற்) செய்யப்படும் திருநாளும் பூசையும் நடவா, மழை பெய்யாதாயின்.

## ஐ) *தொகுப்பும் குறிப்பும்:*

*கா.சுப்பிரமணியபிள்ளை* உரை கூறும் முதலிலே திருவிழா நிற்கும் பின்னர் நாட்பூசை நிற்கும் என்ற கருத்து நேர்முக அறிவால் ஆனது. *திரு.வி.க.* வானோரை உயர்ந்தோர் என்பர். அவர்கட்கும் சிறப்போடு பூசனை நடவாது என்பர். இவர் சிறப்பை வேறு கருதாது பூசனைக்கு அடையாக்குவர். இவற்றுட் சிறந்தன கொள்க. *குழந்தை* சிறப்பினை வழிபாடு என்றும், பூசனையை அன்போடு போற்றுதல் என்றும் உரைப்பர். வானோர் என்றது உயர்ந்தோர் அல்லது வணங்குதற்கு உரியார் என்பது இவர் கருத்து. திருக்குறள் ஆசிரியர் காலத்திலும் முன்னும் பின்னும் வானோர் என்ற சொல் தேவர்களைக் காட்டுவதன்றி உயர்ந்தோரை உணர்த்தாமை காண்க. பழைய உரையாசிரியர்கள் கருதிய வண்ணம் சிறப்பும் பூசனையும் நடவாது என்பதும், *கா.சு.* கூறுவதுபோல மழையின்மையால் முதலில் நிற்பது பெருவிழாவும், பின்னர் நாள் விழாவாகிய பூசனையும் நிற்கும் என்பதும் சிறந்த கருத்தாகும்.

## ஒ) *ஒப்புமைப் பகுதி:*

*'சிறப்பு'*

சென்றுகை தொழுது சிறப்புச் செய்தலின் —*மணி.* 10:72

தெய்வத்தைக் கரங்கொடு பெருஞ்சிறப்பு அயர்தல்மேயினான் —*சூளா.* 212

*'முற்றும்'*

வானம் சுருங்கில் தானம் சுருங்கும்—பழமொழி

...தண்மதிபோல் முக்குடைக்கீழ்த் தாதைபாதம்

1 வருஷத்திருநாள்–ஆண்டுதோறும் நடைபெறும் சிறப்பு வழிபாடு.

பூவே புகைசாந்தம் சுண்ணம் விளக்கு இவற்றால் நாளும்
ஏவா இவைபிறவும் பூசனையென்று ஈண்டியநூல் கரை கண்டாரே
—சீவக. 1547.

மண்ணின்மிசை வான்பொய்த்து நதிகள் தப்பி
மன்னுயிர்கள் கண்சாம்பி உணவுமாறி
விண்ணவர்க்கும் சிறப்பில்வரும் பூசையாற்றா
மிக்கபெரும் பசியுலகில் விரவக்கண்டு
—பெரிய. திருஞான. 562

## ஓ) *மேற்கோள் விளக்கப்பகுதி:*

*'சிறப்பொடு பூசனை ... ஈண்டு'*

*காரி* பாவிக அணிக்கு மேற்கோள் (*மாறன்*.251)

*'சிறப்பொடு பூசனை செல்லாது'*—

*காரி*: 'சிறப்பொடு பூசனை செல்லாது' என்பதனுள்ளும் 'செல்லும்' என்னும்ஒருமை வினைக்கேற்பச் சிறப்பொடு கூடிய பூசனை எனக் 'கூடிய' என்னும் ஒரு சொல்லைப் பெய்து, சிறப்பை அடையாக்கிப் பூசனையை எழுவாய் ஆக்கினார். (நுண்பொருள்மாலை. குறள் 39)

*சுப்பிரமணிய*: மூன்றன்உருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தமைக்கு (*பிரயோக*. 16)

*'வானம் வறக்குமேல்'*

*காரி*: ஏல் என்பது ஆயின் என்னும் எச்சமாதலான், கணமேயும். (ஏயும்) என்பதனை கணமேனும் எனப்பாடம் ஓதுக எனற்கு (நுண்பொருள்மாலை, குறள் 29)

(கஅ)

## 2. 9. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம் வானம் வழங்கா தெனின்.

### உரைப்பகுதி:

அ) *மணக்*.: தானமும் தவமுமாகிய இரண்டறமும் உளவாகா; அகன்ற உலகத்துக்கண் மழை பெய்யாதாயின் எ-று. இது தானமும் தவமும் கெடும் என்றது.

ஆ) *பரிதி*.: எ-து தானம்[1] தன்மம்[2] தவசு உண்டாகா; பூலோகத்தில் மழை வழங்கா விடில் எ-று.

---

1 தானம்-இக்குறளின் பரிமேலழகரது சிறப்புக்குறிப்பில் காண்க.

2 தன்மம்-தர்மம்; யாவர்க்கும் வரையாது கொடுத்தல்.

இ) பரிப்.: ... ...

ஈ) காளி.: எ-து தானமும் தவமும் ஆகிய இவை இரண்டும் இவ்உலகத்து நிலைபெறா; மற்றும் விண்ணுலகமானது மழையை வழங்காதாயின் எ-று.

உ) பரிமேல்.: அகன்ற உலகின்கண் தானமும் தவமும் ஆகிய இரண்டறமும் உளவாகா, மழை பெய்யாதாயின்.

தானமாவது அறநெறியான் வந்தபொருள்களைத் தக்கார்க்கு உவகையோடும் கொடுத்தல். தவமாவது மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல் முதலாயின. பெரும்பான்மை பற்றித் தானம் இல்லறத்தின் மேலும், தவம் துறவறத்தின் மேலும் நின்றன.

காரி.: தானம்—அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவந்து கொடுத்தல். தவம்-மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்கல். தானம் தவம் இரண்டும் எனச் செவ்வெண் தொகை பெற்றது. இவ்வாறு இல்லாமையான் 'அறம் பொருள் கண்டார்கணில்'[1] என்பதனுள் செவ்வெண்ணின் தொகை தொக்கு நின்றது என்றார். 'திருவளர் தாமரையுள் பேராசிரியர்' இவ்வாறு உரைத்தார் என்க. 'அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும் பெயர்க்குரி மரபின் செவ்வெண் இறுதியும், ஏயினாகிய எண்ணின் இறுதியும் யாவயின் வரினும் தொகையின்றி இயலா'[2] என்பது சூத்திரம்.

ஊ) கவிராசர்: ஆகாயத்தில் இருந்து மழை பெய்யாவிட்டால் இந்த உலகத்திலே தானமும் தவமும் இல்லாமல் போய் விடும் (எ-று).

எ) பழைய 1: தானமும் தவமும் பூமியில் தங்கா. தேவலோகத்து மழை பூமியில் பெய்யாவிடின்.

ஏ) பழைய 2: அகன்ற உலகின்கண் தானம் கொடுத்தலும் தவம் செய்தலுமாகிய இரண்டறமும் உண்டாகா மழை பெய்யாதாயின்.

ஐ) தொகுப்பும் குறிப்பும்:

தானம் தவம் என்ற இரண்டில் முன்னது இல்லறத்தார்க்கும் பின்னது துறவிக்கும் உரியது என்பது பரிமேலழகர்

---

1 குறள் 141. 2 தொல். சொல். 290

கருத்து. ஏனையோர் இவ்விரண்டையும் எல்லார்க்கும் பொது வான செயலாகக் கருதுவர். இரண்டு என்பதற்கு எனது என்று கொடுத்தலும் தவிர்த்தலுமாகிய இவை இரண்டே எனப் பொருள்காண்பர் *சுகாத்தியர்*. 'ஈண்டு எனது என்று கொடுத்தல்' என்பதில் ஒருபொருட் சிறப்பில்லாமை அறிக. *வீரமா முனிவர்* இரவலர்க்குக் கரவாது அளித்தலை தானம் என்றும், நோன்பினைத் தவம் என்றும் கருதுகிறார். இவை இரண்டும் முறையே பிறர்நலம் பேணுதலும் தன்பொருட்டுச் செய்வதும் என இருவகைப்படும் என்பர் *கா.சு பிள்ளை*. *நாமக்கல் கவிஞர்* முறையே தானங்கொடுக்கிற புண்ணிய எண்ணமும், தவம் செய்யவேணும் என்கிற ஆன்ம விசாரணையும் தோன்றா என்பர். *குழந்தை* இல்லாதவனுக்கு இயன்றளவு கொடுப்பது தானம்; மனத்தை அடக்குதல் முதலியன தவம் என்பர். இவற்றுள் குழந்தையுரை வைதிகச் சார்புக்கும் ஏற்றதாதல் காண்க.

*வ.உ.சி.*: தானம்—நல்லார்க்கு ஈதல்; ஈகை—இல்லார்க்கு ஈதல். இல்வாழ்வார் அறங்களில் சிறந்தது தானம். துறந்தார் ஒழுக்கங்களில் சிறந்தது தவம் என்பர். 'வியன்உலகம் வானம் வழங்காவிடின்' என்பது நச்சர்பாடம் என்பர் வ.உ.சி.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*முற்றும்:*

தானமும் தவமும் தாஞ்செய லரிதே
தானமும் தவமும் தாஞ்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந் திடுமே —*ஔவையார்*

*தானம்*

படநாகம் தோலுரித்தால்போல் துறந்துகண்டவர் மெய்பனிப்ப நோற்றிட்டு
உடனாக ஐம்பொறியும் வென்றார்க்கு உவந்து ஈதல் தானமாகும்
—*சீவக.* 1546

*தவம்:*

ஒவாது இரண்டு உவாவும் அட்டமியும் பட்டினிவிட்டு ஒழுக்கம்
காத்தல் தாவாத தவம்—*சீவக.* 1547

## ஓ) மேற்கோள் விளக்கப்பகுதி:

*'தானம் தவம் ......வழங்காது எனின்'*

*பெருந்தேவனார்:* எட்டாரைச் சக்கரத்துள் எட்டுஅறைச் சதுக்கத்துள் காதை கரப்பாய் வந்தது (*வீரசோழி*. 179).

(*கக*)

## 2.10. *நீரின் றமையா துலகெனின்யார் யார்க்கும்*
## *வானின் றமையா தொழுக்கு.*

**உரைப்பகுதி:**

*அ) மணக்.:* நீரையின்றி உலகம் அமையாதாயின் யாவர்க்கும் மழையையின்றி ஒழுக்கம் உண்டாகாது.

ஒழுக்கம்—விரதம். இஃது ஆசாரம் கெடும் என்றது. இவை மூன்றினாலும் நான்கு அறமும் கெடும் என்று கூறினார்.

*ஆ) பரிதி.:* எ-து சர்வான்மாக்களுக்கும்[1] சலமின்றியே உலகியல் நடவாது ஆதலால், மழையின்றி ஒரு காரணமில்லை என்றவாறு.

*இ) பரிப்.:* —

*ஈ) காளி.:* எ-து இவ்வுலகமானது நீரையின்றி அமையாதாயின் இங்குள்ள உயர்ந்தோர் யாவர்க்கும் இழிந்தோர் யாவர்க்கும் மழையை இன்றி அமையாது அவரவர் ஒழுகும் ஒழுக்கு எ-று.

*உ) பரிமேல்.:* எவ்வகை மேம்பாட்டார்க்கும் நீரையின்றி உலகியல் அமையாதாயின், அந்நீர் இடையறாது ஒழுகுகின்ற ஒழுக்கம் வானையின்றி அமையாது.

பொருள் இன்பங்களை உலகியல் என்றார்; அவை இம்மைக்கண்ணவாகலின். இடையறாது ஒழுகுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் உளதாகல். நீரின்றமையாது என்பது எல்லாரானும் தெளியப்படுதலின்; அதுபோல ஒழுக்கும் வானையின்றிஅமையாமை தெளியப்படும் என்பார் நீரின்றமையாது உலகெனின் என்றார். இதனை நீரையின்றியமையாது உலகாயின் எத்திறத்தார்க்கும் மழையையின்றி ஒழுக்கம் நிரம்பாதென உரைப்பாரும் உளர். இவை மூன்று பாட்டானும் அறம் பொருள் இன்பங்கள் நடத்தற்கு ஏதுவாதல் கூறப்பட்டது.

---

1 சர்வ ஆன்மாக்களுக்கும் - அனைத்து உயிர்களுக்கும்

*காரி.*: இன்றி என்னும் வினைஎச்சக்குறிப்பு இன்று எனத்திரிந்தது. 'உப்பின்று புற்கை' 'அதாஅன்று' என்பதும் அது. 'இன்றி என்னும் வினை எஞ்சு இறுதி, நின்ற இகரம் உகரமாதல்'[1] என்னும் சூத்திரவிதி பெற்றன. யார்க்கும் என்பது யார்யார்க்கும் என இரட்டித்தது.

ஊ) *கவிராசர்*: எப்படிப்பட்டவர்களுக்கும் தண்ணீர் இல்லாமல் ஒரு காரியமும் ஆகாது. அந்தத்தண்ணீரும் ஆகாயத்திலே மேகங்கள் கொடுத்தால் அல்லாமல் இல்லை; (எ-று).

(வி·ரை) நீரை இன்றி அமையாது 'உலகாயின், யாவர்க்கும் மழையை இன்றி ஒழுக்கம் நடவாது' என்பது பழைய உரை. மழை இல்லையேல் விளைவுஇல்லை விளைவு இல்லையேல் பஞ்சம் மிகும். பஞ்சம் மிகவே மக்கள் பசியாலும் பிணியாலும் வருந்தித் தம்ஒழுக்கத்தை இழப்பர்.

எ) *பழைய* 1: சர்வான்மாக்களுக்கும் நீரின்றியே நடவாது, ஆகையால் மழையின்றியிலே பூலோகம் நடவாது.

ஏ) *பழைய* 2: நீரையின்றி உலகும் விளையமாட்டாது; ஆதலால் யார்யார்க்கும் உலக இயல்பு நடவாது. அந்நீரும் மழையை இன்றி இடையறாது ஒழுகமாட்டாது.

மழையில்லாமல் நீரில்லை நீரில்லாமல் விளைவில்லை: விளைவில்லாமல் உலக இயல்பு இல்லை எனக்கொள்க.

## ஐ) *தொகுப்பும் குறிப்பும்*:

ஒழுக்கு என்பதற்கு 'ஒழுக்கம்' என்று *மணக்குடவரும்*, 'நீர்ஒழுக்கம்' எனப் *பரிமேலழகரும்* 'ஒழுகிவந்த நீர்' எனப் *பழையஉரையர்சிரியர்* இருவரும் உரைப்பர். *வீரமாமுனிவர்* 'மழையின்றி மனிதன் உயரமுடியாது; அடைந்த உயர்வைப் பாதுகாக்கமுடியாது' எனப் புத்துரை காண்பர். *கா.சுப்பிரமணியப்பிள்ளை* 'வேறுகருத்தாக மழையின்றி உடம்பு நிலையாதது போலத்தவம் நீரின்றி அமையாது' என்றும் கூறுவர். *திரு.வி.க.* நீர் என்பதற்கு குணம் என்று பொருள் காண்பார். இவருள் மழையின்றி ஒழுக்கம் நிலைபெறாது என்னும் கருத்துடையவர்களே போற்றற்குரியார்கள்; அதிகாரம் வான் சிறப்பாதலின்.

---

1. தொல். எழுத்து. 237

'உலகு'

—'உலகம்' மணக்குடவர், காளிங்கர், பழையஉரை 2, இலக்குவனார், மு.வ., இராம.

—'உலகியல்' பரிதி, பரிமேல், சொ.த., குழந்தை.

—'உலகவாழ்க்கை' கா.சு., தேவநேயர்.

'யார்யார்க்கும்'

'யாவர்க்கும்'—மணக்.

'சர்வான்மாக்களுக்கும்'—பரிதி, பழைய 1.

'எவ்வகைமேம்பாட்டார்க்கும்'—பரிமேல்.

'உயர்ந்தோர் இழிந்தோர் யாவர்க்கும்'—காளி.

'ஒழுக்கு'

'ஒழுக்கம்'—மணக்., காளி., வ.உ.சி.

'காரணம்'—பரிதி. இது கருத்துப் பொருளேயன்றிச் சொற்பொருளாகாது.

'நீரொழுக்கு'—பழைய2, பரிமேல்.

உலகம் நடைபெறாது எனின் வாழ்க்கை நடவாது என்பதே பொருளாகக்கோடல் சிறப்பு. யார்யார்க்கும் என்பது உயர்ந்தோர் தாழ்ந்தோர் யாருக்கும் என்ற காளிங்கர்உரை சிறந்தது.

'ஒழுக்கு' — அடுத்த அதிகாரத்து முதற்குறள் ஒழுக்கத்து நீத்தார் என வருதலின் ஒழுக்கம் என்ற பொருளே சிறப்புடையதாதல்காண்க.

பரிமேலழகரை 'அவ்வுண்மை எடுத்துக்கூறப்படாத ஒன்று' என மறுப்பர் வ.உ.சி.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

'நீரின்றமையாது உலகு'

நீரின் றமையா யாக்கைக்கு எல்லாம் —புறநா.18:18

நீரின் றமையா உலகம் போல —நற்.1:6.

'யார்யார்க்கும் வான்இன்று அமையாது'

மழையின்றி மாநிலத்தார்க்கு இல்லை —நான்மணி 47

'வானின்றமையாதொழுக்கு'

வானுமிழ் வாரி —உதயண.10

'ஒழுக்கம்'

உள்பொருள் இதுஎன உணர்தல் ஞானமாம்

தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்

விள்ளற இருமையும் விளங்கத் தன்னுளே
எள்ளிதின் தரித்தலை ஒழுக்கம் என்பவே

—சீவக. 2845.

(உ0)

## வான் சிறப்பு அதிகாரத்தில் பண்டை உரையாசிரியர்களின் குறள் வைப்பு முறை

| | வானின் | துப்பார்க்கு | விண்ணின் | ஏரின் | கெடுப்ப | விசும்பின் | நெடுங் | சிறப்பொடு | தானம் | நீரின் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மணக். | 10 | 9 | 4 | 7 | 8 | 5 | 6 | 1 | 2 | 3 |
| பரிதி. | 3 | 5 | 9 | 10 | 8 | 6 | 4 | 1 | 2 | 7 |
| காளி. | 10 | 8 | 2 | 9 | 6 | 3 | 7 | 1 | 4 | 5 |
| பரிமேல். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |

இரண்டாம் அதிகாரம் 'வான் சிறப்பு' முற்றிற்று.

# 3. நீத்தார் பெருமை

*அ) மணக்.:* நீத்தார் பெருமையாவது துறந்த முனிவரது பெருமையைக் கூறல். இது கடவுளரை வணங்கினாற்போல், முனிவரையும் வணங்க வேண்டும் என்பதனானும், அவர் அதைஅடக்கத்தக்கவர் என்ற கருத்தினானும் அவையிற்றின் பின் கூறப்பட்டது.

*ஆ) பரிதி.:* நீத்தார் பெருமையாவது விரும்பார் செயல் என்று அறிக.

*இ) பரிப்.:* —

*ஈ) காளி.:* —

*உ) பரிமேல்.:* அஃதாவது, முற்றத் துறந்த முனிவரது பெருமை கூறுதல்.

அவ்வறமுதற் பொருள்களை உலகிற்கு உள்ளவாறு உணர்த்துவார் அவராகலின், இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

> *இராமா.:* காரியப்பட்டு நின்ற அந்த உலக முழுமையும் உள்ளபடி உணருவதற்கும், அந்த அறம் முதலாகிய பொருள்களை உலகிற்கு உள்ளபடி உணர்த்துதற்கும் உரியவர் அவராகலானும், "சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்றைந்தின் வகைதெரிவான்கட்டே உலகு" என உலகம் அவருள் அடங்குதலானும், 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என இவரையும் உலகம் என்று சொல்லப்படுவதனானும் வான்சிறப்பின் பின் இது வைக்கப்பட்டது.

*ஊ) கவிராசர்:* அஃதாவது, சகல ஆசாபாசங்களையும் விட்டுத் துறந்து, தபசு பண்ணுகின்ற முனீசுவரர்கள் பெருமையைச் சொல்கின்றதாகும்.

எ) பழைய 1: அகப்பற்று புறப்பற்றுக்களை நீத்தாரது பெருமை.

ஏ) பழைய 2: அஃதாவது முழுவதும் விட்டு நீங்கின துறவறத்தை உடைய பெரியோரது பெருமை.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

கா.சு.: உலகப்பற்றை ஒழித்து, இறைவனருளைப் பெற்ற பெரியோரே உள்ளதை உள்ளபடியே உணர்த்த வல்லவர்கள். ஆதலால் கடவுளையும் அவரருட்சத்தியையும் தொழுதபின், அடியார்களுக்கு வணக்கங்கூறுதல் முறைமை யாதலால் நீத்தார் பெருமை அவற்றின் பின் வைக்கப்பட்டது.

திரு.வி.க.: நீத்தாரது பெருமை கூறுதல். நீத்தார்— மனமாசுகளை விடுத்தவர்; கட்டற்றவர். இறைக்குரிய கோயில் இரண்டு; ஒன்று இயற்கை. மற்றொன்று நீத்தார் நெஞ்சத்தாமரை. ஒரு கோயிலுக்குப் பின் மற்றொரு கோயில் திகழும் முறையில் வான்சிறப்புக்குப்பின் நீத்தார் பெருமை வைக்கப்பட்டது என்பர்.

சொ.த.: 'அஃதாவது முற்றத்துறந்த முனிவரது பெருமை. அளித்தலும் அழித்தலுமாகிய ஆற்றலை இயல்பாகவே எய்திய வான்போலாது, அவற்றைத் தவத்தான் எய்தியவர் துறவோராதலின் அவர் பெருமை வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

வானால் நிலைபெறும் ஒழுக்கத்தை உலகத்திற்கு உணர்த்தவல்லோர் நீத்தாராகலின் நீத்தார்க்கும் வானுக்கும் இயைபுண்மையறிக. இவ்வியைபு விளக்கவே மேலையதிகாரத்தை ஒழுக்கத்தில் முடித்த வள்ளுவர் இந்த அதிகாரத்தை ஒழுக்கத்தில் துவங்கினார் என்பர்.

இராம.: நீத்தார்—ஆசை பாசங்களை நீக்கிய வாழ்க்கை நடத்தி உலக நலத்துக்கு வழிகாட்டிய மகான்கள். கடவுள் வணக்கங்கூறி, கடவுளைக்காட்டும் மழையின் பெருமை கூறி, அடுத்து கடவுள் சிந்தனையோடு வாழ்ந்து வழிகாட்டிய நீத்தார் பெருமையை நினைவூட்டுகிறார்.

குழந்தை: இல்லற இன்பத்தைத் துறந்து பொதுநலம்புரியும் பெரியாரது பெருமை கூறுதல். 'மிக்க காமத்து வேட்கை தீர்ந்துழி' மக்களிடம் குடும்பத்தை ஒப்படைத்து பொதுநலத் தொண்டு செய்தல் இல்லறத்தின் பயனாகும் என்பதாம்.

சி இ.: பிறர் நலங்கருதித் தந்நலம் விட்டாரது பெருமையைக் கூறுதல்.

*தேவநேயர்:* இறைவன் திருவருளைப் பெற்றவரும்—மழை பெயற்குக்கரணியமாகக் கருதப்பெறுபவரும், பேரரசர்கட்குப் பெருந்துணையாகும் அறிவாற்றல்களாற் சிறந்தவரும், நாட்டுவாழ்விற்கு வேண்டியவருமான முற்றத்துறந்த முனிவரின் பெருமை கூறுதல்.

*கா.அ.:* கடவுள் வாழ்த்தையடுத்து, மழையுருவில் கடவுளை வாழ்த்தியது போல இவ்வதிகாரம் ஒழுக்கத்து நீத்தார் குழாத்தைக் கண்டு அவர்கள் வடிவில் கடவுளை வாழ்த்துதல் இவ்வதிகாரம் பொருட்பாலுக்குரிய பாயிரமாக அமைவது. கடவுளின் உருவப்படிவத்தைச் சிறப்பிப்பது.

அதிகாரப்பெயர்: ஒழுக்கத்துநீத்தார் பெருமை, என்பது. அந்தணர்—விதேகமுத்தர் போன்றவர். ஒழுக்கத்து நீத்தார்? சீவன்முத்தர் போன்றவர். அதாவது உடற்பற்று விட்டும், உடல் வாழ்வுவிடாமல், தாமரையிலைத் தண்ணீர் போல உடற்பற்று விட்ட அருள்ஞானியர். அவர்கள் பெருமையைக் கூறுவது இவ்வதிகாரம் என்பர். மேலும், இது சமணரின் சாதுசரணத்துடனும், பௌத்தரின் சங்கசரணத்துடனும் ஒத்தியைவதாகும் என்பர்.

பின்புவிளைந்த சிந்தனைக் கருத்து வளர்ச்சிக்கும் முன்பே அடித்தளம் அமைத்தவர் *மணக்குடவர்* என்பதை அவருரைக் குறிப்பு அறிவிக்கிறது.

அதிகாரப் பெயர் முதற்குறளில் வந்துள்ள தொடரை அடியாக்கொண்டு எழுந்தது என்று முதன்முதற் கூறிய *திரு.வி.க.*வை ஒட்டிச் சிறிது வளர்ந்தநிலையிலும் *அப்பாத்துரையார்* 'ஒழுக்கத்து நீத்தார் பெருமை' என்றனர். அதிகாரமுறைவைப்பிற்குக் காரணம் கூறும் வகையில் *மணக்குடவர்* ஏனையோர்க்கு வழிகாட்டியாகிறார். அளிப்பழிப்பாற்றலை இயல்பாகவே பெற்ற வானைச் சிறப்பித்தலின் பின், அவைகளைத் தம் தவத்தாற்பெற்ற முனிவர்வாழ்த்து இடம் பெற்றது என்று *தண்டபாணியார்* கூறும் இயைபு புதுமையானது. இதுவும் *திரு.வி.க.*வின் கருத்து வளர்ச்சியேயாகும்.

## 3. 1. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து வேண்டும் பனுவற் றுணிவு.

### உரைப்பகுதி:

*அ) மணக்.:* ஒழுக்கத்தின்பொருட்டு எல்லாப் பொருளை யும்[1] துறந்தாரது பெருமையை நூல்களின் துணிவு விழுப்பத் தின்[2] பொருட்டு வேண்டும் எ-று.

யாதானுமொரு பொய்யைச் சொல்லும் நூலும் தன்னை எல்லாரும் கொண்டாடுதற்காகத் துறந்தார் பெருமையை நன்கு மதித்துக் கூறும்; அதனாலே யானும் சொல்கின்றேன் என்பது.[3]

*ஆ) பரிதி.:* எ-து ஐம்புலன்களை அடக்கின ஒழுக்கத்தி னோர்க்குப் பெருமை எங்கே என்னில், தாங்கள் கற்ற சாத் திரத்தின் பெருமையினால் எ-று.[4]

*இ) பரிப்.:* 'யாதானும் ஒருபொருளைச் சொல்லும் நூலும்' பாடம். அன்றியும் ஒழுக்கத்தின்கண்ணே நின்று எல்லாப் பொருளையும் துறந்தாரது பெருமையாவது உயர்ச்சி யிலே விரும்பி நடக்கின்ற நூல்களில் துணிந்தபொருள் என் றுமாம் என்றது எல்லாம் துறந்தார்க்குப் பெருமையாவது அவரது தன்மை. அதனைத் தத்துவ ஆராய்ச்சியின் நூல்களின் துணிந்தபொருள் எனின் அல்லது வேறொன்றனோடு உவ மிக்கப்படாது என்று கூறியவாறு.

*ஈ) காளி.:* எ-து தாம் முன்னம் ஒழுகிய ஒழுக்கத்தினைப் பின்பு துறவு நெறி சொல்லுகின்ற ஒழுக்கத்தின்கண்ணே தாற்பரித்து[5] விட்டு நீங்கினார் யாவர் சிலர் அவரது பெருந் தன்மைச் சிறப்பின்மாட்டே விரும்பிநின்றது. மறை முதலா கிய எல்லா நூல்களினும் ஆராய்ந்து துணிந்து நின்ற துணிவு நிலை எ-று.

*உ) பரிமேல்.:* தமக்குரிய ஒழுக்கத்தின்கண்ணே நின்று துறந்தாரது பெருமையை விழுமியபொருள்கள் பலவற்றுள் ளும் இதுவே விழுமிது என விரும்பும் நூல்களது துணிவு.

---

1 எல்லாப் பொருளையும் என்றது புலன் இன்பங்களால் துய்க்கப்படும் உணவு, மாலை, மாதர் முதலியவற்றை. 2 விழுப்பம்—பெருமை

3 இங்ஙனம் கூறுவதால் துறந்தார் பெருமை தோன்றக்கூடுமோ என்பது ஆய்தக்கது.

4 இதன் கருத்து துறந்தோர்க்கு உளவாம் பெருமை அனைத்தும் கற்ற சாத் திரங்களின் பெருமையால் என்பது ஆகின்றது. அவர்களுக்கு ஐந்தடக் கலே பெருமையாய் இருக்க அப்பெருமையைக் கற்ற சாத்திரத்தின் பெருமையினால் என்பதால் போந்த பயன் யாது? 5 தாற்பரித்து—கருதி

தமக்கு உரிய ஒழுக்கத்தின்கண்ணே நின்றுதுறத்தலாவது தத்தம்[1] வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கங்களை வழுவாது ஒழுக அறம் வளரும்; அறம் வளர, பாவந்தேயும்[2]; பாவந்தேய, அறியாமை நீங்கும்; அறியாமை நீங்க, நித்த அநித்தங்களது[3] வேறுபாட்டுணர்வும், அழிதன் மாலையவாய இம்மை மறுமை இன்பங்களின் உவர்ப்பும், பிறவித்துன்பங் களும் தோன்றும்; அவை தோன்ற வீட்டின்கண் ஆசை உண் டாம்; அஃது உண்டாக, பிறவிக்குக் காரணமாகிய பயனில் முயற்சிகள் எல்லாம் நீங்கி, வீட்டிற்குக் காரணமாகிய யோக முயற்சி[4] உண்டாம்;[5] அஃது உண்டாக மெய்யுணர்வு பிறந்து, புறப்பற்றாகிய எனது என்பதும் அகப்பற்றாகிய யான் என்பதும் விடும்; ஆகலான் இவ்விரண்டு பற்றையும் இம்முறையே உவர்த்துவிடுதல் எனக்கொள்க. 'பனுவல்' எனப் பொதுப்படக் கூறிய அதனான், ஒன்றை ஒன்று[6] ஒவ் வாத சமயநூல்கள் எல்லாவற்றிற்கும் இஃது ஒத்த துணிவு என்பது பெற்றாம். செய்தாரது துணிவு, பனுவல்மேல் ஏற்றப்பட்டது.[7]

*காரி.*: செய்தார் துணிவு பனுவன்மேல் ஏற்றப்பட்டது. யான் என்பதும் எனது என்பதும் இருவகைப்பற்று.

ஊ) *கவிராசர்.*: தபசுக்கு[8] உரியவான நல்ல ஒழுக்கங் களிலே நின்று தபசு பண்ணுகிறவர்கள் பெருமையைப் பெரிய வாயிருக்கிற பல வஸ்துக்களிலும் தபசு பெரியதென்று சகல மான நூல்களிலும் சொல்லும்.

---

1 'தத்தம்' என்பது முதல் 'விடும்' என்பது வரை இத்தொடர்ந்து வருகின்ற கருத்துக்கள் சூதசங்கிதை பிராசாதகிரமத்தில் வருவனவற்றை ஒத்திருத் தல் காண்க.

2 'அல்லவை தேய அறம் பெருகும்' என்ற குறள் (96) உரையில் 'தேய்தல்' தன் பகையாகிய அறம் வளர்தலின் தனக்கு நிலையின்றி மெலிதல் என்று இவரே உரைத்தல் காண்க.

3 நித்தம்அநித்தம்—நாசமின்றி இருப்பதும் நாசத்தை அடைவதும்.

4 யோகமுயற்சி—மனம் ஒன்றித்தல்

5 நித்த அநித்தங்களது வேறுபாட்டுணர்வு, இம்மை மறுமை இன்பங்களின் உவர்ப்பு. வீட்டின்கண் ஆசை, யோகமுயற்சி.

6 எனது என்பது அகப்பற்று; இதனை மமகாரம் என்பர் வடநூலார்.

7 யான் என்பதை அகங்காரம் என்பர் வடநூலார். வள்ளுவர் 'யான் எனது என்னும் செருக்கு' (குறள் 346) என்பர்.

8 சிறப்பியல்களில் ஒன்றற்கொன்று மாறுபட்டிருத்தல் பற்றி இங்ஙனம் கூறுகிறார். ''பல்லாற்றான் தேரினும் அஃதே துணை''(குறள் 242) என்ற இடத்தும் ஒன்றைஒன்று ஒவ்வாத சமய நெறிகள் என உரைகாண்பர்.

9 இது கருத்தாவின் தொழிற்பண்பு காரியத்தில் மேலாய உபசாரவழக்கு.

10 தபசு— தவம்.

ஏ) பழைய. 1: நாள்வழியே அஞ்சுபுலங்களையும் ஒடுக்கிய ஒழுக்கத்தினை உடைய நீத்தார்பெருமையை, அவர்களைக் கூறும் நூலினது பெருமையால் துணிதல் வேண்டும்.[1]

ஏ) பழைய. 2: தமக்குரிய ஒழுக்கத்தின் கண்ணே நின்று, சகலமும் விட்டு நீங்கின துறவறத்தை உடையவர் பெருமையை விழுமிய பொருள்கள் பலவற்றினுள்ளும் இதுவே விழுமிதென்று விரும்பும் நூல்களது துணிவு.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'ஒழுக்கத்து நீத்தார்'*

'ஒழுக்கத்தின் பொருட்டு எல்லாப்பொருளையும் துறந்தார்'—*மணக்.*

'ஐம்புலன்களையும் அடக்கின ஒழுக்கத்தினோர்' என்பர். இதன் பொருந்தாமை: ஒழுக்கத்தின்பொருட்டு பொருளனைத்தையும் துறந்தோர் பெருமையை நூல்களின் துணிவு விழுப்பத்தின்பொருட்டு வேண்டும் எனின், ஐம்புல இன்பங்களையும் ஆரத்துய்த்துத் துறவாத இல்லறத்தை நூல்களின் துணிவு விழுப்பத்தின்பொருட்டு வேண்டாது எனப்பட்டு. அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை என்பதனோடு மாறுகொள்ளுமாதலானும் இல்லற வழி நின்றோரையும் நூல்கள் ஓதுகின்றன ஆதலானும் இக்கருத்து ஏற்புடையதன்று.

பொய்நூல் தன்னை மெய்நூலாக ஆக்கிக்கொள்ளத் துறந்தார் பெருமையைக் கூறும். அதனானே யானும் சொல்லுகின்றேன் எனல் *மணக்குடவர்* கருத்தாயின் அவர் அளவில் அமைக. ஆனால் இவர் உரைகாரரே ஆதலின் உரை, நூலையே தழுவும் ஆதலால்யானும் என்றது வள்ளுவரைக் குறிக்க நேரும். அங்ஙனம் ஆயின் வள்ளுவம் பொய் நூலாகும். இத்தகைய பொருந்தா எண்ணங்கள் தோன்றுவதால் இக்குறிப்பு *மணக்குடவரின்* கருத்தாக இருக்காது. இடைச்செருகல் ஆகும்.

நீத்தார் பெருமையை அவர்களைக்கூறும் நூலின் பெருமையால் அறிதல் வேண்டும் என்ற பழைய உரைக்கருத்தும், நூல்களாற் கூறப்படவில்லையாயின் 'நீத்தார் பெருமை, பெருமையாகாது' என்ற கருத்தை, விளக்குவதானும், நீத்தாருக்குள்ள பெருமை பொறியடக்கம்—தவம் இரண்டானே விளைதலானும் இவ்வுரையும் இயையாதாகும்.

1 நீத்தார் பெருமையை நூல்களாலும் துணியவேண்டும் என்பதாம்.

'பனுவல் துணிவு வேண்டும் விழுப்பத்தை பெருமை' எனப் *பழைய உரை 2* '*தவம்*' எனச் *சுகாத்தியரும் கவிராச பண்டிதரும்* "வழுவாத துறவற மாண்பினை அனைத்திலும் சிறந்ததாக எந்த அறிவியல் துறையும் ஆதாரத்தொடு தேடத் தயங்குவதில்லை" என *வீரமாமுனிவரும்*, 'நீத்தார் பெருமையைத் தன் சிறப்பின்பொருட்டு நூல்களின் முடிவு விரும்பும்' எனத் *திரு.வி.க.*வும் 'நல்ல ஒழுக்கத்தினின்று தீய ஒழுக்கங்களைத் துறந்தவர்' என *இராமலிங்கனாரும், குழந்தையும்*, 'ஒழுக்கத்து'நின்று பற்றுவிட்டாரைச்சிறப்பிப்பதே நூல்களின் துணிவு' என *மு.வ.* வும் கூறுவர். இவர்கள் கருத்துப் பெரும்பாலும் *பரிமேலழகரை* ஒத்துச் சிறுபான்மை வேறுபடுதல் காண்க. 'துணிபு'—தருமர் பாடம் என்பர் *வ.உ.சி.*

நீத்தார்க்கு உளவாகும் பெருமை. அவரவர் கற்ற சாத்திரங்களின் அளவில் எனப் *பரிதியாரும்* கூறுவர். நீத்தாருள் பலர் கல்வி ஞானமில்லாமலே அறிவிற் பெரியோராக இருத்தலைக் காண்கின்றோமாதலானும், அவர்கள் பெருமையைப் பலநூல்கள் பாராட்டக் காண்கின்றோமாதலானும், *பரிதியார்* கருத்தும் பாராட்டுக்குரியதாகாது.

*பரிமேலழகர்* நின்று துறத்தல் என்பதற்குத் 'தமக்குரிய வருணத்திற்கும் நிலைக்கும் உரிய ஒழுக்கத்தின்கண் நின்று துறத்தல்' என்று பொருள் எழுதுகிறார். நிலை என்பது பிரமசரியம் முதலிய நான்கெனவே, துறவு என்பதும் அவற்றுள் ஒன்றாகும். நிலைகளில் நின்று துறத்தல் எனின் துறவினின்று துறப்பது எதனை? என்ற ஐயம் எழும். ஆகவே அவரவர் நிலைக்கு நேர்மாறானவற்றைத் துறத்தல் எனக் கோடல் இயைபுடையதாகும்.

ஆகவே துறவைக்கருதி, 'தாம் முன்பு ஒழுகிய இல்லொழுக்கத்தைவிட்டு, விலகிய துறவிகளின் பெருமையிலேயே வேதம் முதலானவைகளில் ஆய்ந்துகண்ட துணிவுநிலை நின்றது' என்ற *காளிங்கர்* கருத்தை

'காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே'

(*தொல்.* பொருள். 190:2)

என்னும் *தொல்காப்பியச்* சூத்திரம் அரண் செய்தலின்*காளிங்கர்* கருத்து மிகச் சிறப்புடையதாதல் தெளிக. இது தமிழ்மரபு.

பனுவல் துணிவு விழு பத்து வேண்டும் எனச்சொற் சிதைவு செய்து உத்தமக்ஷமை முதலான பத்து தருமங்கள் என்ற *கவிராசபண்டிதர்* உரைவிளக்கமும் அத்துணைச் சிறப் பினது அன்றாதலை முற்கூறிய காரணங்களே தெளிவுறுத் தும்.

'ஒழுக்கத்து நீத்தார்' என்பதற்குப் பிந்திய உரையாசிரி யர்களில் *திரு.வி.க.* 'தமக்குரிய ஒழுக்கத்திலே நின்று மன மாசுகளைப் போக்கினவர்கள்' எனவும்; 'ஒழுக்கந் தவறாமல் நீத்தவர்கள்' என *இராமலிங்கனாரும்,* 'நல்லொழுக்கத்திலே நின்று தீயஒழுக்கங்களைத் துறந்தவர்' எனக் *குழந்தையும்* 'உலகத்தைத் துறந்தவர்கள்' எனத் *தேவநேயரும்* 'உலக நன் மைக்காக எதனையும் துறந்தவர்கள்' எனக் *கோவிந்தசாமி* யும் 'தந்நலம் துறந்தவர்கள்' என *இலக்குவனாரும்* கூறுவர். 'துறவு நிலைக்கு உரிய ஒழுக்கங்களை விடாது பற்றி ஒழுகும் துறந்தார்' என்பர் *வ.உ.சி.* அனைத்தையும் இணைத்து எண்ணும்போது துறத்தலுக்குச் சொல்லப்படும் பொருள் கூறும் வகையினாலேயே அனைவரும் மாறுபடுகின்றனர். இவற்றுள் தந்நலத்தைத் துறந்தவர்கள், தியாகிகள் என்ற உரை இருபதாம் நூற்றாண்டின் நிகழ்வுக்கு ஏற்றதாக இருத் தலின் சிறந்தது ஆகலாம்.

நூல்கள் தம் பெருமைக்காக வேண்டும் என்பதைவிட நூல்கள் உண்மைத்துறவிகளின் பெருமையையே வேண்டும் என்பது சிறந்தது.

ஒ) *ஒப்புமைப்பகுதி:*

துறவோ விழுமிதே—*வளையா.*, 37

கரியமாலினும் கண்ணுத லானினும்
உரிய தாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமோ ரைந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி உள்ளத்தால்—*கம்ப.*, 1502.

ஓ) *மேற்கோள் பகுதி:*

*காரி.:* பாவிக அலங்காரம் (*மாறன்*,251)

(உக)

## 3.2. துறந்தார் பெருமை துணைக்கூறின்[1] வையத் திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

உரைப்பகுதி:

அ) மணக்.: காம முதலாகத்[2] துறந்தார் பெருமைக்கு அளவு கூறின், உலகத்துப் பிறந்து இறந்தாரை இத்துணையர்[3] என்று எண்ணி அறியலுற்றாற் போலும் எ-று.

இது, பெருமைக்கு எல்லை கூறுதல் அரிதாயினும் சில சொல்லப் புகாநின்றேன் என்றது கருதிற்று.

ஆ) பரிதி.: எ-து காமக்குரோத லோபமோக மத மாச்சரியங் களை[4] யும் துறந்தபேருக்கு உவமைகூறில் பூமியில் இறந்த செனம் எத்தனை உண்டு. அத்தனையும் அறிந்தால் அவர் கள் பெருமை அறியலாம் எ-று.

இ) பரிப்.: ......

ஈ) காளி.: எ-து இங்ஙனம் நீத்தாரது பெருமைக்கு உவமை கூறின் மற்று இவ்வுலகத்தின்கண் துறவாதாராகப் பிறந்து இறந்தாரை எண்ணிக் கொண்ட அவ்வளவிற்று எ-று.

உ) பரிமேல்.: இருவகைப் பற்றினையும் விட்டாரது பெரு மையை இவ்வளவு என்று எண்ணால் கூறி அறியலுறின் அளவுபடாமையான், இவ்வுலகத்துப் பிறந்து இறந்தாரை எண்ணி இத்துணையார் என அறியலுற்றால் போலும்.

முடியாது என்பதாம். கொண்டால் என்னும் வினைஎச்சம் 'கொண்டு' எனத் திரிந்து நின்றது.[5]

காரி.: கொண்டால் என்பது கொண்டு எனத்திரிந்தது. அற்று என்னும் உவமச்சொல் உயர்திணைக்கண் வாராது. அஃறிணைக்கண் செய்யும் என்னும் முற்றாய்ப் போலும் என்றே நிற்கும்.

இராமா.: கொண்டது என்னும் வினையாலணையும் பெயர் கொண்டு என விகாரப்பட்டு நின்றது. எண்ணி

---

1 "விருந்தின் துணைத் துணை"(குறள் 87) என்றாற்போல அளவு என்னும் பொருளில் வந்தது.

2 காமம் முதலாக என்றது காமக்குரோத லோப மதமாச்சரியங்கள் என்க.

3 இத்துணையர்—இவ்வளவினர்

4 இவை பகைக்கூட்டங்களாம். இவற்றை அரிஷட்வர்க்கம என்பர் வடநூ லார்.

5 'கொண்டால்' என்னும் செயின் என்னும் வாய்ப்பாட்டு வினைஎச்சம் கொண்டு என்னும் செய்தென் எச்சமாகத திரிந்துநின்றது.

என்னும் வினைஎச்சத்தை முடித்த அறிவது என்னும் தொழிற்பெயர், சொல் எச்சமாய்க் குறைந்து நின்றது. அளவிடக்கூடாது ஆதலால் 'அது எது போலும்' என்றால் என்பவை இசை எச்சம்; வருவித்துச் சொல்லப்பட்டன.

ஊ) *கவிராசர்.*: ஆசையை விட்டுத் துறந்தவர்கள் பெருமைக்கு உவமை சொல்லப்போனால் வேதசாஸ்திரங்களினாலே சொல்லி முடியாது. பின்னை எப்படி என்றால், ஆசையை விடாமல் சம்ஸாரத்திலே[1] இருந்து இறந்து கெட்டுப் போனவரை நினைத்துக் கொள்ள வேண்டும்.[2]

எ) *பழைய 1*: பூமியிலே பிறந்தார் மெய் வாய் கண் மூக்குச் செவி உண்டாகிலும் தன்செயல் மாண்ட தன்மைபோல, சரீரமும் பிராணனும் இருக்கையிலேயே துறந்தாரது பெருமையின் அளவைக் கூறின் உலகத்து இறந்தாரை எண்ணி அறிந்தாற் போலும்.

ஏ) *பழைய 2*: இருவகைப் பற்றினையும் விட்டு நீங்கினாரது பெருமைக்கு அளவில்லை. அது எப்படி என்னில், இவ் உலகத்தில் பிறந்து இறந்தார்க்கு அளவு உண்டாயின், அவர் பெருமைக்கும் அளவு உண்டு.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

சென்ற குறளில் 'எல்லாப் பொருளையும் துறந்தார்' என்று எழுதிய *மணக்குடவர்*, இக்குறளில் காமம் முதலாகிய ஆறையும் துறந்தார் என்கிறார்.

துறந்த பேருக்கு என்றிருத்தலை விட துறந்தபேரின் பெருமைக்கு என்றிருத்தலே குறளிற்கு இயைபு உடையது ஆகும்.

துறந்தார் சிலரும் துறவாதார் பலருமாகப் பிறந்து இறத்தலின் துறந்தார் பெருமைக்குத் துறவாதாராகப் பிறந்து இறந்தாரை எண்ணிக் காணுகின்ற அளவை உவமை கூறுகிறார் *காளிங்கர்*.

உரையும் பாட்டும் உடையோர் சிலரே
மரையிலைபோல் மாய்ந்திசினோர் பலரே —*புறநா.* 27.

என்ற பாடல் அடிகளையும் இணைத்து எண்ணுக.

---

1 சம்ஸாரம்—உலகியல்.

2 இத்துணையர் என்று எண்ணி அளவிடுதலை ஒக்கும் என்பதாம்.

'இவ்வுலகத்துப் பிறந்து இறந்தாரை எண்ணி அறிந்தது போல' என்பர் *பரிமேலழகர்*. உரையாசிரியர் எவரும் எது முதல் என்று காலங்குறித்திலர். ஆகையால் 'உலகம் தோன்றிய நாள் முதல் இதுவரை பிறந்து இறந்தாரை எண்ணி இவ்வளவினர் எனக்கண்டது போன்று' என்ற விளக்கமும், *பரிமேலழகர்* உரையும் பழைய உரையும் சிறந்தன ஆகலாம். துறவாதாரை எண்ணிக் கொண்டற்று என்று ஒரு சாராரை ஒழித்தல் சிறப்புடையது அன்று.

'கொண்டற்று' என்பது 'கொண்டால் அற்று' என்று, கொண்டால் என்னும் செயின் என்னும்வினைஎச்சம் கொண்டு எனத் திரிந்தது என்றனர் *பரிமேலழகர்*. அதற்கு விளக்கந் தந்தகாரிரத்தினகவிராயர் *பரிமேலழகர்* கூற்றுக்குஅரணாக அற்று என்பது உயர்திணையைக்கொண்டு முடியாது; அஃறிணைக்கண் செய்யும் என்னும் முற்றாய்ப் போலும் என்றே நிகழும் என்றார். 'ஒருவன் எண்ணிக்கொண்டற்று' என முடிக்க வேண்டியிருக்கும். அங்ஙனம் முடிதல் திணைவழுவாம்; ஆதலின், துறந்தார் பெருமை துணைக்கூறின் (அது) இறந்தாரை எண்ணிக்கொண்டாற் போலும் என அமைதி காட்டினர் *காரிரத்தினகவிராயர்*. *இராமாநுசகவிராயர்* கொண்டால் என்னும் வினைஎச்சம் 'கொண்டு' எனச்செய்தெனெச்சமாக மாறுவதேன்? கொண்டு முடியும் வினைச் சொல்லுக்கு ஏற்ப இறந்த காலமுற்று செயவெனெச்சமாக மாறுதல் இயல்பு. அங்ஙனமாய ஏது இல்லாதபோது இறந்தகால வினைஎச்சமாக எதிர்கால வினைஎச்சம் மாறாது எனக்கண்ட *இராமாநுசகவிராயர்* கொண்டதற்று என்பதில் உள்ள 'கொண்டது என்ற வினையாலணையும் பெயர் கொண்டற்று என விகாரமாயிற்று' என்றனர். திரிதல் புணர்ச்சிவிகாரத்தான் விளைவது. விகாரம் என்பது செய்யுளுக்காக ஏதுவின்றி விளைவது. ஆதலால் கொண்டது என்பது கொண்டு என விகாரமாயிற்று என்றனர் போலும்.

அற்று என்பது உவமஉருபு அடியாக வந்த குறிப்பு வினைமுற்று. *காரி*. (*நுண்பொருள்மாலை குறள் 720*).

*வ. உ. சி.* 'கொண்டாலற்று' என்பது 'கொண்டற்று' என்று ஆயது வினைஎச்சத்தொகை என்பர். இப்பெயர் இலக்கண மரபில்லாத புதிய படைப்பு. 'துணைக்கூறல்' தாமத்தர் பாடம் என்பர் *வ.உ.சி.*

ஓ) *ஒப்புமைப்பகுதி:*

*'துறவின் பெருமை'*

வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆதலின்
கைவிட்டனரே காதலர் —*புறநா.* 358:3-5

*'வையத்து இறந்தார்'*

திரையிடு மணலினும் பலரே உரைசெல
மலர்தலை உலகம் ஆண்டு கழிந்தோரே —*மதுரைக்.* 236-7

இறந்தனர் இறந்தகாலத்து எண்ணி இறந்தனர்கள் எல்லாம்
—*யசோதர.* 36

நினைப்பான் புகில்கடல் எக்கரின் நுண்மணலிற் பலர்
ஏனைத்தோ ருகங்களும் இவ்வுலகாண்டு கழிந்தனர்
—*திருவாய்.* 4.1:4

ஓ) *மேற்கோள் பகுதி:*

*'அற்று'*

*இளம்.:* அற்று என்பது உவம உருபாய் வந்ததற்கு (தொல்.பொருள் 282)

*பேரா.:* உவமஉருபு கூறுமிடத்து 'துணைப்ப' என்பதும் 'அற்று' என்பதும் வந்ததற்கு மேற்கோள் (தொல்.பொருள். 286)

*காரி:* அற்று என்னும் உவமஉருபு அடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று பெயர்ச்சொல்லை அடுத்து வந்தமைக்கு (*குறள்* 720, *நுண்பொருள்மாலை*-வட்டாடியற்றே *குறள்* 401 என்பதில் வினைச்சொல்லை அடுத்து வந்தமையும் காண்க )

(உஉ)

## 3.3. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
## பெருமை பிறங்கிற் றுலகு.

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* பிறப்பும் வீடும் என்னும் இரண்டினது கூறு பாட்டை ஆராய்ந்து, இவ்விடத்தே துறவறத்தை மேற் கொண்டவரது பெருமை உலகத்தில் மிக்கது எ-று.

இஃது எல்லாராலும் போற்றப்படும் என்றது.

*ஆ) பரிதி.:* எ-து புண்ணிய பாவத்தின் வழி அறிந்து தன்மத்தின் வழி நின்றார் பெருமையினால்உலகம் விளங்கும்.

இ) *பரிப்.:* —

ஈ) *காளி.:* எ-து கீழ்ச்சொன்ன பரிசே[1] இம்மை மறுமை இரண்டினது குற்றத்தன்மையைத் தெரிந்து, மிக்கிருந்துள்ள அறப்பயனாகிய வீட்டின்பத்தைமேவி உள்ளாரது பெருந் தன்மையையே மிகுத்துக் கூறியது இவ்வுலகம் எ-று.

உ) *பரிமேல்.:* பிறப்பு வீடு என்னும் இரண்டனது துன்ப இன்பக் கூறுபாடுகளை ஆராய்ந்து அறிந்து, அப்பிறப்பு அறுத்தற்கு, இப்பிறப்பின்கண் துறவறத்தைப் பூண்டாரது பெருமையே உலகின்கண் உயர்ந்தது.

“தெரிமாண் தமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்” என் புழிப்போல, ‘இருமை’ என்றது ஈண்டு எண்ணின்கண் நின்றது.[2] பிரிநிலை ஏகாரம் விகாரத்தால் தொக்கது. இதனால், திகிரி உருட்டி உலகமுழுது ஆண்ட அரசர் முதலாயினார் பெருமை பிரிக்கப்பட்டது.

இவை மூன்றுபாட்டாலும், நீத்தாரது பெருமையே எல்லாப் பெருமையினும் மிக்கது என்பது கூறப்பட்டது.

*காரி.:* இருமை ‘ஒருமை’ ‘எழுமை’ போல்[3] எண்ணப்படுபொருள் ஆகாது, இரண்டின் வகை என எண்மாத்திரையாய்நின்று, ‘சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்று ஐந்தின் வகைதெரிவான்’ என்னும் பொருள் பெற்றது. இதற்குச் சொற்சோதனை காட்டிய “தெரிமாண் தமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்” “பரிமா நிரையிற் பரந்தன்று வையை” என்ற பரிபாட்டுப்போல் ஈண்டு எண்ணின் மேல் நின்றது. மையீறுபெற்ற எழுமை ஒருமைபோல் ஈண்டு எண்ணப்படு பொருண்மேல் நில்லாமை காண்க. ‘மூவர் நின்று ஏத்த’[4] என்னும் கோவையாருள் ‘முப்பத்து மும்மைத் தேவரும்’ அது. பெருமையே என்றதனால், பிரிநிலை ஏகாரம் செய்யுள் தொடைவிகாரம். அறுவகைத் தொகையுள் ஏகாரத் தொகை இன்மையால் விகாரம் என்றார். விகாரம் எனினும் செய்யுள் விகாரம் எனினும் ஒக்கும்.

---

1 பரிசு - தன்மை

2 பரிபாடல் பகுதிபோலும். ஆராயப்பட்ட மாட்சிமை உடைய இயலிசை நாடகம் என்னும் மூன்று தமிழை உடைய தெற்கின்கண் உள்ள அழகிய பொதிய வெற்பன் என்பது இதன் பொருள். மும்மைத்தமிழ் என்றாற்போல இருமை இரண்டு என்னும் எண்ணுப் பொருளில் வந்தது.

3 குறள் 126

4 திருக்கோவை 337

ஊ) *கவிராசர்*.: சம்ஸாரம், மோக்ஷம் என்கிற இரண்டினு டைய வகையும் தெரிந்து, ஆராய்ந்து பார்த்து அறிந்து, குற்றமுள்ள சம்ஸாரத்தைக் கெடுக்கிறதற்காக தபசைப் பண ணப்பட்டவர்கள் பெருமை இந்த உலகத்திலே அதிகம்.

எ) *பழைய 1*: புண்ணிய பாவத்தான் உளவாகும் பிறப்பு இறப்பு என்னும் வழி அறிந்து அதன்வழியே நின்றார் பெருமையினாலேயே உலகம் விளங்கும்.

ஏ) *பழைய 2*: பிறப்பு மோட்சம் என்னும் இரண்டினது துன் பங்களை ஆராய்ந்து பிறப்பறுக்க வேண்டி, இப்பிறப்பின் துற வறத்தைப் பூண்டாரது பெருமையே உலகின்கண் உயர்ந் தது.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

இருமைவகை—'பிறப்பு வீடு என்னும் இரண்டினது கூறு பாடு' என *மணக்குடவரும்*, 'புண்ணியபாவத்தின் வழி' எனப் *பரிதியும்* 'இம்மை மறுமை' எனக் *காளிங்கரும்*, 'பிறப்பு வீடு என்னும் இரண்டனது துன்பஇன்பக் கூறுபாடு' எனப் *பரிமே லழகரும்* 'நன்மை தீமையாகிய இருவகைகள்' எனச் *சுகாத்தி யரும்*, *குழந்தையும்* 'உலகியலும் வீட்டுநெறியும்' எனக் *கா. சுப்பிரமணியப்பிள்ளையும்* கூறுவார்கள்.

பெருமை பிறங்கிற்று உலகு என்பதற்குப் 'பெருமை உல கத்தில் மிக்கது' என *மணக்குடவரும்*, 'பெருமையினாலே உல கம் விளங்கும்' எனப் *பரிதியாரும்*, *பழைய உரையாசிரியர் களும்*, 'பெருந்தன்மையையே மிகுத்துக் கூறியது இவ்வுல கம்' எனக் *காளிங்கரும்*, 'அறிவின் பெருமையே உலகின்கண் விளக்கமுற்றது' எனச் *சுகாத்தியரும்*, *வீரமாமுனிவரும்*, 'பெருமையானது உலகத்திலே எல்லாவற்றிலும் உயர்ந்து விளங்கும்' என்று *சுப்பிரமணியபிள்ளையும்*, *நாமக்கல் கவி ஞரும்*, *வ.உ.சி.யும்* கூறுவர். இவற்றுள் பிறப்பு வீடு அல்லது இம்மை மறுமை என்ற உரையே சிறப்புடையது. புண்ணியம் பாவம், நன்மை தீமை எனப் பிறர் எழுதுவனயாவும், இம்மை மறுமை அல்லது பிறப்பு வீடு என்னும் இவற்றிற்குஏதுவாய் இருத்தலால், ஏதுவால் சாதிக்கப்படும் இம்மை மறுமை என் பார் கூற்றே ஏற்புடையது ஆதல் தெளிவு. இருமை வகை தெரிவார் சிலராக, அறியார் பலராக இருப்பினும் சிலருடைய செயல் உலகத்தைக் காத்தலானும்,விளங்குதலானும் பெருமை பிறங்கிற்று என்ற சிந்தனை சிறந்தது.

*பழைய உரை 2* இருமைவகை தெரிந்து என்பதற்கு 'பிறப்பு மோட்சம் என்னும் இரண்டினது துன்பங்களை ஆராய்ந்து'என்றும் கூறும்.மோட்சத்திலும் துன்பம் உண்டா? என்று வினாவப்பெறுதலின் அவ்வுரை ஆய்வுக்குரியதா கின்றது. 'சம்சாரம் மோட்சம் என்கின்ற இரண்டையும் ஆராய்ந்து' எனிலோ மோட்சம் நுகர்தற்கு உரியதாமே அன்றி ஆய்தற்குரியது அன்று ஆதலை எண்ணச் செய்கிறது.

*வீரமாமுனிவர்* இம்மைமறுமையாகிய இருமையின் பல வேறு பண்புகளையும் கருதினால், துறவிகளின் நற்பண்பு களை இவ்வாழ்வில் அறிந்தவர்களின்மாண்பு உலகில் உயர்ந் தது என்பர். துறவியர் பெருமை சிறந்தது என்று சொல்ல வந்த அதிகாரம் அவர்களின் நற்பண்புகளை அறிந்தவரைப் பாராட்டுவதன் வாயிலாகத் துறவியர் பெருமை பேசுவதாக முடிகிறது.

*கா.சு.பிள்ளை* உரைப்போக்கு உலகியலும்-வீட்டு நெறி யும் ஆகிய இரண்டன் ஏற்றத்தாழ்வுகளையும் அறிந்து வீட் டின்பத்தின் உயர்வு கருதித் துறந்தார் பெருமையே உலகத் தில் உயர்ந்து விளங்கும் என்ற கருத்தை வழங்குவதாய் நீத் தாருளும் வீடுகருதி நீப்பாரே உயர்ந்தவர் என்கிறது. ஆத லின் க்கருத்து ஒரு புதுமையும் சிறப்பும் உடையது.

*திரு.வி.க.* 'ஈண்டறம்' என்பதற்குக் கூடிவாழும் அறம் எனப்பொருள் கண்டு *பிங்கலந்தைப்* பகுதியையும், 'ஈண்ட கன் இடக்கை' என்னும் *புறப்பாட்டு* (19-1)ப்பகுதியையும் மேற்கோள் காட்டுவர். அறம் இன்னது என்பதை விளக்கும் போது மனமாசகன்று இயற்கைவழி நின்றொழுகுவோர் என்ப தால்மாசகற்றி வாழும் இல்லறத்தானும் நீத்தார் ஆகக்கருதப் படுவர் என்பதை எண்ணச்செய்கிறது. ஆதலால் இவர்கள் உரை மிக நுனித்து அறியத்தக்கது.

*தண்டபாணியார்* 'இருமை வகை தெரிந்து' என்பதற்கு 'இம்மை மறுமைகளின் கூறுபாட்டை யறிந்து உயர்ந்த துறவை' எனக் *காளிங்கரை* ஒட்டிக் கூறுவர். 'ஈண்டு அறம் என்பதனை வினைத்தொகையாகக் கொண்டு' உயர்ந்த அறமாகிய துறவை மேற்கொண்டார் என வேறு படுவர். இதற்கு. 'கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்' *(குறள்* 356) 'ஈண்டு செலல் மரபின் ஞாயிறு, (*புறநா.* 25) என்ற மேற்கோளுங் காட்டுவர். ஈண்டு என்பதற்கு இல்லற வியலில் எனக்கொள்ளலாம். ஆயினும் அதுதான் கூறாமே பெறப்படுதலின் 'உயர்ந்த' என்பதே ஏற்புடைய உரை என வும் நிறுவி 'இப்பிறப்பில்' இவ்விடத்தே என உரைக்கும்

பரிமேலழகர், மணக்குடவர், பழையஉரை 2 இவர்களையும், பொருள் ஒன்றும் கூறாமல் வாழா 'அறம்' என்பாரையும் பப்பர்.

அதிகார இயைபு நோக்கி 'அறம்' என்பது துறவைக் குறிக்கும் என்னாது அறம் என வாளா உரைப்பார், "அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை'' என்பது கொண்டு இல்லறம் எனவும் கோடல் கூடுமாதலின் அதனை விலக்க ஈண்டறம் பூண்டார் என்றனர் என நயமும் கூறுவர். இதற்குத் 'தலைப்பட்டார் தீரத்துறந்தார்' என்ற குறளைச் சான்று காட்டி அரண் செய்வர்.

இல்லறத்தில் இருந்தே ஈண்டறம் பூணலாகிய பற்றறு தலை மேற்கொண்டு வீடுபெற்றார் பலர் வரலாறுகள் செந் தமிழிலக்கியங்களிற் கேட்கப்படுதலானும், 'தலைப்பட்டார்' என்று அவர்கள் எடுத்துக்காட்டிய மேற்கோள் துறவு பூண்டும் தீரத்துறவாது பற்றிக் கவலைப்பட்டார் மற்றையவர்; தீரத் துறந்தார் தலைப்பட்டார்; என விளக்கவந்ததேயன்றி துற வின் மேன்மை கூற வந்ததன்று ஆகலானும் வள்ளுவர் பொதுவகையில் உயர்ந்த அறம் என்று கூறி நீத்தாரைச் சிறப்பித்தமையை உற்று நோக்குக.

## ஓ) ஒப்புமைப் பகுதி:

வினையெலாம் அறநோற்றவன்—*கம்ப*.481

மும்மை பரிவன்கயிறு கொய்துசெயன் மொய்ம்பால்
தம்மையும் உணர்ந்து தளரக்கண்டு விரைகின்ற
அம்மையினோடு இம்மையை அறிந்துநெறி செல்லும்
செம்மையவர் என்ன நளி சென்ற துரங்கம்—*கம்ப*.918

இருமை நோக்குறுஞ் சான்றவர்—*கம்ப*.2552.

இருமையு நோக்குறும் இயல்பினார்க்கு இது
பெருமையோ—*கம்ப*.4069

## ஔ) மேற்கோள் பகுதி:

*'இருமை வகை'*

*சுப்பிரமணிய.:* இருமை என்பது தன்மையை விளக்காது தன்மையை உடைய பொருளை உணர்த்தி, மைவிகுதி பகு திப்பொருள் விகுதியால் வந்தமைக்கு மேற்கோள் (*பிர யோக*.34)

3.4. *உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்*
*வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* 'வைப்புக்கோர்'—பாடம். அறிவாகிய தோட்டி யானே பொறியாகிய யானை ஐந்தினையும் புலன்களின் செல்லாமல் மீட்பவன், மேலாகிய இடத்தை ஆதற்கு[1] இவ் விடத்தே இருப்பதொரு வித்து எ-று.

பெருமை சொல்லுவார், முற்பட மக்கள் தன்மையனாய் இவ்வுலகின்கண் வாழ்பவன் அல்லன்; தேவருள் ஒருவன் என்று கூறினார்.

*ஆ) பரிதி.:* எ—து அறிவென்னும் தோட்டியால் ஐம்புலன் என்னும் யானையைக் காப்பான் மோட்சம் என்னும் பூமிக் கோர் வித்தாம் எ-று.

*இ) பரிப்.:* ... ...

*ஈ) காளி.:* எ-து ஒருவழிப்பட்ட சித்தத்தின் அறிவு என்னும் அங்குசத்தினால் தமது நெறிக்கு மிகைபடு பொறிகளிற்[2] பர வாமை. ஐவகைப்பட்ட மெய் வாய் கண் மூக்குச் செவி என் கிற ஐம்புலனையும் பாதுகாத்து அடக்கி ஒழுகுவான் யாவன் ஒருவன்? அவனே முத்தி என்கிற முடிந்த நிலத்திற்கு முதற் காரணமாவான் எ-று.

*உ) பரிமேல்.:* திண்மை என்னும் தோட்டியால் பொறிக ளாகிய யானை ஐந்தனையும் தத்தம் புலன்கள் மேல் செல்லா மல் காப்பான். எல்லா நிலத்தினும் மிக்கது என்று சொல்லப் படும் வீட்டு நிலத்திற்கு ஓர் வித்தாம்.

இஃது ஏகதேச உருவகம்[3] திண்மை-ஈண்டு அறிவின் மேற்று. அந்நிலத்திற்சென்று முளைத்தலின் 'வித்து' என் றார். ஈண்டுப் பிறந்து இறந்துவரும் மகன் அல்லன் என்ப தாம்.

---

1 ஆதற்கு-உண்டாதற்கு, தோன்றுதற்கு

2 மிகைபடு பொறி-நெறியில் நெறிக்கண் செல்லும் கண் முதலிய பொறிகள்

3 உரன் என்னும் அறிவைத் தோட்டியாக உருவகப்படுத்தினர் 'ஓர் ஐந்தும் என்று எண்ணல் அளவை ஆகுபெயராகக் கூறிய இந்திரியம் ஐந்தையும் யானைகள் என்று உருவகப் படுத்தாமையின் இச்செய்யுள் ஏகதேச உரு வகம் ஆகும்.

*காரி.*: வித்து என முளைத்தல் ஒப்புமைபற்றி உருவக மாயிற்று; 'வரைவிலா மாணிழையார்'[4] என்னும் குற ளில் 'பூரியர்கள் ஆழும் அளறு' என்பதும் அது. மேல் இவ்வாறு வரும் உருவகமெல்லாம் விரித்து எழுதுவர் என்க.

*இராமா.*: பின்பு அந்தநிலத்திலே போய் முளைப்ப தினாலே காப்பானை வித்து என்றது ஏதுருவக அலங் காரம் என்றும், ஓரைந்தும் என்றது ஏகதேச உருவக அலங்காரம் என்றும் காண்க.

ஊ) *கவிராசர்.*: மனம் என்கிற பலத்தினாலே ஐம்புல னாகிய மெய், வாய், மூக்கு, கண், செவி என்கின்றவற்றை ஆசையின் வழியே போக ஒட்டாமல் அடக்கிக் காக்கிறவனே, எல்லா உலகத்திற்கும் மேலாய் இருக்கிற மோக்ஷ நிலத்திற்கு ஒரு விதையாம்.

எ) *பழைய 1*: அறிவு என்னும் அங்குசத்தினாலே ஐந்து புல னாகிய ஆனையைக் காப்பான் மோட்சம் என்னும் பூமிக்கு ஒருவித்தாம்.

ஏ) *பழைய 2*: 'வைப்புக்கோர்' — பாடம். அறிவு என்னும் அங்குசத்தினாலே சத்தப் பரிச ரூப ரச கந்தம் என்னும் ஐந்து யானைகளையும் ஐம்பொறியின் வழிச்செல்லாமல் காப்பான். எல்லா நிலத்தினும் மிக்கது என்று சொல்லப்படும் வீடு பேறென்னும் நிலத்திற்கு ஓர் விதையாம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

உரன்—அறிவு என உரைகாண்பதில் விளக்க வகையான் சிறிது வேறுபடுவராயினும், *மணக்குடவர், பரிதி, காளிங் கர், பழைய உரையாசிரியர்கள், சுகாத்தியர், சொ.த. மு.வ.* பதின்மரும் ஒத்த கருத்தினராவர். மனஉறுதி அல்லது திண்மை என்பர் முற்கூறியவர் நீங்க, பரிமேலழகர் முதலிய எழுவராவர். 'வைராக்கியம்'என்பர் நாமக்கல்*இராமலிங்கம்.*

'உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை' (600) என்னுமிடத் தில் உரம் அறிவாதல் 'உரன் என்னும் தோட்டியான்' என்ப தனாலும் அறிக என்பர்,*பரிமேலழகர்.* அதனால் ஈண்டும் பரி மேலழகர் அறிவின் திண்மை என்று பொருள்கோடலே கருத் தாதல் தெளிவு.'உரவோர் உரவோராக;மடவம் ஆகமடந்தை நாமே' (குறுந் 20:3-4) 'உரவோர் எண்ணினும் மடவோர் எண்ணினும்' (பதிற்:73: 1) என்பனவும் இப்பொருள் ஆதல் காண்க. வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து என்பதற்கு

இவ்வுலகில் வாழ்பவன் அல்லன் தேவர்களுள் ஒருவன் என்று *மணக்குடவர்* கூறும் உரை வானுறையும் தெய்வத்துள் வைக் கப்படும் என இல்லறத்தானுக்குக் கூறியதைத் துறவிக்கும் உரியதென்பதை நினைப்பிப்பதால் பொருந்தாது. வீடுமோட் சம் என்பன ஓர் இடம் அன்றாயினும் அதனை அங்ஙனம் உரு வகித்தல் இலக்கியமரபு. அங்ஙனமே மணக்குடவர் முதலிய தொல்லாசிரியர் அனைவரும் கூறுகின்றார்கள்.

"அறிவென்னும் அங்குசத்தினாலே சத்த-பரிச-ரூப-ரச-கந்தம் என்னும் ஐந்து யானைகளையும் ஐம்பொறியின் வழிச் செல்லாமல் காப்பான்" என்ற *பழைய உரை* 2 பொறிபுலன் களுக்கு வேறுபாடு அறியாது செல்கின்றது. சத்தம் முதலிய ஐந்தும் புலன்கள், மெய்வாய் முதலியன ஐம்பொறிகள், பொறிகள்—கருவி. அவற்றைக் கருவியாகக் கொண்டு அறி யப்பெறும் அறிவு ஒலியும் உருவும் முதலான ஐந்து. வள்ளு வர் உயிராகிய தலைவன், பொறிகளாகிய யானைகள் ஒலி முதலான புலன்களிற் சென்று மேய்ந்துகெடாதவண்ணம் அறிவு என்னும் தோட்டியான் அவற்றை யடக்கியாள வேண் டும் என்கின்றார். இங்ஙனமே ஏனைய உரையாசிரியர்களும் கூறுதல் காண்க. அங்ஙனமிருந்தும் இவர் மாறிக்கூறுதல் தவறாகும்.

*கவிராசர்*, உரன் என்பதற்கு வலிமை எனப்பொருள் கொண்டு மனம் என்னும் பலத்தினாலே ஐம்புலனாகிய மெய் வாய் கண் மூக்குச் செவிகளை ஆசையின்வழியே போக வொட்டாமல் அடக்கியாள வேண்டும் என்பர். உயிரின் அறிவு வலிமை மனத்தின் பலமாகக் கருதப்பெறுவ தால் போலும் இங்ஙனம் கூறினார். மனம்—அகக்கருவி களுள் ஒன்று. ஆதலால் மனமென்னும் பலத்தினாலே என் றிருப்பினும் மனத்தின் பலத்தால் என்பது கருத்தாகக் கொள்க. ஈண்டும் பொறிகளைப் புலன்கள் என்றது சிந்தித் தற்குரியது. *சுகாத்தியரும்* பொறிபுலன்கட்கு வேறுபாடு காண்கிலர். இங்ஙனம் பொறிபுலன்களுக்கு வேறுபாடறியாது கூறுவாரினும்பொறிகள் யானைகள், புலன்கள் அவை சென்று மேயும் இடமாகிய புலங்கள், அதனால் அழிவன உயிரைப் பற்றியதாய அறிவு; அந்த அறிவு வலிமையுறுதலே உரன் என்னுந்தோட்டி. இத்தோட்டியான் பொறிகளை யடக்கியாள் பவன் வீட்டு நிலத்திற்கு ஒப்பற்ற வித்தாவன் என்ற உரை களே சிறத்தல் ஓர்க. பொறிகள் அறிவற்ற கருவிப் பொருள் கள். உயிர்—அறிவுப்பொருள், அது மனமாகிய அகக்கருவி யைக்கொண்டு பொறிகளையியக்கிப் புலன்களை நுகரும்

அங்ஙனம் நுகராத வண்ணம் தடுப்போரே துறந்தோர். தோட்டியான் என்றதைத் தோட்டியை உடையனாய் என முற்றெச்சமாக்கிப் பொருள் கொள்பவர் *சுகாத்தியர்.*

*திரு.வி.க.* தோட்டி-கதவு. மனஉறுதி என்னும் கதவால் ஐம்பொறிகளாகிய வாயில்களை யடக்கியவரே துறந்தவர். அவரே மேல்உலகத்திற்கு விதைபோல்வார் என்பது ஒரு புதுமையான வரவேற்கத்தக்க உரை. உயர் உணர்வோடு கூடிய மனம் பொறிவழியே சென்று புலன்களைப் பற்றுவ தால் வழியை யடைத்துவிட்டால் மனம் வெளியிற்போக முடி யாதல்லவா. அதனால் இங்ஙனம் கூறினார்.

*சொ.த.* ஓர் ஐந்து எனப் பிரித்து உணர்கின்ற ஐம்பொறி கள் எனப்பொருள் கண்டதும் வள்ளுவர் இறைநிலை கூறார் என்ற முடிவு பற்றியதாகும்.

வரன் என்னும் வைப்பிற்கு—வரந்தரக்கூடிய வலிமைக்கு என்பர் *நாமக்கல் இராமலிங்கனார், மு.கோ.* வைப்புக்கு வலிமை என்ற பொருளில்லாமை கருதியே ஏனைய உரை யாசிரியர்கள் இடம் எனப்பொருள் கொண்டனர். அங்ஙனமே வித்து—இருப்பிடம் எனப் பொருள் கண்டதற்கும் வேறு ஆதாரம் கிடைக்கவில்லை. மேலும் வரந்தரக்கூடிய வலி மைக்கு இருப்பிடமாகையான் என்பர் *மு. கோ.* 'வரன் என் னும் கனிக்கு வித்து' என்று உரைகாண்பர் *வ.உ.சி.* வரன்- முத்தரில் உயர்ந்த நிலையில் உள்ளவன்; வைப்பு என்பதற்கு கனி என்ற பொருள் உண்டு என்பது இலக்கியங்களாலும் நிகண்டுகளாலும் அறியக்கூடவில்லை. தோட்டியார் - தாமத் தர் பாடம். வைப்புக்கோர்—தருமர், தாமத்தர் பாடம் என்பர் *வ.உ.சி.*

'வரன்' என்பதற்கு 'மேலாகிய இடம்'—*சுகாத்தியர், மணக்குடவர்.* மோட்சம் - *பரிதி-காளிங்கர், பரிமேலழகர், பழையஉரை 1,2, கவிராசர், கா.சு.பிள்ளை, சொ.த. மு.வ.*

'வானகம்'—*வீரமா.* மேன்மையுடைய செல்வத்திற்கு. *திரு.வி.க.*

'வரங்கொடுத்தல்'—*நாமக்கல் கவிஞர்;*

'துறவறம் என்னும் சிறந்த நிலம்'—*குழந்தை.*

'வருங்கால இனவாழ்வின் வளர்ச்சி'—*கா.அ.* எனப் பல வேறு வகையில் புத்துரை காண்பாராயினும் மேலாகிய செல் வத்திற்கோ-மேலாகிய இடத்திற்கோ வித்தாதல் துறவிகட்கு

ஏலாதனவாம். மேலான இடம்-தேவராதல் என்பனவும் வேண்டேன் புரந்தரன்மால் அயன்வாழ்வுகள் என்னும் அவர்களால் விரும்பப்பெறாதன ஆகையால் அவ்வுரையும் சிறந்தது அன்று. ஆதலால் மோட்சம்—அல்லது முத்தி என்னும் உரையே துறவிகட்கு வேண்டப்படுதலானும், இவ்வுரை கூறுவார் ஒன்பதின்மர்க்குமேல் உளராதலாலும் இதுவே சிறந்த உரையாகும்.

வரன் வருங்கால இன்பவாழ்வு என்ற பொருளே சிறந்தது என்றும், அதுவே அனைத்தையும் உள்ளடக்கியுள்ளது என்றும், வரன் என்னும் வைப்பு என்பது உரன் என்னும் தோட்டி போல உருவகமே என்றும் கூறுவர் *கா.அ.* வரன் என்பதற்கு அவர்கள் கூறும் பொருள் சொற்பொருளாகாமையும் கருத்துப் பொருளேயாகின்றமையும் காண்க. மேலும் அப்பாத்துரையார் தம் அறிவுத் திட்பத்தால் பிறமக்களின் ஐம்பொறிகளைத் தடுத்து ஆள்பவர் என்று உரை காண்பார்கள். இவ்வுரைக்கேற்ற சொல்லமைதி இல்லாமையும், பிறமக்களின் பொறி எனச் சிலசொல் வருவித்துரைக்க வேண்டியிருப்பதையும் காண்க.

## ஒ) ஒப்புமைப் பகுதி:

***வித்து:***

மறுமைக்கு வித்து—*நாலடி 183*

***ஓரைந்துங்காத்தல்:***

மெய்வாய்கண் முக்குச் செவி எனப்பேர்பெற்ற
ஐவாயவேட்கை அவாவினைக்—கைவாய்க்
கலங்காமல் காத்துய்க்கும் ஆற்றலுடையான்
விலங்காது வீடுபெறும்—*நாலடி 59*

தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கி—*சம்பந்தர், திருக்கே. 1*

முழக்கி எழுவன மும்மத வேழம்
அடக்கி அறிவு எனும் தோட்டியை வைத்தேன்—*திருமந்.* 2034.

புலன்களாகிய பெருங்காட்டில் ஓடித்திரிவனவும், அடக்க ஒண்ணாதனவும் ஆகிய பொறிகள் என்னும் யானைகளை அறிவு என்னும் தோட்டியால் அடக்கி வயப்படுத்த வேண்டும் (சுக்கிர. அத் 1. 98)

*மேற்கோள் பகுதி:*

*'உரன்'*

*பரிமேலழகர்:* உரன் என்னுஞ்சொல் அறிவு என்னும் பொருளில் வந்தமைக்கு மேற்கோள். (*குறள்* 600)

*'உரன் என்னும்......ஓரைந்தும்'*

நிலை தளர்ந்து வீழ்தல் 'உரன்என்னும் தோட்டியான் ஓரைந்துங்காத்து ஒழுகியான், பின் இழுக்குதலாவது கூடா ஒழுக்கத் தன் ஆதல். (*குறள்* 716)

*'உரன்.........வித்து.'*

*நச்சி:* முனிவரை வாழ்த்தியதற்கு மேற்கோள்
(*தொல். செய்.* 109)

*வைத்தி:* ஏகதேச உருவக அணிக்குமேற்கோள்
(*இல. விள.* 64)

*திருப்பாற்கடல்.:* ஏகதேச உருவக அணிக்கு மேற்கோள்
(*முத்துவீரியம்* 1185)

(உச)

3.5. *ஐந்தவித்தா னாற்ற லகல்சும்பு ளிளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* நுகர்ச்சி[1] யாகிய ஐந்தினையும் துறந்தானது வலிக்கு அகன்ற விசும்பில் உள்ளார்க்கு நாயகனாகிய இந்திரனே அமையும் சான்று எ-று.

இந்திரன் சான்று என்றது இல்வுலகின்கண் மிகத் தவம் செய்வார் உளரானால், அவன் தன்பதம் இழக்கின்றானாக நடுங்கும் ஆதலான், இது தேவரினும் வலியன் எ-று.

ஆ) *பரிதி.:* எ-து பொறிவழியிலே புலன் செல்லாமல் தன் வழி மனசு இருப்பானுக்கு[2] இந்திரனே சாட்சி எ-று.

இ) *பரிப்.:* ... ...

*ஈ) காளி.:* எ-து கீழ்ச்சொன்ன பரிசே ஐம்புலனையும் வென்றவன். சித்த வலிமைக்குப் பரந்தவானில் வாழும் தேவர்கட்கெல்லாம் அரசனாகிய இந்திரனே அமையும் சான்று எ-று.

---

1 நுகர்ச்சி-புலன்களால் நுகரப்படுவனவாகிய சுவைமுதலிய ஐந்துமாம்.

2 தன்வழி மனசு இருப்பானுக்கு-மனத்தைத் தன்வயமாக்கி நடத்துவானுக்கு

மற்று இது என் சொல்லியவாறோ எனின் ஈண்டுத் தன் பதங் கருதித் தவம் செய்யும் நீத்தார்மாட்டுத் திலோத்தமை முதலிய தெய்வமகளிரை விடுத்து, மற்று அத்தவம் அழித்தும் தவம் அழியாமை நிலைநிற்கையாலும், தனது பதம் விரும்பாமையாலும் தானே சான்றாய் அமையும் எ-று.

உ) *பரிமேல்.:* புலன்களிற் செல்கின்ற அவா ஐந்தினையும் அடக்கினானது வலிக்கு, அகன்ற வானத்துள்ளார் இறைவனாகிய இந்திரனே அமையும் சான்று.

ஐந்தும் என்னும் முற்றும்மையும், ஆற்றற்கு என்னும் நான்கன் உருபும் செய்யுள் விகாரத்தால் தொக்கன. தான் ஐந்தவியாது சாபம் எய்திநின்று அவித்தானது ஆற்றல் உணர்த்தினான் ஆகலின்[1] 'இந்திரனே சாலுங்கரி' என்றார்.

*காரி:* சாலுங்கரி என்பதற்கு 'மல்லன் மாஞாலங்கரி'[2] என்பதற்கு உரைத்தாங்கு உரைக்க. நிரப்பிடும்மை தானேயும் சாலுங்கரியும்[3] அது. முற்றும்மையும், நான்கனுருபும் செய்யுள்தொடையும் இன்னொலியும் காரணமாக வந்த செய்யுள் விகாரத்தான் தொக்கன.

செய்யுள்விகாரமாவது இன்னொலியும், பதத்துளடிப் பாடும் செய்யுள்தொடையும் நோக்கி வரும். 'அந்நாற் சொல்லும் தொகுக்குங்காலை' என்னும் சூத்திரத்து அறுவகை விகாரமும் தலையிடைகடை குறைத்தல் என்னும் மூவகை விகாரமும் என்க. அது தொல்காப்பியத்துள் நச்சினார்க்கினியர் உரையுள் காண்க. இனிப் புணர்ச்சி விகாரமாவது தோன்றல் திரிதல் கெடுதல் என்க. 'வேற்றுமைத்தொகையே வேற்றுமையியல'[4] என்பது உருபு இருந்தாங்கே தொகுவது. நிலங்கடந்தான், தாய் மூவர், கருப்புவேலி, வரைவீழருவி, நாகர்பலி, குன்றக்கூகை என்பன இவ்ஆறும் நேரே தோன்றத் தொகாது. சாத்தனொடு வந்தான், சாத்தற்குக் கொடுத்தான் என்பன தொக்கால் தொகைப்பொருள் உணர்த்தாது எழுவாயும் பயனிலையுமாயும் நிற்கும். இவ்வாறு

1 இந்திரிய நிக்கிரகஞ் செய்யாத இந்திரன் இந்திரிய நிக்கிரகஞ் செய்துள்ள கௌமத முனிவரது மனைவியாகிய அகலிகையைக் கரவிற்புணர்ந்து, அக் கௌதமரால் "ஆயிரம் மாதர்க்குள்ள அறிகுறி" தனது உடலின் உண்டாகச் சாபம் அடைந்த கதையைக் கம்பராமாயணம் பாலகண்டம் அகலிகைப் படலத்தில் காண்க. "எனைத்துணையராயினும் என்னாம்" என்னும் குறளின் விசேட உரையில்" இந்திரன் போல எல்லாப் பெருமையும் இழந்து சிறுமை எய்தல் நோக்கி என்னாம் என்றார் என்று கூறியிருத்தலும் அறியத்தக்கதாம்.    2 குறள் 245    3 குறள் 1060    4 தொல். சொல். 413

உரைத்தார் நச்சினார்க்கினியரும் என்க. ஈண்டும் இன்னொலி காரணமாக ஆற்றற்கென்று தொக்குநின்று எழுவாய்போல நிற்றல்நோக்கி வேற்றுமைத்தொகையுள் அடக்காது விகாரம் என்றார். 'அறை பறை கண்ணார்'[1] என்பதும் 'பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும்'[2] என்பதனுள் ஒடுவும் அது. செய்யுள் தொடை காரணமாக 'உண்டார்கண் அல்லதடுநறா'[3] என்பதனுள் கண்டார் மகிழ்செய்தலும் தேரான், பிறனைத் தெளிந்தான் வழிமுறையும்[4] எழுவாயும் பயனிலையுமாய் நிற்றல் நோக்கி, விகாரம் என்றது ஆண்டுக் காண்க. 'கம் பஞ் சிவந்த' என்னும் கோவையாருள், 'அரிசிந்துங் கண்ணாள் செம்பஞ்சியின் மிதிக்கின் பதைக்கும் மலர்ச்சீறடி'[5] என்பதற்குத் தொகச்சொல்லாதவிடத்துத் தொக்கு நின்றது என்றார் பேராசிரியரும் என்க. செய்யுள் தொடை தளை விரவாமை முற்றும்மையும் உம்மைத்தொகையுள் அடங்காது என்பது 'இருபெயர் பலபெயர்' என்னும் சூத்திரத்தான் அறிக. இனி இச்செய்யுட்கண் வேற்றுமையும் உம்மையும் உருபிருந்தாங்கே தொக்கன. 'தூதுரைப் பான்'[6] 'வினைஉரைப்பான்'[7] 'வழிஉரைப்பான்'[8] பண்பென இவற்றின்கண்ணும் குடியாண்மையுள் வந்த குற்றம்[9] பொருளாயம்[10] என இவற்றின்கண்ணும் விகாரம் என்னாமை முறையே காண்க.

ஊ) *கவிராசர்*: ஐம்புலன்களையும் ஆசையின் வழியே போகாமல் அடக்கின ஜினனுடைய பெருமைக்குத் தேவலோகத்திலே தேவர்களுக்கு எல்லாம் இராஜாவாய் இருக்கப் பட்ட தேவேந்திரனே கரி[11] பின்னை ஒருவரும் சாட்சி அல்லர்.

எ) *பழைய 1*: பொறிவழியிற் புலன் செல்லாமல் மனத்தின் வழியே செல்பவன் பெறும்பேற்றுக்கு இந்திரன் சாட்சி.

ஏ) *பழைய 2*: சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் என்னும் ஐந்தினையும் அடக்கினானது வலிய பெருமைக்குச் சாட்சி யாரென்னில் அகன்ற வானத்துத் தேவர்களுக்கெல்லாம் இறைவனாகிய இந்திரனே போதும் சாட்சிக்கு.

ஐந்தும் அடக்கிய கௌதமருடைய சாபவலிமையும், அடக்கமாட்டாத இந்திரன் எளிமையும் அறிந்து கொள்க.

---

1 குறள் 1180. 2 குறள் 675. 3 குறள் 1090. 4 குறள் 508
5 திருக்கோவை 209. 6 குறள் 681. 7 குறள் 683.
8 குறள் 688. 9 குறள் 609 10 குறள் 933 11 கரி-சாட்சி

## ஐ) *தொகுப்பும் குறிப்பும்:*

*'ஐந்தவித்தான் ஆற்றல்'*

'நுகர்ச்சியாகிய ஐந்தனையும் துறந்தானது வலிக்கு' —*மணக்.*

'பொறிவழியே புலன் செல்லாமல் தன் வழியே மனசிருப்பவன்' —*பரிதி.*

'ஐம்புலனையும் வென்றவன் சித்தவலிமை'—*காளி.*

'புலன்களிற் செல்கின்ற அவாஐந்தனையும் அடக்கியவன்' *பரிமேல்.*

'பொறிவழியே புலன்போகாமல் மனத்தின்வழியே செல்பவன்'—*பழைய. 1.*

'புலன்களை அடக்கினவன்'—*பழைய 2.*

'ஐம்புலன்களையும் ஆசையின் வழியே போகாமல் அடக்கியவன்' —*கவிராசர்.*

'ஐந்தாசைகளையும் ஒழித்தவன்'—*சுகாத்.*

'ஐம்புலன்களிலிருந்து புறப்படும் ஐந்தாசைகளையும் ஒழித்தவன்'—*வீரமா.*

*'இந்திரனே சாலுங்கரி'*

அகத்தியர் (சாபம்) வெகுண்டு கூறியது—*பரிமேல்.* பூமியிலுள்ளார்கள் மிகத்தவஞ் செய்யின் தன்பதம் இழத்தலைக் கருதி நடுங்குவான் தன்பதங் கருதித் தவம் செய்வார்மாட்டுத் திலோத்தமை முதலிய தெய்வமகளிரை அனுப்பித் தவமழியச் செய்தும், நீத்தார் தவம் கெடாமையாலும், தம் பதம் வேண்டாமையானும், தவஞ்செய்யாமல்—பதவியைக் கட்டிக் காக்கின்ற இந்திரன் சான்றாகிறான் என்று வரலாறு காட்டி நிறுவுவர் *காளி.* கௌதமர் சாபத்தை இந்திரன் ஏற்ற வரலாற்றைப் *பழையஉரை 2* கூறும். 'பாண்டுக்கம்பலம் துளங்கிபதாகலின், என்ற *மணிமேகலையடியும்* இதனை விளக்கும். அங்ஙனமே நூறு பரிமேதவேள்வி வேட்டார் இந்திரபதவி பெறுவர் ஆதலின், வேள்வி முற்றாதவண்ணம் பதவியிலுள்ள இந்திரன் இடையூறு விளைப்பன் என்பதும் புராணவரலாறு. ஈண்டும் உரையாசிரியர் உரைகளிற் சில பொறிபுலன்களுக்கு வேறுபாடின்றி வழங்குவதைக் காண்க.

'இந்திரனே சாலுங்கரி' என்பதற்கு எடுத்துக்காட்டும் வரலாறுகளில் *மணக்குடவர், பரிமேலழகர்* காட்டுவனவே

பொருந்துவதாயுள்ளன. ஏனையோர் காட்டுவனவற்றுள் *காளிங்கர்* வலிந்து பொருத்துவதாலேயே அவ்வரலாறுகள் ஏற்புடையன அன்மையைக் காணலாம். பதவிபோம் என்று கவல்வனாயின் இவன் பதவியும் இங்ஙனம் தவஞ்செய்து ஏற் கனவே உள்ள இந்திரன், இவனைப் போல நடுங்க நேர்ந்த மையின் நேரிய காட்டாகாது.

இக்குறளின் பொருள், விளக்கமானது. ஆயினும் *வள்ளு வர்* கால இந்திரன் யார்? வரலாறு யாது? இந்திரன் தமிழர் தெய்வமாக இருந்து வேதத்தில் இடம் பெற்றவனா? முத லான வரலாறுகளைக் கிரேக்க—ஆரிய—தமிழக வரலாறு களைக் *கா.அ.* ஆய்ந்து, கடைசியாக—இந்திரன்—முகில், முகில்போலத் தீமை நீக்கி நன்மையைச் செய்பவர் ஐந்தவித் தோர். அவர்கள் ஆற்றல் நன்மை பெருக்கலும்—தீமையை நீக்குதலும் எனத் தொனிப்பொருளாகக் கொண்டனர்.

'விசும்பிலார்' தருமர்பாடம் மேலும் 'ஆற்றற்ககல்' தாமத்தர் பாடம் என்பர் *வ.உ.சி.*

## ஒ) *ஒப்புமைப் பகுதி:*

*ஐந்தவித்தல்:*

பொறிவாயில் ஐந்தவித்தான்—*குறள் 6*

ஐந்துபுலங்களைக் கட்டவர் போற்ற
—*சம்பந்தர், புகழி வீழிமிழ. 8*

கசட்டுறு வினைத்தொழிற் கள்வர் ஆயும்
அசட்டர்க ளைவரை யறுவரக்கிய
வசிட்டன்—*கம்ப. 256*

ஐவரை அகத்திடை அடைத்தமுனி—*கம்ப. 388*

தீவினை நயந்து செய்த தேவர்கோன் தனக்குச் செங்கண்
ஆயிரம் அளித்தோன்—*கம்ப. 549*

அந்தணாளர் முனியவும் ஆங்கவர்
சிந்தையாலருள் செய்யவுந் தேவரில்
நொந்து ளாரையும் நோய்தவிர்ந் தாரையும்
மைந்த எண்ண வரம்பும் உண்டாங்கொலோ—*கம்ப. 1503*

துறந்த மாதவர்க்கு அருந் துயரஞ் சூழ்ந்துளோன்— *கம்ப. 2288*

## ஓ) *மேற்கோள் பகுதி:*

*'ஐந்து'*

*காரி:* எண்ணப்படும் பொருள்மேல் நின்றமைக்கு
(நுண்பொருள்மாலை குறள் 1005)

*வைத்தியநாத.:* செய்யுள் விகாரம் ஆறனுள் தொகுத்தல் விகாரத்திற்கு மேற்கோள் (இல.விள.57)

*'அகல்விசும்புளார் கோமான் இந்திரனே சாலும்கரி'*

*சுப்பிரமணிய.:* ஒருபொருள்மேல் பலபெயர்வந்து ஒருவினை கொள்ளும் கர்த்திரு விசேஷணம் (*பிரயோக.* 39) 'அகல் விசும்பிலா' பாடபேதம்)

*சுவாமிநாத.:* சொல் ஒன்றே விதிவினையாயும் மறைவினையாயும் வரும் என்பதற்கு (இல. கொ. 67)

*இராமா :* விதிவினைக்கும் மறைவினைக்கும் பொதுவாக வந்தமை.

*'ஐந்தவித்தான் ஆற்றல்'*

*சிவஞான.:* 'ஐந்தவித்தான் ஆற்றல்' என்புழிப்போல 'போமாற்றிற்கு' என்னும் நான்கனுருபு செய்யுளாதலின் விகாரத்தால் தொக்கது. (*சிவஞான போ.* சூ. 2. அதி3; ஷை சூ. 7. அதி. 3.)

(உரு)

## 3.6. *செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் செயற்கரிய செய்கலா தார்.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* செயற்கு அரியன செய்வாரைப் பெரியோர் என்று சொல்வர்; அவற்றைச் செய்யமாட்டாதாரைத் துறந்தாராயினும் சிறியோர் என்று சொல்லுவார் எ-று.

செயற்கு அரியன—இயமம் நியமம் முதலாயின.[1] இவ்வதிகாரம் நீத்தார் பெருமை என்று கூறப்பட்டதாயினும், துறந்தமாத்திரத்தானே பெரியர் என்று கொள்ளப்படார்; செயற்கரியன செய்வாரே பெரியர் என்று கொள்ளப்படுவர் என்று கூறிற்று.

*ஆ) பரிதி.:* எ-து ஒருவராலும் செயற்கரிய துறவறத்தைச் செய்வார் பெரியர்; சிறியவர் செய்யும் தொழிலாகிய இல்லறமும் செய்ய அறியார் எ-று.

*இ) பரிப்.:* ... ...

*ஈ) காளி.:* எ-து யாவரானும் செய்தற்கரியவாகிய தவநெறித் திறத்தைச் செய்து முடிப்பார் உலகத்துப் பெரியோர்

---

1 கீழ்வரும் பரிமேலழகர் உரை குறிப்பைப் பார்க்க.

என்று சொல்லப்படுவார்; மற்று இவற்றை முயன்று முடிக்க லாகாரே சிறியர் என்று சொல்லப்படுவார் எ-று.

உ) *பரிமேல்.:* ஒத்த பிறப்பினராய மக்களுள் செய்தற்கு எளியவற்றைச் செய்யாது அரியவற்றைச் செய்வார் பெரியர்; அவ்வெளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டா தார் சிறியர்.

செயற்கு எளியவாவன மனம்வேண்டியவாறே அதனைப் பொறிவழிகளால் புலன்களிற் செலுத்தலும், வெஃகலும், வெகுடலும் முதலாயின. செயற்கரியவாவன இயமம் நியமம் முதலாய எண்வகையோக உறுப்புக்கள்[1] நீரிற் பலகான் மூழ்கல் முதலாய நாலிநவழக்கின் தாபத பக்கம்[2] என்பாரும்

---

1 எண்வகை யோக உறுப்புக்கள் - யோகத்திற்கு உரிய எண்வகை அங்கங்கள். அவை இயமம், நியமம், ஆசனம, பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன.

இயமம்: சொல்லாமை, மெய்மை கூறல், திருடாமை, பிறர்பொருட்கண் ஆசையில்லாமை, இந்திரியங்களை அடக்கல் என்னும் ஐந்தும் ஆம்.

நியமம்: தவம், சௌசம். (உடலை நீரினாலும் மனதைச்சத்தியத்தினாலும் தூய்மை ஆக்கல்) தத்துவநூல் ஆராய்ச்சி, பெற்றது கொண்டு மகிழ்தல், தெய்வவழிபாடு என்னும் ஐந்தும் ஆம்.

ஆசனம் (இருப்பு): பத்திரம் (பீஜத்தின்கீழ்ப்பாக நரம்பின் இருபக்கங்களிலும் இருகால் பரட்டையும் சேர்த்து அவ்விரண்டு காலையும் இரண்டு கைகளாலும் இறுகப் பிடித்து அசையாது இருத்தல்). கோமுகம் (சகனபக்கத்தில் பிருட்டபாகத்தில்) இருகாற்பரடடையும மாறவைத்துஅவ்விருகால பெருவிரலகளைக் கரங்களால பிடித்திருத்தல்), பங்கயம் (இரு தொடை மேலும் இரண்டு உள்ளங்காலையும் மாறித்தோன்றவைத்தல), கேசரி (பீஜத்தின் கீழ்ப்பாக நரமபின் இருபக்கங்களிலும் இரண்டு பரடுகளையும் சேர்தது முழந்தாளின்மீது இரண்டு கைகளையும் நன்றாய்ப் பொருந்தும் படி வைத்து அக்கைகளின் விரல்களைச் செவ்வையாய் விரித்து வாய் திறந்துநாக்கை நீட்டிக்கொண்டு மூக்கு நுனியைப் பார்த்திருத்தல்), சுவத்திகம் (தொடைக்கும முழங்காற்கும் இடையே இரண்டு உள்ளங்காலையும செலுத்தி இறுமாந்திருத்தல்) என்னும் ஐந்துமாம்.

பிராணாயாமம்: இரேசகம் - வாயுவை மூக்கின் வலது துவார வாயிலாக விடுதல், பூரகம. வாயுவை மூக்கின் இடது துவாரவாயிலாக உள்ளுக்கு இழுத்தல். கும்பகம் - வாயுவை உள்ளேஅடக்குதல்

பிரத்தியாகாரம்: விஷயங்களில் செல்லாவண்ணம் சகல இந்திரியங்களையும் தடுத்து உள்நோக்கி இழுத்தலாம்.

தாரணை: தைலதாரை போன்று இடைவிடாது அந்தக்கரணம் ஒருவகைப் பட்டு இருத்தலாம்.

தியானம்: கடவுளிடத்துச் செல்லும் அந்தக்கரணத்தின் பிரவாகம் ஆம்.

சமாதி: உண்டாயிருக்கும் சம்ஸ்காரங்(வாசனை)களின் ஒழிவும், அடங்கி இருக்கும் சம்ஸ்காரங்களின் வெளிப்பாடும் உண்டாகி அந்தக்கரணம் ஒரு முகமாய்ப் பரிணமித்து இருத்தலாம்.

இயமம் பத்துவகைப்படும் என்பதும், நியமம் பத்துவகைப்படும் என்பதும் ஆசனம் எண்பத்து நான்குவகைப்படும் என்பதும், பிராணாயாமம் இருவகைப்படும் என்பதும் எண்வகைப்படும என்பதும் பிறவுமாகிய இவற்றின் விரிவை அடயோகப் பிரதீபிகை, திருமந்திரம் முதலியவற்றில் காண்க. 2 தொல் பொருள். புறத். 20.

உளர்[1] அவை நியமத்துள்ளே, நீத்தாரது பெருமைக்கு ஏலாமை அறிக.

*காரி.*: நீர் பலகான் மூழ்கல் முதலாய நாலிரு வழக்கின் தாபத பக்கம் என்பாரும் உளர். அவை நியமத்துள்ளே அடங்குதலின் நீத்தார் பெருமைக்கு ஏலாமை அறிக என்றார். இவ்வாறு உரைப்பதனை வடநூலார் தூடணம் என்பர்.

*ஊ) கவிராசர்*: மனுஷ ஜென்மத்திலே பிறந்தும் செய்கிறதற்கு அருமையாய் இருக்கிற தானம், தருமம், விரதம், தபசு, இவைகளைச் செய்கிறவர்கள் பெரியோர், தானம் முதலிய செய்யாதவர்களும் எளிமையாகிய சம்ஸாரகாரியங்களைச் செய்கிறவர்களும் சிறியர்.

*எ) பழைய 1*: ஒருவரானும் செயற்கரியனவே செய்வார் பெரியர்; சிறியவர் அவ்வாறு செய்யமாட்டார்.

*ஏ) பழைய 2*: ஒத்த பிறப்பினராய மக்களுள் செய்தற்கு அரியவற்றைச் செய்வார் பெரியராவர், எளியவற்றைச் செய்து அரியவற்றைச் செய்யமாட்டார் சிறியராவர்.

எளியன இல்லறம், அரியன துறவறம். இல்லறத்துக்கும் அரியன உள; துறவறத்துக்கும் அரியன உள. அவை தெரிந்து செய்யின் பெரியராவர் என்க. இது துறவறத்தின் எளியனவும் அரியனவும் கூறியது.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*மணக்குடவர்* செயற்கரிய செய்கலாதார் சிறியர் என்பதற்கு அரிய செய்கலாதார் துறந்தோராயினும் சிறியோர்

---

1 நீர் பலகால் மூழ்கல் முதலாய நாலிரு வழக்கின் தாபதபக்கம் என்பதற்கு நீரின்கண பல முறை மூழ்கலும், வெறுநிலத்து உறங்கலும், மான்தோலை ஆடையாகத தரிததலும், சடைதரித்தலும், எரி ஓமபுதலும், ஊர்அடையாமையும், சானகதது உண்டலும், கடவுளைப்போற்றலும் என்னும எண்வகை மார்க்கத்துத தவமபுரியும் கூறு என்று கொள்க இது

"நீர் பலகான் மூழ்கி நிலத்தசை இத் தோலுடீஇச்
சோர்சடை தாழச் சுடரோம்பி-ஊரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத்து உய்க்கும் வழி''

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுளானும், தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியலில் "அறுவகைப்பட்ட பார்ப்பன பக்கமும்" என்னும் சூத்திரத்திலுள்ள "நாலிரு வழக்கின் தாபதபக்கமும்" என்ற அடிக்குள்ள உரையில் நச்சினார்க்கினியர் "நீஇர் ஆடல்நிலக்கிடைகோடல் தோஒல் உடுததல், தொல்எரிஓம்பல், ஊர் அடையாமை உறுசடை புனைதல், காட்டில் உணவு கடவுள் பூசை ஏற்ற தவத்தின் இயல்புஎன மொழிபர்" என்று காட்டிய மேற்கோள் செய்யுளானும் விளக்கமாகக் காண்க.

என்று சொன்னமை சிறந்த கருத்து. விளக்க உரையில் துறவு ஒன்றால் மட்டும் பெரியர் என்று கொள்ளப்படாது. செயற்கு அரியன செய்யவேண்டும் என்கிறார்.

*பரிதி*.: செய்யும் தொழிலாகிய இல்லறமும் செய்ய அறியாதவர் சிறியவர். இதனால், இல்லறம் இயற்றுதற்கு எளிது என்பதும், துறவறம் அரிது என்பதும் பெறப்படும். வள்ளுவர் இல்வாழ்வார், அனைவருக்கும் பயன்படும் வகையையும், அவரவர் நெறியில் இயக்குபவர் இல்வாழ்வாரே என்பதையும், இதனால் எய்தும் பயனை வேறு எந்தப் புற நெறியிலும் பொருந்தமுடியாது என்பதையும் விளக்கும்போது பரிதியார் உரை எங்ஙனம் பொருந்தும்? சிறியவர் செய்யும் தொழிலாகிய இல்லறமும் செய்ய அறியார் என்ற உரையினால், *பரிதியார் 'செயற்கு எளிய செய்கலாதார்'* என்று பாடம் கொண்டு இருப்பரோ என்று தோன்றுகிறது.

துறவறம் இரண்டிலும் உளதாகிலும் துறவறத்து அரியன செய்பவரே பெரியர் ஆவார்.

ஏனைய பிற்கால உரையாசிரியர்கள் அனைவரும் பரிமேலழகரை ஒட்டியே உரை வகுப்பர்.

அரியன எவை? எளியன எவை? என்பதற்குத் தரும் விளக்கத்தில் உரையாசிரியர்கள் சிறிது மாறுபடுகின்றனர்.

*அப்பாத்துரையார்* அரியவற்றைச் செய்ய முயற்சியும் மேற்கொள்ளாதவர்கள் சிறியர் என்ற விளக்கம் நயம்பயப்பதாகும்.

*கி. ஆ. பெ. விசுவநாதம்*, செயற்கு உரிய செய்கலாதார் சிறியர் எனப்பாடந்திரித்து, செய்தற்குரியனவற்றைச் செய்யாதவர்கள் சிறியர் என்பர். இதனால் செம்பொருளும் புதுக் கருத்தும் தோன்றுவதாயினும் பாடந்திரிக்க வேண்டுமே! இக்குறட்பாவின் பழைய உரைப்போக்கு, கூறியது கூறலாகிறது என்பாரும் உளர். முதலடி பெரியார் இலக்கணத்தை உடன்பாட்டு வகையானும், இரண்டாம் அடி எதிர்மறை வாய்பாட்டான் சிறியார் இலக்கணம் கூறியும் பெரியோர் இலக்கணத்தை வலியுறுத்தியது ஆதலின், கூறியது கூறலாகாமை காண்க.

அன்றியும், 'ஞாலம் கருதினும் கைகூடும் காலம், கருதி இடத்தாற்செயின்' என்ற குறட்பாவும் காலங்கருதியிருப்பர் என்ற குறளும் ஒத்த கருத்தினவாய் வேறொருவாற்றான் காலமறிதலை வலியுறுத்துவதைக் காண்கிறோம். அது போலக் கொள்ளலாம்.

*பரிமேலழகர்* 'ஒத்த பிறப்பினராய மக்களுள் என ஒரு தொடர் வருவித்திணைத்து, அரியவற்றைச் செய்வார் பெரியர். அரியவற்றைச்செய்யமாட்டாதார் சிறியர். எளிய செயல்கள் எல்லாரானும் எளிமையிற்செய்யப்பெறுதலில் அவற்றைச் செய்யமாட்டாதார் சிறியர் எனல், பொருளில் கூற்றாய் முடியும்.

அதிகாரம் நீத்தார் பெருமையாதலின் நீத்தாருள் அரிய செய்வார் பெரியர். அவற்றைச் செய்யமாட்டாதார் சிறியர் என்பதே அதிகார இயைபுடையதாய் அவர் பெருமையை விளக்குவதாகும். துறவறவியலில் கூடாஒழுக்கம், புலாலுண்ணாமை முதலியவற்றைப்புகலுகின்ற வள்ளுவருக்குப் பொறியடக்கம் முதலாயினவே அரிய செயல் என்பது கருத்தாதல் காண்க. *பரிமேலழகர்* கூறும் இயமமுதலான யோகவுறுப்புக்கள் பொறியடக்கமும், அதன் பயனாகிய மன ஒருமைப்பாடுமேயாதல் தெளிக.

'செயற்கு அரியன' உற்றநோய்நோன்றல், உயிர்க்குறுகண் செய்யாமை, யான் எனது விடுத்தல் என்பர் வ.உ.சி. பின்னர் இவ்விரண்டையும் தவத்திற்கு உருவாக வள்ளுவர் கூறியிருத்தலின் ஈண்டும் அவற்றை நினைப்பித்தல் வேண்டா.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

அரிய வாயின செய்திட்டு அமரர் துந்துபி அறைந்து
புரிய பூமழை பொழியப் பொன்எயில் மண்டிலம் புதைந்த
விரிகொள் தண்தளிர்ப் பிண்டி மரநிழல் இருந்திரு விலனயும்
பிரியும் பெற்றியை உரைத்தாய் பெரியவர்ப் பெரியவர்ப் பெரியாய்.

—*நீல*. 156

செயற்கரிய பெருவேள்வி ஒருநூறும் செய்தமைத்தான்

—*கம்ப*. 730

இருமை நோக்கி நின்றி யாவர்க்கும் ஒக்கின்ற
அருமை ஆற்றல் அன்றோ அறம் காப்பது—*கம்ப*. 4131

செயற்கரும்செய்கை செய்த தீரனே ஒலம்—*பெரிய*. இயற். 29

## ஓ) மேற்கோள் பகுதி:

*'செயற்கரிய செய்வர் பெரியார்'*

*பரிமேல்*.: 'இக்குறளைக் கொண்டு ஒளியொருவற்கு' (**குறள்** 971) என்பதனை விளக்குகிறார்.

*காரி*: பிறவிப்பெருங்கடல்... (**குறள்** 10) என்னும் குறளில் 'சேர்ந்தார்'என்பது சொல்லெச்சம் ஆதல்போல செயற்கரிய..

சிறியர்' வினைமுதற்கண் பொருள் பெற்று சொல் பெறா மையினை விளக்குதற்கு' (குறள் 10, நுண்பொருள் மாலை)

(உசு)

**3.7.** *சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்*
*வகைதெரிவான் கட்டே யுலகு.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்:* சுவை முதலாகக் கூறிய ஐந்து புலன்களின் வகையை ஆராய்வான் கண்ணதே உலகம் எ-று.

எனவே இவற்றின் காரியம் வேறுஒன்றாகத் தோன்று மன்றே; அதனை அவ்வாறு கூறுபடுத்துக் காணக் காரணம் தோன்றுமாதலால் காரியமான உலகம் அறிவான் கண்ண தாம் என்றவாறு ஆயிற்று.

ஆ) *பரிதி:* எ-து ஐம்புலன் வழியே மனசு போகாமல் காக்கும் அவர்களிடத்திலேயே பெரியோர் இருப்பர் எ-று.

இ) *பரிப்:* இஃது உலகினும் பெரியர் என்றது.

ஈ) *காளி.:* எ-து இவை ஐந்தினது கூறுபாட்டையும் உள்ள படி ஆராய்ந்து அறிவான்கண்ணதே உலகம் என்றவாறு.

உ) *பரிமேல்.:* சுவையும் ஊறும் ஓசையும் நாற்றமும் என்று சொல்லப்பட்ட தன்மாத்திரைகள் ஐந்தனது கூறுபாட்டை யும், ஆராய்வான் அறிவின்கண்ணதே உலகம் என்ற வாறு.

அவற்றின்[1] கூறுபாடாவன — பூதங்கட்கு[2] முதலா கிய அவைதாம் ஐந்தும் அவற்றின்கண் தோன்றிய அப்பூதங்கள் ஐந்தும், அவற்றின் கூறாகிய ஞானேந்திரி யங்கள்[3] ஐந்தும், கன்மேந்திரியங்கள்[4] ஐந்தும் ஆக இருபது மாம். 'வகை தெரிவான்கட்டு' என உடம்பொடு புணர்த்த

1 அவற்றின்-சுதுவ, ஒளி, ஊறு, ஓசை, நாற்றங்களின்
2 பூதங்கள்-மண் நீர், அக்கினி, காற்று, வெளி
3 ஞானேந்திரியங்கள்-அறிகருவிகள், அவை காது, உடம்பு, கண், நாக்கு மூக்கு
4 கன்மேந்திரியங்கள் - தொழிற்கருவிகள்; அவை வாய், கால், கை, குதம் குறி.

தனல்[1] தெரிகின்ற புருடனும், அவன் தெரிதல் கருவியாகிய மான்[2] அகங்காரமனங்களும், அவற்றிற்குமுதலாகிய மூலப் பகுதியும் பெற்றாம். தத்துவம் இருபத்தைந்தனையும் தெரி தலாவது—மூலப் பகுதி ஒன்றில் தோன்றியது - அன்மையின் பகுதியே ஆவது அல்லது விகுதியாகாது எனவும், அதன்கண் தோன்றிய மானும், அதன்கண் தோன்றிய அகங்காரமும், அதன்கண் தோன்றிய தன் மாத்திரைகளும்[3] ஆகிய ஏழும் தத்தமக்கு முதலாயதனை நோக்க விகுதியாலும், தங்கண் தோன்றுவன வற்றை நோக்கப்பகுதியாதலும் உடைய என வும், அவற்றின் கண் தோன்றிய மனமும், ஞானேந்திரியங் களும், கன்மேந்திரியங்களும், பூதங்களும் ஆகிய பதினாறும் தங்கண் தோன்றுவன இன்மையின் விகுதியே ஆவது அல்லது பகுதி ஆகா எனவும் புருடன் தான் ஒன்றில் தோன்றாமை யானும் தன்கண் தோன்றுவன இன்மையானும் இரண் டும் அல்லன் எனவும் சாங்கியநூலுள்[4] ஓதியவாற்றான்

---

1 உடம்பொடு புணர்த்தல் என்னும் உத்தியை வடநூலார் நிபாதம் என்பர். அஃதாவது கூறவேண்டிய பொருளை வெளிப்படையாகக் கூறாது, தான் கூறுவதன் குறிப்பினால் விளங்கச் செய்தல். இவ்உத்தியை நச்சினார்க் கினியர் ஒரு தலை மொழிதல் என்னும் உத்திக்கு இனமாகக் கொண்டு "உடம்பொடு புணர்த்துச் சொல்லுவன அதற்கு இனம் எனப்படும்; என்னை விதி அல்லாதது விதி போல மற்றொரு வழிச்சேறலின்"என்றார். ஈண்டு'சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்ற ஐந்தின் வகை'எனறதனால் சுவை முதலியனவாகிய தன்மாத்திரைகளும, அவற்றின் காரியமாகிய மண் முதலிய பூதங்களும், அத்தன்மாத்திரைகளின் கூறுபாடாகிய ஞானேந் திரியங்களும் கன்மேந்திரியங்களும் ஆகிய இருபது தததுவங்களையும் கூறினாற் போன்று புருடனும் அவன்தெரிதற்குக் கருவியாகிய மான் அகங்காரமனங்களும் அந்த மான் முதலானவற்றிற்குக் காரணமாகிய மூலப்பிரகிருதியும் ஆகிய ஐந்தையும் வெளிப்படையாகக் கூறாது, 'தெரி வான் எனக் கூறியதன் குறிப்பினால் பெறவைத்தமையினால் உடம் பொடு புணர்த்தல் ஆயிற்று. 'சுவை...வகை' என்னும் இருபதையும் உடம் பாக நிறுத்தி, 'தெரிவான்' என்னும குறிப்பினால் அவற்றோடு புருடன் முதலிய ஐந்தையும் புணர் தினமையின், உடம்பொடு புணர்த்தலாயிற்று என்பதும் ஒன்று. இதனை உடம்பொடு புணர்த்தல் எனவும் வழங்குவர்.

2 மான்-புத்தி. 'மகத்' என்னும் தத்துவம் என்பர் வடநூலார்

3 தன்மாத்திரைகள்-ஒக்கும் பூதங்கள்.

இந்த இருபத்தைந்து தத்துவங்களையும்,

'பொங்கு ஐம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியம் ஐம்பூதம்
இங்கிவ் உயிரேய் பிரகிருதி மானாங் கார மனங்களே'

4 என்னும் திருவாய்மொழியானும்(10,7:10)அறியலாம்.

சாங்கியம்-(ஸேச்சுர சாங்கியம்) கடவுட் கொள்கை உடையது, (நிரீசுவர சாங்கியம்)கடவுள் கொள்கை இல்லாதது என இருவகைப்படும். முன்னது கருதம முனிவரின் மகனான கபிலரால் சொல்லப்பட்டது. பின்னதைக் கூறியவர் மற்றொரு கபிலர். உரையாசிரியர் ஈண்டு எடுத்துக்காட்டுவது கடவுட் கொள்கை இல்லாத சாங்கியத்தை. அது இருபத்தைந்து தத்துவங் களை உடையது இவற்றின் விரிவையும் இலக்கணத்தையும் சட்தரிசன சங்கிரகம் என்னும் நூலில் காணலாம்.

ஆராய்தல்[1] இவ்விருபத்தைந்தும் அல்லது உலகு எனப் பிறிது ஒன்றில்லை என உலகினது உண்மை அறிதலின், அவன் அறிவின்கண்ணது ஆயிற்று.

இவை நான்கு பாட்டானும், பெருமைக்கு ஏது ஐந்தவித்தலும் யோகப்பயிற்சியும் தத்துவ உணர்வும் என்பது கூறப் பட்டது.

*காரி.:* தெரிவான் என்பது உடம்பொடு புணர்த்தல் என்னும் தந்திர உத்தி. கட்டு என்பது கண்ணது என ஆறாவதன் உருபு முற்றாயும், காமத்துட் 'பேரமர்க்கட்டு'[2] என்பது கண்ணை உடைத்து என இரண்டாவது விரிக்கும் குறிப்பு முற்றாயும் நின்றது. இதனுள் தத்துவ வகை காண்க.

*இராமா.:* "பூதங்களுக்கு முதலாகியவை தன் மாத்திரைகள் என்று காண்க. என்னவெனின் விரித்த மகதத்துவமும் தன்மாத்திரையும் விளங்கும் சத்தப்பிரகிருதியால் பஞ்சபூதம் உரைத்து அவற்றால் பிரமாண்ட பிண்ட முதலாய உலகு உதயந்தான் பிரமசிருட்டி என்றாராதல் உணர்க".

ஊ) *கவிராசர்:* சுவையை அறியும் நாவும், ஒளியை அறியும் கண்ணும், மேலே தட்டுப்பட்டதை அறியும் உடம்பும், சப்தத்தைக்கேட்கும் காதும், வாசனையை அறியும் மூக்கும் என்று சொல்லப்பட்ட ஐம்புலன்களுடைய வகையை அறிகிறவனிடத்திலே இருக்கும் உலகம்.

எ) *பழைய 1:* ......

ஏ) *பழைய 2:* சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் சத்த, பரிச, ரூப, ரச, கந்தம் ஆகிய பஞ்ச இந்திரிய வகைத் தோற்றமும் ஒடுக்கமும், அதன் மூலப்பகுதியும், விகுதியும், அதன் விரிவாகிய தத்துவங்களும், ஆராய்ந்தறியின் அதுவே உலகம் ஆதலால் அதனை ஆராய்ந்து அதன்வகை தெரிவான் கண்ணே உலகு.

---

1 ஐந்தின் வகை தெரிதலாவது – ஐம்பொறிகளினால் அறியப்படும் பொருள்களுள் எவ்வெவற்றை விடவேண்டும் எவ்வெவற்றைக் கொள்ள வேண்டும என்று அறிதலாம். இதைப் பரமாகமம் அறிந்தார் ஹேயோபாதேய விஷயம என்பர். ஹேயோபாதேயங்களை ஒழுக்கத்தின் மூலம் விளக்கிக் காட்டியுள்ளார். இவ்வாறு ஐம்புலன்களின் வசனந்தெரிந்து ஒழுகுதல் நீத்தாரின் பெருமை என்பது புலப்படும். இக்குறளிற்குப் பரிமேலழகர் சாங்கிய தத்துவத்தை விரித்துக் கூறியுள்ளார். அவர் கூறுவது குறளாசிரியன் கருத்தாதல் அரிது. – கவிராசபண்டிதர்

2 குறள் 1083.

*மல்லர்:* என்பது ருசி பிரகாசம் தண்டிப்பு சத்தம் வாசனை என்கிற ஐம்புலன்களையும் அதற்கடுத்த தத்துவங்களின் வகுப்பையும் ஆராய்ந்து அறிய வல்லவனிடத்திலே இருக் கிறது லோகம் எ-று.

ஐம்புலன்களுக்கு அடுத்த தத்துவங்களாவன பூமி, நீர், தீ, ஆகாசம், காற்று என்கிற ஐம்பூதமும், ஐந்து ஞானேந்திரி யங்களும் ஐந்து கன்மேந்திரியங்களும், இது முதலான தத்து வங்கள் லோகத்திலே உண்டானதெல்லாம் ஐம்புலத்திற்குள் ளேயும் அதற்கு அடுத்த தத்துவங்களுக்கு உள்ளேயும் அடங்கி யிருக்கிறதனாலே இவைகளைக் கண்டறிந்தவன் உண்டா னால் லோகம் எல்லாம் அவனுடைய அறிவின் வசமாச்சுது என்பது கருத்து.

சுவை-ருசி, ஒளி-பிரகாசம், ஊறு-தண்டிப்பு,[1] ஓசை-சத்தம், நாற்றம்-வாசனை, தெரிதல்-அறிதல், கட்டு-(கண் ணது) இடம் உடைத்தது, உலகு-லோகம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*காளிங்கர், மணக்குடவர்* இவர்கள் கருதும் ஐந்தனது கூறுபாட்டையும் அல்லது ஐந்துபுலன்களின் வகையையும் ஆராய்வான் கண்ணதே உலகம் என்ற கருத்துக்கு ஏற்ற விளக்கமாக அமைவது *பரிமேலழகர்* கூறும் விளக்கம். இதனால் *பரிமேலழகர்* ஏனையோர் உரைகளை ஆய்ந்து தெளிந்தவராதலைத் துணியலாம்.

*பரிதியார்* இக்குறளுக்குக் கொண்ட உரைவியப்பானது உலகு-பெரியோர். ஐம்புலன் வழியே மனசு போகாமல் காப்பவர் இடத்திலேயே அதாவது நீத்தவர் இடத்திலேயே உலகு (பெரியோர்) இருப்பர் என்கின்றார். இது ஏனை யோர் உரை போலாது பெரியோர்களை உடைமையால் நீத்தார்க்குப் பெருமை எனக் கற்பிக்கின்றது.

சுவை ஒளி முதலான ஐந்தன் வடமொழிப் பெயர் சத்த பரிச ரூப ரச கந்தம் என்பன. இவை தன்மாத்திரைகள் என்று அழைக்கப்பெறும். இவற்றின் கூறு மெய், வாய் முதலிய பஞ்ச இந்திரியங்கள் தன் மாத்திரைகளிலிருந்து ஐம்பூதங்கள் தோன்றுகின்றன. தோன்றியவாறே ஒடுங்கவும் செய்கின்றன. இவற்றிற்கு எல்லாம் அடியாய் இருப்பது

1 தண்டிப்பு - உடலின்கண் படுதல். அதாவது பரிசம். இப்பொருளில் வழங்கும் உலகவழக்குச்சொல். காலில் தண்டியது என்பன காண்க.

மூலப்பகுதி என்ற ஒன்று. இவற்றிலிருந்து தோன்றுவனவே தத்துவங்கள். காணப்படுகின்ற இந்த உலகம் தத்துவக் கூட்டத்தால் ஆனது. இங்ஙனம் ஆராய்ந்து இதனை அறிபவனே உலகினை உண்மையாக உணர்பவன் ஆவான் என்ற கருத்தை நல்குவதாய்ப் *பரிமேலழகர்* உரை விளங்கு கிறது.

*கவிராசபண்டிதர்* சுவை அறியும் நாவும், ஒளி அறியும் கண்ணும் முதலாகச் சொல்லப்பட்ட ஐம்புலன்களையுடைய வகையை அறிவான் என்பது, பொறிகளின் வகையை அறிவான் என்று பாடம் இருந்தால் நல்லது. நாவும் கண்ணும் முதலாயின பொறியாமே யன்றிப் புலன்ஆகா. ஆதலால் சுகாத்தியர் சுவை முதலாகிய ஐந்திடத்த விகற் பங்களையும் தெரிபவன் இடத்திலேயே துறவு அடங்கி உள்ளது என்கிறார்.

*வீரமாமுனிவர்* சுவை முதலிய ஐந்தையும் அவற்றின் தொடர்புகளாகிய பண்புகளையும் கூர்ந்து கருதுபவன் இடத்திலேயே உலகத்தை முழுதும் பார்க்கலாம் என்கிறார். இதில் சுவை முதலியனவே பண்பாதலின் 'தொடர்புடைய பண்பு' என எவற்றைக் கருதுகிறார் என்ற ஆய்வு தோன்றுகிறது.

ஐம்புலன்களின் மூலத்தை அறிதலாவது அவற்றின் கார ணமாகிய தன்மாத்திரையையும் அவற்றோடு உறவுகொண்ட மூலப்பகுதி வரை உள்ளவற்றையும் ஆராய்தல் என்பர்.

இவ்வுரைகளால் உலகம் காரியப்பாடு உடையது. ஐம் பூதங்களால் ஆக்கப்பெற்றது. பெரியோர் அனைவரும் அதன் தன்மையை உள்ளவாறு உணர்ந்தவர் என்ற கருத்துக்கள் நுவலப்படுகின்றன.

சுவைகளையும் அதன் வகைகளையும் அவற்றை ஆரா யும் முறைகளையும் பற்றிய கருத்துக்களில் அனைவரும் ஒத் துள்ளனர். இங்ஙனம் ஆய்தலின் வகையை சாங்கிய நூலின் கருத்து என்று சொன்னவர் *பரிமேலழகரே*. ஏனையோர் தத் தம் மரபாகக்கொண்டனர்.

இவற்றை ஆய்வதில் மெய்ப்பொருளியல் நூல்கள் பல வும் தம்முள் வேறுபடுகின்றன. அவை அவ்வத்தத்துவநூல் களால் அறியத்தக்கவை.

*அப்பாத்துரையார்* உரை இன வளர்ச்சியையும், அறத் திற்குப் பயன்படும் ஒழுக்கத்துநீத்தாரையும் அடியாகக்

கொண்டு எழுந்ததாகலின், குறட்பாவின் சொல்லமைதி இடந்தாராதாயினும், வருவித்துரைப்பதால் பழைய உரை யாசிரியர் போக்கினின்றும் திசை திருப்புகிறது.

*பாவாணர்* உரை பண்டையோர் உரையைத் தழுவிய தனித்தமிழ் ஆக்கக்கருத்து. *மு.கோ..* உரை, உலகம் என்பது உலகியல்-அரசியல்-பொருளியல் முதலான அனைத்தையுங் குறிப்பது. இவையனைத்தும் ஐந்தன் வகையறிவானாகிய நீத்தான்வழி இயங்கும் எனப்புதுமையும் பழமையும் இணைந்த கருத்தாகிறது.

ஐந்தன் வகை தெரிந்த உண்மைத்துறவியாகிய ஞானி யின் விரிந்த மனம் உலகில் எங்கும் நடக்கிற எல்லாச்செய்தி களையும் அறியுந்தன்மைத்தாதலின் உலகு அவன் அறிவில் உள்ளது என்றார் எனலுமாம்.

சாங்கிய சிந்தனை, சைன பௌத்த சிந்தனைகளின் வளர்ச்சிக்குப்பின் வளர்ந்த இந்திய தத்துவசிந்தனையாம். பொறி-புலன்-பூதம் முதலான வளர்ச்சிகளை வள்ளுவர் பல விடங்களிற் கூறுதலால், *பரிமேலழகர்* இவ்வகைகளைக் கூறும் சாங்கிய சிந்தனையைக் கூறவேண்டியதாயிற்று. ஆனால் இச்சிந்தனைகள் தமிழ்நாட்டில் தமிழ்ச்சான்றோர் கண்ட அறிவியற்சிந்தனையும் சாங்கியன் கூற்றிற்கு மேல்; வித்தியா தத்துவங்கள் சிவதத்வங்கள் வரை வளர்ந்திருத் தலைக் காணலாம். ஆதலால், முற்கூறிய உயர்ந்த நீத்தார் நிலைக்கு எத்தனையோ பங்கு கீழாய் புலன்களிற் கொள்வன கொண்டு தள்ளுவன தள்ளுதல் அவர்கண் மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கநிலையின் முதற்படியாய் அமைதலின் *கவிராசபண்டிதர்* உரையைக்காட்டினும் முற்கூறிய *பரிமே லழகர்* முதலிய பலர் உரை சிறந்தது.

'உலகு', 'உலகியல்'—அவற்றின் கூறுபாடுகளாலான நல்ல பயன்களை அளிக்கும் நல்ல புலன்களும் தீயபயன்களை அளிக்கும் தீயபுலன்களுமாம் என்பர் வ.உ.சி. புலன்கள் இன் பூட்டுவதில் பொதுமையன. அவற்றில் நன்மை தீமை இல்லை. ஆனால் தம்முடைய அல்லாதனவும் நெறி கடந்தன வும் ஆகிய புலன்களின்மேல் பொறிகளைச் செலுத்துவதால் விளையும் பயனே நன்மை, தீமை. ஆகவே நல்லபுலன், தீய புலன் என்பவை சிந்திக்கத்தக்கன. கட்டு என்பதற்கு படைப்பு என்றும் பொருள்கொள்வர். அதுவும் சிந்தனைக்குரியது.

'வகைதெரிவான் கண்ணே உயர்வு'—தருமர் பாடம் என்பர் வ.உ.சி.

*ஒ) ஒப்புமைப்பகுதி:*

உன்னுருவிற் சுவைஒளி ஊறுஓசை நாற்றத்து
உறுப்பினது குறிப்பாகும் ஐவீர் -*அப்பர்*, ஆரூர் 4

ஆமே சுவை ஒளி ஊறுஓசை நாற்றம் தோற்றம்
-*திருவொற்றியூர் ஒருபா* ஒருபது, 9:23

மன்னிய மோகச் சுவை ஒளி ஊறுஓசை நாற்றம் என்று இப்
பன்னிய ஐந்தின் பதங்கடந்தோர்க்கும் —*திருவந்தாதி*, 5

ஐயைஞ் சாகிய தத்துவம் தெரிந்து அறிந்து அவற்றின் மெய்
எஞ்சா வகைமேனின்ற நினக்கு —*கம்ப*. 10199.

*ஒ) மேற்கோள்பகுதி:*

*'சுவை ...... உலகு'*

*பெருந்தேவனார்:* தொகை மிக்கு வந்தமையால் ஓகம் என்னும் உயிரானமைக்கு (*வீரசோ*. 151 உரை)

*நச்.:* தெரிநிலையுடன் கூடிய டகரஉகரம் இடத்து என்னும் பொருண்மைக்கண் 'வகைதெரிவான் கட்டே உலகு' எனவரும். (*தொல். சொல்*. 223)

*கல்லாடனார்:* மேற்படி (*தொல்*. சொல், 223)

*'வகைதெரிவான் கட்டே'*

*சுப்பிரமணிய:* உடைமைப் பொருளில் வரும் குறிப்புவினை விகுதி அஃறிணைக்கண் வந்தமைக்கு (*பிரயோக*. 32)

*'வகை தெரிவான்கட்டே உலகு'*

*சுப்பிரமணிய:* உடம்பொடுபுணர்த்தல் என்னும் உத்தியினை விளக்குதற்கு (*பிரயோக*. 50)

*'சுவை ஒளி ஊறு'*

*இராமா:* நீத்தார் பெருமை அதிகாரத்தின்வைப்புமுறைக்கு

*'சுவை ...... உலகு'*

*திருப்பாற்கடல்:* ஆலேசச் செய்யுள் என்பதற்கு (*முத்து*. 1271)

'ஆலேசம் தொகை யதிகமாகுதல்'

(உஎ)

## *3.8. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டி விடும்.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* நிரம்பிய கல்வியை உடைய மாந்தரது பெரு

மையை அவரால் சொல்லப்பட்டு நிலத்தின்கண் வழங்கா நின்ற மந்திரங்களே காட்டும் எ-று.

இஃது அவராணை நடக்கும் என்று கூறிற்று.

ஆ) *பரிதி.*: எ-து ஐம்புலன் வழியே மனசை விடாமல் காக்கும் உபதேசத்தார்[1] பெருமையை வேதஒழுக்கம் சொல்லும் எ-று.

இ) *பரிப்.*: ... ...

ஈ) *காளி.*: எ-து ஐம்புலன்களையும் அடக்கி, இனியொரு கல்வி கேள்வியும் விரும்புதலின்றி, முத்தி இன்பத்தை முழுது உணர்ந்தமைந்த நீத்தோரது பெருமையை இவ்வுலகத்து வேதங்களும் மற்றுள்ள நூல்களுமாகிய இவை எல்லாம், எடுத்துக்காட்டிய மொழிகளே[2] கூறும் எ-று.

உ) *பரிமேல்.*: நிறைந்த மொழியினை உடைய துறந்தாரது பெருமையை, நில உலகத்தின்கண் அவர் ஆணையாகச் சொல்லிய மந்திரங்கள் கண்கூடாகக் காட்டும்.

நிறைமொழி என்பது அருளிக்கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடும் மொழி. காட்டுதல்-பயனான் உணர்த்துதல்.

*காரி.*: 'அருளினும் வெகுளினும் அவ்வப் பயன்களை பயந்தே விடுமொழி நிறைமொழி. கண்கூடு-பிரத்யக்ஷம். சமயக்கணக்கர் தந்திறம் உரைத்த காதையுள் (மணிமேகலை) சாத்தனாரும், 'உண்மைப்பொருளின் உலகாயதனுணர்வு கண்கூடல்லது கருத்தளவழியும்'[3] என்றமையானும் அறிக.

*இராமா.*: நிறைமொழி மறைமொழி என்பவை இரண்டும் வினைத்தொகைச் சொற்கள் பின்னதை மறையினது மொழி எனக்கொண்டு வேதவசனம் எனினும் பொருந்தும். காட்டுதல் பிரயோசனத்தினாலே அறிவிப்பது. விரைவாகக் காட்டும் என்கிற விரைவுப்பொருள் தோன்றக் காட்டும் என்னாது காட்டிவிடும் என்றார்.

ஊ) *கவிராசர்.*: மெய்யான வசனத்தையுடைய முனீசுவரர்[4] பெருமை(யை) அவர்களாலே சொல்லப்பட்ட சாஸ்திரங்களே

1 உபதேசத்தார்-அறிவுறுத்தத் தக்கவர்கள் அதாவது குருமார்கள்.

2 அவர்கள் எடுத்துக்காட்டிய மொழிகள் என இயைத்துப் பொருள் கொள்க.

3 மணிமேகலை, 73-74.

4 முனீசுவரர்-முனிவர்களின் தலைவர்.

காட்டும். அதெப்படி என்றால், அவர்கள் சொன்ன சாஸ்திரம் பிரத்யக்ஷமான திருஷ்டாந்தமாய்ப் பலிக்கும்; (எ-று).

ஏ) *பழைய 1*: நிறைந்த மொழியினை உடைய துறந்தார் பெருமையை இவ்வுலகத்தின்கண் அவர் ஆணையான் சொல்லிய மந்திரங்களே கண்கூடாகக் காட்டும்.

ஏ) *பழைய 2*: நிறைமொழியினையுடைய துறந்தாரது பெருமைகளை பூமியின்கண் அவர்சொல்லும் மந்திரமொழிகளே கண் கூடாகக் காட்டும்.

## ஐ) தொகுப்பும், குறிப்பும்:

'நிறைமொழி-நிரம்பிய கல்வி' — *மணக்.*

'உபதேசமொழிகள்' — *பரிதி.*

'இனிவேண்டாதவாறு நிறைந்த கல்வியும் கேள்வியும்'
— *காளி.*

'அருளிக்கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப்பயன்களை பயந்தே விடும் மொழி' — *பரிமேல்.*

'சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயக்கச் சொல்லும் ஆற்றலுடையார்' — *பேரா.* (*தொல்.* செய். 178). இங்ஙனம் நிறைமொழி, பொருள் நிறைந்த மொழியாய் இருக்கின்றது; சிறந்தன கொள்க.

பின்னோருள் *கவிராசபண்டிதர்* 'சாஸ்திரங்கள்' எனவும் *வீரமாமுனிவர்* 'தவறாத சொற்கள்' எனவும், *கா. சுப்பிரமணியபிள்ளை* 'தவறாது பலிக்கும் சொல்' எனவும், *திரு. வி. க.* வும் *இராமலிங்கனாரும்* 'வேதவாக்கு' எனவும், *சொ. த.* 'மந்திரங்கள்' எனவும், *குழந்தை* 'மறைமொழிகள்' எனவும், *மு.வ.* 'பயன்நிறைந்த மொழிகள்' எனவும் கூறுவர்.

காட்டிவிடும் என்பதற்குக் கண்கூடாகக் காட்டும் எனத் துணிவுப் பொருளில் வந்தது என்பர் *சொ.த.*

இவை யாவும் ஒத்த கருத்தனவேயாயினும், அவர்கள் சொன்ன சாத்திரம் பிரத்யட்சமான திருஷ்டாந்தமாகப் பலிக்கும் என்ற *கவிராசபண்டிதர்* குறிப்பு 'நாம் நம் அறிவைக்கொண்டு அறியும் காண்டல் அளவையும், அவர்கள் தவவலியாற் கண்டு கூறிய நூலறிவும் சிறிதும் மாறுபடாமல் ஒத்திருக்கும்' என்ற நுண்ணிய கருத்தினதாதலை ஓர்க.

'நிரம்பிய கல்வியை உடையவர்' என்ற *மணக்குடவர்* கருத்து, நிரம்பிய கல்வி மாந்தரனைவர்க்கும் சிறப்பளிக்கும் பொதுமையது ஆகலின், நீத்தார் பெருமைக்கு ஏலாமை துணிக. அங்ஙனமே *காளிங்கர்* கூற்றும்.

சாபமொழியும் — வரமும் என்ற *பரிமேலழகர்* கூற்று *பேராசிரியர்* உரையிலிருந்து உருவாகியது. அதனினும் நீத்தார்க்கே தனிப்பெருமையாய் அமைவதானும், இவ்வுரையும் இக்கருத்தமைந்த ஏனையோர் உரைகளும் சிறந்தன.

மறைமொழி — மந்திரங்கள் என்பர் *மணக்., பரிமேல்., பழைய 1. கவிராசர்.*

'வேதஒழுக்கம்' என்பர் *பரிதி, காளி.*

'அவர்கட்டளை மொழியாகவழங்கும் பொன்மொழிகள்' *சி.இ.*

'மந்திரங்களை எண்ணுதல்' — *குழந்தை.*

'மந்திரமும் - அருளும் - சாபமும் — *பழைய 2.*

இவ்வுரைகளும், ஏன் குறளுங் கூட, நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப என்ற தொல்காப்பியச் சூத்திரத்தை கருத்துட்கொண்டு வந்ததாகலின் மறைமொழி மந்திரமே எனற்கு இடையீடின்று, வேதப்பாக்கள் நிறைமொழி மாந்தர்களாகிய முனிவர்கள் கண்டவை. அவை மந்திரம் என்றே வழங்கப்படுவதையும் சிந்திக்க.

ஒ) *ஒப்புமைப் பகுதி:*

நிறைமொழி மாந்தர் ஆணையிற்கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப —*தொல். பொருள். 490*

ஆங்கவன் வெகுளியும் அறைந்த சாபமும்
தாங்கினர் எதிர்செய்யும் தருக்குஇலாமையால்
நீங்கினர் —*கம்ப. 381*

அந்தணாளர் முனியவும் ஆங்கவர்
சிந்தை யால் அருள்செய்யவும் தேவரில்
நொந்து உளாரையும் நொந்துஉயர்ந் தாரையும்
மைந்த எண்ண வரம்பும் உண்டாம் கொலோ —*கம்ப. 1503*

... ... ... ... ... ... நோன்பினோர்
சொல்லெனப் பிழைப்பிலாச் சூலம் தாங்கினான் —*கம்ப. 259*

தீபமே அனைய ஞானத்து திருமறை முனிவன் செப்பும்
சாபமே ஒத்த தம்பு —*கம்ப. 81*

## ஓ) மேற்கோள் பகுதி:

*பேரா.*: "நிறைமொழி மாந்தர்" என்னும் சூத்திர உரையில் பேராசிரியர் 'சொல்லிய சொல்லின் பொருண்மை யாண்டும் குறைவின்றிப் பயக்கச்சொல்லும் ஆற்றல் உடையாராவார் ஆணையான் கிளக்கப் பெற்றுப் புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லும் சொற்றொடர் எல்லாம் மந்திரம் எனப் படும். அகலத்தில் இக்குறளைக் காப்புத்தமிழ்மந்திரம் எனக் காண்க என்பர். (தொல். பொருள்.490)

*பரிமேல்.*: 'குணம் என்னும் குன்றேறி நின்றார் வெகுளி யைக் காத்தல் அரிது' என்பதற்கு நிறைமொழிமாந்தராக லான்' என இக்குறட்பகுதியைக் காரணமாகக் காட்டுவர் (குறள் 29).

*நச்.*: அமரர்கண் முடியும் அறுவகை வாழ்த்துள் முனிவர் வாழ்த்திற்கு மேற்கோள் (தொல்.பொருள்.81)

பாட்டு மந்திரமாவதற்கும் மந்திரம் அங்கதம் ஆவதற்கும் மேற்கோள் (தொல்.செய்.178)

*காரி*: அந்தணர் ஆணை உடையார் என்பது 'நிறைமொழி மாந்தர் என்னும் குறளின் பொருளைச்சுட்டியது என்பர் (குறள் 30)

(உஅ)

## 3.9. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்த லரிது.

*உரைப்பகுதி*:

*அ) மணக்.*: குணமாகிய மலையை மேற்கொண்டு[1] நின் றார்மாட்டு உளதாகிய வெகுளியால் வரும் தீமையைச் சிறிது பொழுதாயினும் வாராமல் காத்தலரிது எ-று.

நகுஷன் பெரும்பாம்பாயினான். இது வெகுளி பொறுத் தல் அரிது என்றது.

*ஆ) பரிதி*: 'கணமேனும்' — பாடம். எ-து சற்குணம்[2] என்னும் மலையின் உச்சியிலே நின்றார், கோபம் கண மேனும் காக்கமாட்டார் எ-று.

1 மேற்கொண்டு - தாங்கி, சுமந்து.

2 சற்குணம் - நல்லகுணம்.

இ) *பரிப்.:* ......

ஈ) *காளி.:* எ-து ராசத தாமத சாத்துவிகம் என்கின்ற குணங்களும், காமவெகுளி மயக்கம் என்கின்ற குணவிகாரங் களும், அழல்சீதம் இடம் இன்பம் மானம் அவமானம் என்று எண்ணப்படுகின்ற குணமனைத்தின் தொகையுமாகிய குன் றைக் கடந்து வீட்டின்பத்து நிலைநின்றோராகிய நீத் தோரை மற்று அவ்வெகுளியானது தன்மாட்டுச் சிறிது பொழுதுநிறுத்திக் கொண்டு நிற்கமாட்டாது எ-று.

உ) *பரிமேல்.:* துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய குன்றின் முடிவின்கணின்ற முனிவரது வெகுளி, தான் உள்ள அளவு கணமே ஆயினும் வெகுளப் பட்டாரால் தடுத்தல் அரிது.

சலியாமையும்[1] பெருமையும் பற்றிக் குணங்களைக் குன்றாக உருவகம்[2] செய்தார், குணம் சாதி யொருமை[3], அநாதியாய்[4] வருகின்றவாறு பற்றி ஒரோவழி வெகுளி தோன்றிய பொழுதே அதனை மெய்யுணர்வு அழிக்கும் ஆகலின் கணமேயும் என்றும் நிறைமொழி மாந்தர் ஆகலின் காத்தலரிது என்றும் கூறினார். இவைஇரண்டு பாட்டானும் அவர் ஆணை கூறப்பட்டது.

*காரி:* கணமேயும் என்று பாடம் ஓதாது கணமேனும் என்க. 'புறம்குன்றி கண்டனையரேனும்'[5] 'அரம் போலும் கூர்மையரேனும்'[6] 'என்னுடையரேனும் இலர்'[7] 'யாதா னும் நாடாமால்'[8] 'வானம் வறக்கு மேல்'[9] 'செல் லாமைஉண்டேல்'[10] எனப்பெரும்பான்மையும் வருதலான் ஏனும், ஆனும், ஏலும் என்பன ஆயின் என்னும் எச்சம் ஆதலான் அவ்வாறே பாடம் ஓதுக. நிரப்பிடும்பை தானே

1 சலியாமை - அசையாமை அல்லது நடுங்காமை

2 உருவகம் என்றது ஏது உருவகத்தை

3 "சாதி ஒருமையைச் சாத்தியேக வசனம் என்பர். அதாவது ஒருசொல் ஒருமையீறு தோன்ற நின்றும், தோன்றாது நின்றும், பின்ஒருமைப்பன்மை வினைஈறாக மேல்வந்து முடிக்கும் சொற்களும் இன்றித் தானே பன்மைப் பொருள் உணர்த்துவது. ஈறுதோன்றிய சாதி ஒருமையும் ஏறு தோன்றாத சாதி ஒருமையும் என இருதிறப்படும் இருதிணை மருங்கினும் இஃது உரைச்சூத்திரம்" என்றார் பிரயோக விவேகநூலார். ஈண்டுக் கூறியுள்ள குணம் ஈறுதோன்றாத அஃறிணைச் சாதி ஒருமைப்பெயர். இதனை இன ஒருமை என்பர் பிற்காலத் தமிழறிஞர்.

4 அநாதி-தோற்றம் இன்றி அல்லது தொன்று தொட்டு 5 குறள் 277

6 குறள் 997. 7 குறள் 430. 8 குறள். 397 9 குறள் 18.

10 குறள் 1151

யும் சாலுங்கரி[1] என்பதுபோலக் கணமேயும்காத்தல் என்றால்ஏகாரத்தோடு கூடிநின்ற உம்மையாய் அக்கணமும் எனப் பொருள்படுதலால் அது பாடமன்று என்க. குணம் சாதிஒருமை. 'தென்புலத்தார் தெய்வமும்'[2] அது.

*இராமா.:* இது ஏது உருவக அலங்காரம்.

ஊ) *கவிராசர்:* தபசு, சத்தியம், ஆசையில்லாமை முதலிய நல்ல குணமான மலையின்மேலே ஏறி நின்ற முனிவர்களுக்குக் கோபம் வாராது; அந்தக்கோபம் வந்தாலும் அவர்கள் ஆத்மபாவனையில்[3] ஒருவராகி இயலுதலால் ஒரு க்ஷண மாத்திரப்பொழுதும் அதில் பொறுத்திருக்கமாட்டார்கள்; எ-று.

எ) *பழைய 1:* குணம் என்னும்மலையுச்சியிலே நின்றார், எந்த நாளிலும் கோபம் கணப்பொழுதும் கொண்டிரார் என்பதாம்.[4]

ஏ) *பழைய 2:* துறவு, மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய நற்குணங்களாகிய மலை முடியின்கண் நின்ற பெரியோரது வெகுளியை ஒருவன் தன்கண் வாராமல் ஒருகணப் பொழுதாகிலும் அவன் காத்தல் அரிது.

எல்லாக் குணத்தையும் கீழ்ப்படுத்தித் தாம் மேலே ஏறி நின்றவர் கோபத்தைச் சகரர் குமாரர் காக்கப்படாமல் சாம்பலாகியவாறு காண்க.

*மல்லர்:* என்பது எல்லா நற்குணங்களையும் உடைய ஞானம்என்னும் மலையில் ஏறி அதிலே வி(மூ)டாமல் நின்றவர்கள் கோபத்தால் இடுகிற சாபத்திற்கு ஒருகணம் ஆகிலும் தடை பண்ணுதல் அரிது எ-று.

மலையுச்சியில் நிற்கிறவன் மற்ற எல்லாருக்கும் உயர்ந்து நிற்கிறாப் போல—சகல நற்குணங்களாலும் நிறைந்து எல்லார்க்கும் உயர்ந்து நிற்கின்ற ஞானிகளால் ஒருவன் சாபம்

---

1 குறள் 1060. 2 குறள் 43

3 ஆத்மபாவனை-தன்னைத்தான் அறிந்து அனுபவித்தல்.

4 இதன்கருத்து நீத்தாருக்குச் சினமே வராது என்பதாம்.

பட்டதே யுண்டானால் உடனே காலத்தினுடைய பொல்லாப்பு அனுபவிப்பான் என்பது கருத்து.

குன்று-மலை. வெகுளி-கோபம். கணம்-க்ஷணம். காத்தல்-விலக்கல்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

முனிவரது வெகுளி கணப்போதேனும் வெகுளப்பட்டாரால் காத்தல் அரிது என்ற கருத்து உடையார் பரிமேலழகர், மணக்குடவர் இருவரும். பழைய உரையாசிரியரும் பரிதியாரும் கோபம் 'கணப்போதும் நீத்தாரைக் கொண்டிராது' என்பார்கள். இதனையே சிறிது விளக்கமாகக் காளிங்கர் துறந்தோரைக் கோபம் தன்மாட்டுச் சிறிதுபோது நிறுத்திக் கொண்டிராது என்பர். இவ்வுரைகளில் பரிமேலழகர் 'குணம் என்னும் குன்று' என்னும் பகுதிக்கு விளக்கம் கூறுகின்றவர், துறவு மெய்யுணர்வு அவாவின்மை முதலான நற்குணங்களாகியகுன்று என்கின்றார். அவாவின்மை காரணமாக விளையும் காரியம் வெகுளாமை. தீயபிறத்தல் வெகுளியால் வரும். ஆகவே அதனை மறக்க என்பர் வள்ளுவர். ஆகவே அவர்க்கு வெகுளி உண்டாம். அதனை வெகுளப்பட்டாரால் தாங்க இயலாது என்பது நீத்தார் பெருமை என்ற அதிகாரத்திற்கு ஏற்ற பொருள் ஆகாது. ஆகவே துறந்தாரால் வெகுளியைத் தன்மாட்டு வைத்துக்காத்தல் அரிது என்பதோ அல்லது வெகுளி துறந்தோரைத் தன்கண் வைத்திராது என்பதோ ஏற்புடைய சிறந்த உரையாகலாம்.

ஒன்னார்த்தெறலும் உவந்தாரை யாக்கலும் தவத்தின் பயன். தவம் வெகுளாமையாகிய பொறையின் பயன். ஆகவே வெகுளிதோன்ற வேண்டிய இடத்தும் தோன்றாமையே நீத்தார்க்குப் பெருமை தருவது என்பதை நன்கு எண்ணிக்கூறிய உரையாசிரியர்கள் போற்றற்குரியராவர். புதியராகிய சுகாத்தியரும் இக்கருத்தினரே ஆதல் தெளிக. குணமென்னுங் குன்றேறிநின்றார் என்பதற்கு "தவத்தில் சிறந்த முனிவர்களுக்கு வெகுளி தோன்றினாலும் அதனால் அவர்கள் தங்கள் நிலையில் சிறிதும் சலித்தல் இல்லை. அந்த வெகுளியும் ஆத்மனிடத்து அநாதியாய் வருகின்ற கருமவசத்தால் தோன்றுகின்றது. ஆனால் அந்த வெகுளியை அவர்களுடைய மெய்யுணர்வு அழித்தலால் அது உடனே மறைந்துவிடுகின்றது. அத்தகைய வெகுளி சஞ்ஜீவலனக் குரோதம் எனப்படும். அது நீரில் கிழிக்கப்படும் கீற்றுப்போலத் தோன்றிய உடனே மறை

யும் தன்மையுடையது'' இது *கவிராசபண்டிதர்* உரையின் பதிப்பாசிரியர் தரும் விளக்கம்.

'குணம் என்னும் குன்று' என்றதன் விளக்கத்தை 'ஆசிரியன்நிலம், மலை, நிறைகோல், மலர்அன்னமாட்சியனாவன்' என்ற இடத்து

"அளக்கலாகா அளவும் பொருளும்
துளக்கலாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே'

—*நன்னூல்*, பாயிரம் 28

என்ற நன்னூல் நூற்பாயிரத்தானும் அறியலாம்.

'குணம்'—ஒழுக்கம்; கணமேயும் காத்தலரிது—ஒரு கணப்பொழுதும் தாங்கிநிற்றலின்று என்பர் வ உ.சி. இதில் நீத்தார், சினத்தை ஒரு கணப்பொழுதேனும் தாங்கியிரார் என்பதா? நீத்தாரால் வெகுளப்பட்டார் அச்சினத்தை ஒரு கணப்பொழுதேனும் தாங்கி நிற்கார் என்பதா? விளங்கக்கூடவில்லை.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*குணமென்னும் குன்று*

மாயமில் குணக்குன்றன்ன மாதவர்க்கிறைவன் வந்தான்
—*யசோதர*. 23

கோதிலாத குணப்பெருங்குன்றனார் —*பெரிய திருக்கூட்ட*,

அருந்தவ முனிவரோடிருந்த குன்றுபோற் குணத்தான்
—*கம்ப*. 476.

*நீத்தார் வெகுளி கணப்பொழுது:*

கலைவலார் நெஞ்சிற் காமமே போன்றும்
கடவுளார் வெகுளியே போன்றும்
உலைவிலார்நில்லாது ஒருபகல் உள்ளே
உருப்பவிர் வெஞ்சுரங் கடந்தார் —*சீவக*. 2107

அடுங்காலை
நீர்கொண்ட வெப்பம்போல் தானே தணியுமே
சீர்கொண்ட சான்றோர் சினம் —*நாலடி*. 68

பனிவருங் கானிடைப் பழிப்பில் நோன்புடை
முனிவரர் வெகுளியின் முடிபெற்றார் சிலர் —*கம்ப*. மார்ச். 34

ஆங்கவன் வெகுளி......(தாங்கிலாமையான் நீங்கினர்)
—*கம்ப*.381

……… இராமன்
சீறாத உள்ளத்து எழுசீற்ற முகுத்த செந்தீ
ஆறாத முன்னம் அகன்வேலையை யாதுசெய்தான் —*கம்ப*.7013
… … சிறிதுபோது தாமரை நயனம் சேப்ப
ஓங்குநீர் எழு மன்னான் உடலமும் வெந்தவன்றே —*கம்ப*.10387

*வெகுளி காத்தலரிது:*

பொறுப்பர் என்றெண்ணிப் புரைதீர்ந்தார் மாட்டும்
வெறுப்பன செய்யாமை வேண்டும்—வெறுத்தபின்
ஆர்க்கும் அருவி அணிமலை நன்னாட
பேர்க்குதல் யார்க்கும் அரிது —*நாலடி*, 161

அருமையுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமையுடையார் செறின் —*நாலடி*, 164

*வெகுளியே வராது:*

கதமெனும் பொருண்மை யிலர் —*கம்ப*.3860

*வெகுளிஎழும் உடனே அவிப்பர்:*

மறுகி ஏறிய முனிவெனும் வடிவை வெங்கனலை
அறிவெனும் பெரும்பரவையம் புனலினா லவித்தான்—*கம்ப* 5071
வெஞ்சுரம் துறந்த,
மையில் சிந்தையோர் வெகுளியின் தணிந்தது
—*திருவிளை*. பாண்டி சுரந் 64

### ஓ) *மேற்கோள்பகுதி:*

*'குணம் என்னும் குன்றேறி நின்றார்'*

*நச்சர்:* குணங்கட்கு இடனாய் பகை நண்பு இல்லான் எனின் பிறர்க்குள்ளது இவர்க்கு இன்று என்று ஆகும். "குணமென் னும் குன்றேறி நின்றார் வெகுளி" என்றலின் (*சீவக*.3)

*சுப்பிரமணிய:* ஈறுதோன்றா சாதி ஒருமைக்கு(*பிரயோக*.50)

*'வெகுளிகணமேயும் காத்தலரிது'*

**சுவாமி:** வெகுளி கணமேயும் காத்தல் அரிது என்பதற்குக் கணமாயினும் எனப்பொருள் எழுதி வாளா போயினர் என மறுப்பர். (*இல.கொ*. 86)

(உ௯)

## 3.10. அந்தண ரென்போ ரறவோர்மற்[1]
## றெவ்வுயிர்க்குஞ்
## செந்தண்மை பூண்டொழுக லான்.

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* எல்லா உயிர்க்கும் செவ்விய தட்பம்[2] செய்தலை மேற்கொண்டு ஒழுகலானே அந்தணர் என்போரும் துறந்தா ராகக் கொள்ளப்படுவர் எ-று.

மேல் துறந்தவர்களிலும் சிறியார் உளர்என்று கூறினார். இதனானே துறவாதாரினும் பெரியர் உளரென்று கூறினார்[3]. இவை எட்டானும் துறவறத்தின் பெருமை கூறப்பட்டது.

*ஆ) பரிதி.:* எ-து எல்லா உயிர்க்கும் அன்புடையர் ஆதலால் அந்தணர் என்னும் பெயராயிற்று. ஆதலால் அந்தணர் என் போர் அறவோர் எ-று.

*இ) பரிப்.:*......

*ஈ) காளி.:* எ-து உலகத்து அந்தணரென்று சொல்லப்படுவார் யாரெனில் இங்குச் சொன்ன துறவறத்தினை யுடையவர்கள், எவ்வகைப்பட்ட உயிர்க்கும் ஒத்திருக்கும் தண்ணளியை மேவிக் கொண்டு ஒழுகுதலான் எ-று.

இனி மற்று இத்துறவறத்திற்குத் துணைக்காரணமாகிய பொது அறத்தினைத் தொகுத்து உணர்த்துகின்றது மேலை அதிகாரமாகிய அறன்வலியுறுத்தல்.

*உ) பரிமேல்.:* எல்லாவுயிர்கண் மேலும் செவ்விய தண்ணளி யைப் பூண்டு ஒழுகலான் அந்தணர் என்று சொல்லப்படுவார் துறவறத்தில் நின்றவர்.

பூணுதல் விரதமாகக்கோடல். அந்தணர்[4] என்பது அழகிய தட்பத்தினை உடையார் என ஏதுப்பெயர் ஆகலின், அஃது

---

1 மற்று என்பதற்கு உரையாசிரியர் எவரும் உரைகூறாமையால் அனை வரும் அசைநிலையாகக் கருதினர் போலும். ஆசிரியர் வள்ளுவர் பொருள் பயவாச் சொற்களைப் பயன்படுத்தார் என்ற மரபுபற்றி மறற எவ்வுயிர்க் கும்-ஏனைய எல்லா உயிர்க்கும் எனப்பொருள் கொள்ளுதலும் ஆம்.

2 செவ்வியதட்பம்-தீமை சிறிதும் பயவாத கருணை.

3 குணம் என்னும் குன்றேறி நின்றார், என்னும் குறளால் துறந்தார்க்கும் வெகுளி தோன்றுதல்கூடும் எனக் கூறியதால் சிறுமையும் பிறஉயிர்க்குக் கருணை பூண்டார் அனைவரும் அந்தணர் ஆவார் என இக்குறளால் துறவாதாரினும் பெரியர் உளர் என்று பெருமையும் கூறுவதால் புதுவிளக் கம் தருகிறார்.

4 'அந்தத்தை அணவுவார் அந்தணர்'என்றது. "வேதாந்தத்தையே பொருள் என்று மேற்கொண்டு பார்ப்பார்" என்பர் நச்சினார்க்கினியர்-திருமுருகாற்றுப்படை. அணவுதல்-ஆராய்தல்.

அவ்வருளுடையார் மேலன்றிச் செல்லாது என்பது கருத்து. அவ்வாறு ஆணையுடையராயினும் உயிர்கண்மாட்டு அருள் உடையார் என்பது இதனாற் கூறப்பட்டது.

*காரி:* செந்தண்மை—செவ்வியதண்ணளி. அந்தணர்-அழகியதட்பத்தினை உடையார். திருமுருகாற்றுப்படையுள் 'அந்தணர் வேதாந்தத்தை அணவினார்' என்றார் *நச்சினார்க்கினியர்* என்க. அவ்வாறு ஆணையுடையார்-ஆயினும் என்பது 'நிறைமொழிக் குறட் பொருளைச் சுட்டியது.

*இராமா.:* 'அந்தணர் என்பதில் அம்-அழகு. தண்-குளிர்ச்சி; அர்-பலர்பால் விகுதி ஆதலால் நீர் முதலியவற்றின் வெறுக்கத்தக்க குளிர்ச்சியை ஒழித்து அழகிய குளிர்ச்சியர் என நின்று கருணைப் பண்புடையவரை விளக்கும் காரணப்பெயராய் வருதலால் அது எல்லா உயிர்களிடத்திலும் கருணை வைத்தவர் மேலல்லது செல்லாது என்று காண்க.

ஊ) *கவிராசர்.:* எல்லாச் சீவன்களிடத்திலேயும் தயையுண்டாய், கொல்லாமை முதலாகிய தர்மங்களுடையவர்களாய் விரதங்களும் உடையவர்களே அந்தணர் என்றும் பிராமணர் என்றும் சொல்லப்படுவார்; எ-று.

எ) *பழைய 1:* எல்லா உயிர்க்கும் அன்புடையர் ஆதலால் அந்தணர் என்பது பெயராயிற்று. ஆதலால் அன்புடையார் ஆவதே ஒழுக்கம்.

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகுதலால் அந்தணர்; ஆதலால் அவரே அறவோர் எனக் கூட்டுக.

ஏ) *பழைய 2:* எல்லா உயிர்கள் மேலும் செவ்விய தண்ணளி சுரந்து கருணைபூண்டு நடத்தலான், அந்தணர் என்று சொல்லப்படுவார் துறவறத்தின் நின்றோராம்.

அந்தணர்—துறவறத்தை உடையோர். எல்லா உயிர்கள் மேலும் அருள் சுரந்திருத்தலான் எனக் கொள்க.

ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*மணக்குடவர்,* அந்தணர் என்போரும் இல்லறத்தாரே ஆயினும் செந்தண்மை பூண்டு ஒழுகலான் துறந்தோர் ஆவர் என்பர். இவர்கூறும் துறவாதாரினும் பெரியார் உளர் என்ற கருத்துரையால் அந்தணர் துறவாத சாதிப் பெரியாரையே

உணர்த்தியதாகக் கருத நேருகிறது. இதற்குத்துணை செய்வன *பழைய உரையாசிரியர், பரிதியார்* முதலியோர் உரைகள். பிற்கால உரையாசிரியர்கள் அனைவரும் அந்தணர் என்பது சாதிப்பெயர் அல்லாமையைத் தெரிவிக்கின்றனர். *வீரமாமுனிவர்* துறவோரையே குறிக்கும்என்றும், அவர்களே பேச்சுக்கும் காட்சிக்கும் இனியராக நடந்து கொள்வார் என்றும் கூறுகின்றார்.

எங்ஙனமாயினும் அந்தணராவார் அறவோரே எனவும் அறவோரில் செந்தண்மை பூண்டொழுகுபவரே அந்தணர் என்றும், வலியுறுத்தப்பெறுதல் காண்க.

'அறுதொழிலோர் நூன் மறப்பர்' 'மறப்பினும் ஓத்துக் கொளலாகும் பார்ப்பான்' என்ற குறட்பாக்களால் சாதிப் பெயர் பார்ப்பார்; அவர்கட்குரியது அறுதொழில் என்பதாற் சாதியியல்பைச் சாதித்த வள்ளுவர், அந்தணர் என்போர் அறவோர், என்பதால் அந்தணர் என்னும் பெயர்க்குரியார் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகும் காரணத்தால் அறவோரே யாவர் என்பதை விளக்கினர் ஆதலேயன்றி அறவோரில் அந்தணராவர் செந்தண்மைபூண்டு ஒழுகுவாரே என்பதை வலியுறுத்த வந்தவராகாமையைத் தெளியலாம். அன்றியும் இவ்வதிகாரத்திற் கூறிய நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும் என்ற பாவால் நீத்தாரது கட்டளை மொழிகளே மறை என்பதாலும் அறியலாம். ஆரியவழக்கிலும் வேதங்கள் இருடிகள் வாயிலாக வெளிவந்தன என்ற மரபும் அவர்கள் துறந்தாரேயாதலும் தெளிக.

'அந்தணர் என்பர்' நச்சர் பாடம் என்பர் *வ.உ.சி.*

## ஒ) ஒப்புமைப்பகுதி:

*அந்தணர் என்போர் அறவோர்:*

அந்தண்மை பூண்ட அறவோர் ஆகமத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேரும் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியும் சந்தியும் ஆகுதி பண்ணுமே —*திருமந்*. 84

செந்தழல் புரிசெல்வன் திசைமுக முனிசெவ்வே
தந்தன உயிரெல்லாம் தன்உயிரென நல்கும்
அந்தணன் —*கம்ப*. 2109

அறந்தவா நெறி அந்தணர் —*கம்ப*. 2740

ஓ) மேற்கோள்பகுதி:

இராமா: மூன்றாம் வேற்றுமையின் கொண்டு முடியும் சொல் செய்யுளில் முற்பட்டு நின்றமைக்கு. (நன்)

(௩௦)

## நீத்தார் பெருமை அதிகாரத்தில் பண்டை உரையாசிரியர்களின் குறள் வைப்புமுறை

| | ஒழுக்கத்து | துறந்தார் | இருமை | உரன் | ஐந்தவித் | செயற் | சுவை | நிறை | குணமென் | அந்தண |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மணக். | 1 | 2 | 6 | 3 | 5 | 9 | 4 | 7 | 8 | 10 |
| பரிதி. | 1 | 4 | 3 | 6 | 7 | 9 | 5 | 2 | 8 | 10 |
| காளி. | 1 | 3 | 7 | 2 | 5 | 9 | 4 | 6 | 8 | 10 |
| பரிமேல். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |

மூன்றாம் அதிகாரம் 'நீத்தார் பெருமை' முற்றிற்று.

# 4. அறன்வலியுறுத்தல்

அ) *மணக்.*: அறன்வலியுறுத்தலாவது அறம் வலிமை உடைத்து என்பதனை அறிவித்தல், இதனானே அறத்துப் பால் முற்கூறுதற்குக் காரணம் சொன்னாருமாம். இது மேற் கூறிய முனிவரான் கொண்டுய்க்கப்படுதலின் பிற்கூறப்பட் டது.

ஆ) *பரிதி.*: அஃதாவது தன்மத்தின் உறுதியை உரைத்தல்.

இ) *பரிப்.*: … …

ஈ) *காளி.*: … …

உ) *பரிமேல்.*: அஃதாவது அம்முனிவரான் உணர்த்தப்பட்ட அம்மூன்றனுள் ஏனைப்பொருளும் இன்பமும் போலாது அறன், இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனையும் பயத்த லான், அவற்றின் வலியுடைத்து என்பது கூறுதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும். "சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும், அறத்துவழிப்படூஉம் தோற்றம் போல" என்றார் பிறரும்.

*காரி.*: அதிகாரமுறைமை வாசகம் பயத்தலால் அவற் றின் வலியுடைத்து என்பது. அறம் எழுவாய். சுட்டுப் பன்மை—பொருளின்பம். (நுண்பொருள்மாலை)

ஊ) *கவிராசர்*: அஃதாவது—மஹா முனீசுவரர்களாலே சொல்லப்பட்டதாய் இம்மையிலே கீர்த்தியையும் மறுமையிலே மோட்சத்தையும் கொடுக்கப்பட்ட தருமத்தின் நன்மையைச் சொல்லுதலாம்.

எ) *பழைய* /: தருமத்தின் உறுதியை உணர்த்தல்.

ஏ) பழைய 2: அஃதாவது, தருமத்தினது வலிமை தெரியச் சொல்கின்றது.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*கா.சு.:* அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கும் பொதுவாக அறம் எனப்படும். திருவள்ளுவர் நூலின் தொடக்கத்தில் அறம் நுதலும் பொருளைச் சுட்டியுணர்த்துதல் கருதி அறத்தின் மாட்சிமையை இந்த அதிகாரத்திலே வற்புறுத்துகின்றார்.

*திரு.வி.க.:* அறம்-அறன். தீக்குணங்களை அறுப்பது. அறத்தின் வலிமையை அறிவுறுத்தலாம். அறத்தை வற்புறுத்தலுமாம். ஒன்றிய உள்ளத்துடன் அறத்துப்பாலை மக்கள் பயிறல்வேண்டும் என்பது ஆசிரியர் உள்ளக்கிடக்கை.

*சொ.த.:* அஃதாவது அறத்தின் ஆற்றலை அறிவுறுத்தல். அறத்தை வற்புறுத்திக் கூறுதல் எனினும் அமையும். அறவோராகிய நீத்தாரால் உலகியல் நிலைபெறுதலானும், உலகினர்க்கு உணர்த்தப் பெறலானும் நீத்தார் பெருமையின் பின் இது வைக்கப்பட்டது.

*இராம.:* மனிதப் பிறவிக்குக் கடமைகள் என்று சுருதி யுக்தி அனுபவங்களால் கண்டறியப்பட்ட நல்ல காரியங்களைச் செய்ய வேண்டும் என்று வற்புறுத்தல்.

*குழந்தை:* அறத்துப்பாலிற் கூறப்படும் பலவகையான அறங்களையும் பொதுவகையான் சிறப்பித்துக்கூறுதல். பொருளும் இன்பமும் அறத்தின் வழிப்பட்டு நடக்கவேண்டுதலின் இது ஏனையிரண்டற்கும் ஒருவாறு பொதுவாகும்.

*தேவநேயர்:* முனிவர் கூறும் மூன்றனுள் முதன்மையானதும், மக்கள் இருமையின்பம் எய்துதற்கும், உலகம் இனிது நடைபெறுதற்கும் அனைவரும் கடைப்பிடிக்கவேண்டியதுமான அறத்தின் இன்றியமையாமையைக் கூறுதல்.

*சி.இ.:* அறத்தினை வற்புறுத்துதல்.

*கா.அ.:* அறம் கடவுளின் அன்புரு. அவருடைய அறவுருவேதம். அதன் பண்புரு அறம். இவ்வதிகாரம் அறத்துப்பாலின் பாயிரம். அறத்தின் இலக்கணமாக வள்ளுவர் கருத்தாக இவர்கள் கூறுவது பண்புகள் யாவற்றையும் பண்பாக்கும் பண்பே அறம் என்பது. இது வாழ்க்கை வழிமுறை மட்டும் அன்று; வாழ்க்கையின் குறிக்கோள்.

ஆகவே அறன் வலியுறுத்தல் என்பது அறத்தை வற்புறுத்திக்கூறும் வற்புறுத்தலுரை எனப் பொருள்தந்து, வற்புறுத்தல் வாழ்த்துதல் பொருளதாய் அறத்தை வற்புறுத்திக் கூறும் வாழ்த்து எனப் பொருள்படும் என்பர்.

இவற்றுள் கருத்துப் பொருளாகவும், சொற்பொருளாகவும் எழுதிய உரைகள் நீங்க, விளக்கவுரையாக உள்ளவற்றுள் *கா.சுப்பிரணியபிள்ளை* உரைக்கும் மனிதன் அடையும் பேறுகள் நான்குமே அறம் எனப் பெயர் பெறும். அவற்றின் மாட்சிமையுரைப்பது இவ்வதிகாரம் என்பது சிறந்ததாகும்.

அதுபோலவே, 'அறம்' என்பதற்கு *அப்பாத்துரையார்* தரும் வளர்ச்சிமுறை விளக்கமும், வற்புறுத்துதலையும் வாழ்த்தாகக் கூறும் போக்கும் சிந்தனைக்குப் பெருவிருந்தாவன.

*வ.உ.சி.:* 'வலியுறுத்தல் என்பதை இரு சொல்லாகக் கொண்டு வலிமையை வற்புறுத்தல் எனப்பொருள் கொள்வர். 'உறுத்தல்' என்பதற்கே வற்புறுத்தல் என்ற பொருள் உள்ளதா என்பது ஆய்விற்குரியது.

4.1. *சிறப்பீ[1]னுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்*
*காக்க மெவனோ வுயிர்க்கு.*

*உரைப்பகுதி:*

அ) *மணக்.:* முத்தியும் தரும்; செல்வமும் தரும்; ஆதலால் அறத்தின்மேல் உயிர்கட்கு ஆக்கமாவது பிறிது இல்லைஎ-று.

இது பொருளான் ஆக்கம் உண்டு என்பாரை மறுத்து அறன்வலியுடையது என்று கூறிற்று.

ஆ) *பரிதி.:* எ-து மறுமைக்குச் சிறப்பாகிய முத்தியும் இம்மைக்குச் சிறப்பாகிய செல்வமும் தரும் தன்மத்திலும் சிறந்த தெய்வம் ஏதோ? என்றவாறு.

இ) *பரிப்.* ......

ஈ) *காளி.:* எ-து அறமானது இவ்வுலகத்து நுகர்ச்சி இன்பக் காரணமாகியசெல்வத்தையும் தரும். மற்ற உலகத்து நுகர்ச்சி இன்பக்காரணமாகிய தேவர் பதத்தையும் தரும். அதனால் மற்று இவ்வறத்தின் மேலாய் அழியாது நிற்கும் பொருள்

1 சிறப்பு என்னும் செம்பொருள் (358)வீட்டிற்கு நிமித்த காரணமாயசெவ்விய பொருள் நச்சினார்க்கினியர் சிறந்தது பயிற்றல் என்பதற்கு அறம் பொருள் இன்பத்தில் சிறந்த வீட்டின்பம் என உரைகாண்பர்.

யாதோ? இவ்எழுவகைப் பிறவி[1]யினும் சிறந்த மானிடரா யினார்க்கு என்றவாறு.

உ) *பரிமேல்.*: இ—ள். வீடுபேற்றையும் தரும், துறக்கம் முதலிய செல்வத்தையும் தரும். ஆதலான் உயிர்கட்கு அறத்தின் மிக்க ஆக்கம் யாது?

எல்லாப் பேற்றினும் சிறந்தமையின், வீடு சிறப்பு எனப் பட்டது; ஆக்கம் தருவதனை ஆக்கம் என்றார்.[2] ஆக்கம் மேன்மேல் உயர்தல். ஈண்டு உயிர்என்றது மக்கள் உயிரை, சிறப்பும் செல்வமும் எய்துதற்கு உரியது அதுவேயாகலின். இதனால் அறத்தின் மிக்க உறுதி இல்லை என்பது கூறப் பட்டது.

*காரி*: ஊங்கு—மிகை

ஊ) *கவிராசர்*: இம்மையிலே கீர்த்தியையும் செல்வத்தை யும் கொடுத்து மறுமையிலே மோக்ஷத்தையும் கொடுக் கிறது தருமம். ஆனபடியினால் அந்தத்தருமத்தைப் பார்க் கிலும் அதிகமான பொருள் இந்த உலகத்திலே இல்லை (எ-று).

எ) *பழைய 1*: மறுமைக்குச் சிறப்பாகிய முத்தியும், இம்மைக் குச் சிறப்பாகிய செல்வமும் தரும் தருமத்தினும் செல்வத் தினும்தருமமே தெய்வம்.

ஏ) *பழைய 2*: மோட்சமும் தரும்; சுவர்க்கம் முதலாய செல்வத்தையும் தரும்; ஆதலான் அறத்தின் மிக்க செல்வம் யாது?

## ஐ) *தொகுப்பும் குறிப்பும்:*

சிறப்பு—செல்வம் என்பன சார்வாலும்—இடத்தாலும் பல பொருளைக் குறிக்கும் பொதுப்பெயர். ஆதலால், இவ் விரு சொற்கும் *மணக்குடவர்* 'முத்தி செல்வம்' எனப்பொருள் கண்டனர்.

*பரிதியார்*, அவர் கூறும் பொருளையே கருதினாலும், மறுமைக்குச் சிறப்பாகிய முத்தியையும், இம்மைக்குச் சிறப் பாகிய செல்வத்தையும் என ஏதுவுங் காட்டி விளக்கந் தருவர்.

1 எழுவகைப் பிறவி: ஊர்வன, மானுடம், நீர்வாழ்வன, பறவை, விலங்கு, தேவர், தாவரம் என்பன.

2 இது உபசார வழக்கு.

*காளிங்கர்.* 'இவ்வுலகத்து நுகர்ச்சி இன்பக்காரணமான செல்வம், மற்ற உலகத்து நுகர்ச்சி இன்பக்காரணமான தேவர் பதம்' என்பர்.

*பழைய 1,2:* 'சிறப்பு—மோட்சம் என்னும். மற்றொன்று சுவர்க்கம் முதலிய செல்வத்தைத்தரும்' என்னும்.

*கவிராசபண்டிதர்* 'கீர்த்தி—செல்வம் தரும் என்றும் மறு மைக்கு மோட்சம் தரும்' என்றும் கூறுவர்.

*திரு.வி.க.* சிறப்பீனும் அறம், செல்வமும் ஈனும் அறம் என 'ஈனும்' என்பதைப் பெயரெச்சமாகக் கொண்டு அறத் தொடு கூட்டிப் பொருள் காண்பர்.

*சுகாத்தியர்* 'ஆக்கம்—உயர்ச்சி' என்பர்.

*வீரமாமுனிவர்* 'மறுமைக்கும் இம்மைக்கும் மகிழ்ச்சியை ஈன்றெடுக்கும்' என்பர்.

ஏனைய உரையாசிரியர்கள் சிறப்பு-வீடு; செல்வம்—பொருள்; என்பார்.

*குழந்தையும், மு.வ.*வும் 'மதிப்பு அல்லது சிறப்பு' என் பார்.

*வ.உ.சி.* 'செல்வமும் ஈனும்' என்பதில் உம்மையை இறந்தது தழீஇய எச்சவும்மையாகக் கொண்டு வீட்டினைத் தருதலே அன்றிச் செல்வத்தையும் கொடுக்கும் என முன் கூறிய வீட்டினைத்தழுவி நின்றது என்பர். இதில் 'இன்பமும் புகழும் தரும் செல்வம்' என்ற விளக்கம் நயமான பகுதி. மேலும் இன்பமும் புகழும் தரும் செல்வத்தோடு வீட்டைத் தரும் செல்வத்தையும் அறம் கொடுக்கும். வீட்டைத்தரும் செல்வமாவது ஞானம் என்ற அவர் கருத்துரை சிறப்பானது.

*கோ. வரதராசபிள்ளை.* சிறப்பு-இன்பம் எனப் பொருள் காண்பர். அறம் பொருள் இன்பம் என்று உடன்வைத்தோதப் படும் மூன்றில், செல்வப்பயனாகிய இன்பத்தை முன்னும் செல்வத்தைப் பின்னும் வைத்து ஓதுதலாற் சிறப்புயாது என்று எண்ணத் தோன்றுகிறது. 'அறத்தினூஉங்கு ஆக்கம்' எனவும் 'அறத்தான் வருவதே இன்பம்' எனவும் பின்வருத லின் இவர்கள் எழுதியிருக்கலாம்.

ஆகவே மறுமைப்பயன் என்று கருதாது, இம்மைக்கே உரியனவாகிய நன்மதிப்பைத் தரும் என்னும் உரையும், பொருளல்லவரையும் பொருளாகச் செய்யும் பொருளையும் தரும், என்னும் உரையும் உலகியல் நிலைக்கு ஒத்தனவே

ஆயினும், இருமைக்கும் பயன்தரும் அறத்தை இம்மையள வில் பயன்தரும் என்றலானும் *வள்ளுவர்* இருமை வகை தெரிந்து 'வாழ்நாள்வழியடைக்குங்கல்' 'பேர்த்துள்ள வேண்டா பிறப்பு' முதலாகப் பலவிடங்களில் மறுமை, வீடு முதலியவற்றைக் கூறுதலானும், அத்துணைச் சிறப்பின் றாதலை ஓர்க.

அன்றியும், 'யான் எனது என்னும் குறளான் வீடுபேறு எய்துதலை *வள்ளுவரே* யுணர்த்துவதால், பண்டையோர் உரையோடு 'சிறந்தது பயிற்றல்' என்ற *தொல்காப்பியப்* பகுதியையும், அதற்கு *இளம்பூரணர்* முதலாயினார் தரும் உரையையும் எடுத்துக்காட்டி 'வீடு' என்பதே சிறந்த பொருள் எனக்கூறும் *தண்டபாணியார்* உரையும் இதற்கு அரணாதல் காண்க. ஆக்கம் என்பதற்கு 'நிறைவாழ்வளிக்கும் பண்பு' என்றும், 'சிறப்பு—புகழ் என்றும், செல்வம்—சமுதாய வாழ் விற்குத் தேவையான பொருள்' என்றும் கூறுவர் *கா. அ.*

'சிறப்பு — வீடுபேறும், சொர்க்க இன்பமும் ஆகிய இரண்டும்' என்பர் பாவாணர். பெருமை என்பர் *சி. இலக்கு வனார்.*

## ஒ) *ஒப்புமைப்பகுதி:*

*முற்றும்:*

சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்
அறத்துவழிப்படூஉம் தோற்றம் போல —*புறநா.* 31:1-2

மூன்று உலகிற்கும் ஆக்கி முடிவிலாத் தன்மை நல்கும்
ஆன்றநல் அறத்தைப் போலும் அரியது ஒன்றில்லை என்றான்
—*மேருமந்.* 117

விதியினால் கதிகள் நான்கின் மேவினின் றார்கள் தம்முள்
மதியினால் பெரிய நீரார் மக்களாய் வந்து தோன்றி
விதியினால் தானம் பூசை மெய்த்தவம் செய்து வீட்டைக்
கதிகளைக் கடந்து செல்வார் —*மேருமந்.* 737

முன்புநின்று இசைநிறீஇ முடிவு முற்றிய
பின்புநின்று உறுதியைப் பயக்கும் பேரறம் —*கம்ப.* 1957

தருமம் என்று ஒருபொருள் தந்துநாட்டுதல்
அருமை என் பதுபெரிது அறிதி ஐயநீ —*கம்ப.* 2337

அருள்தரும் திறத்து அறன் அன்றி வலியது உண்டாமோ
—*கம்ப.* 3059

உலைவிலாவகை உழந்த தருமம் என நினைத்தளலாம்

உதவும் தச்சன் —கம்ப. 3165

நிரக்கும் பொருட்குவை யாவையும் நீர்நினையாத எல்லாம்
கரக்குஞ் சுரபிகண்டீர் பிண்டிநாதன் றன்தொல்லறமே
—திருநூற்.37

ஓ) மேற்கோள் பகுதி:

'சிறப்பீனும்.........உயிர்க்கு'

காரி: பாவிக அணிக்கு (மாறன்.251)

'அறத்தினூஉங்கு.........உயிர்க்கு'

சுப்பிரமணிய: புரோவாதத்தினை விளக்க (பிரயோக.50)

'சிறப்பீனும்'

சுவாமிநாத: புரோவாதத்தினை விளக்க (இல.கொ.7)

திருப்பாற்கடல்: தொழில் தன்மை அணிக்கு (முத்து.1155)

(௩க)

4.2. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு.

உரைப்பகுதி:

அ) மணக்.: 'மறத்தலினூங்கில்லையாங்கேடு' என்பது பாடம். (தாமத்தர் பாடமும் இதுவே என்பர் வ. உ. சி.) ஒருவனுக்கு அறம் செய்தலின் மேற்பட்ட ஆக்கமும் இல்லை; அதனைச் செய்யாமையின் மேற்பட்ட கேடும் இல்லையாம் எ-று.

இஃது அறம் செய்யாக்கால் கேடுவரும்என்று கூறிற்று.

ஆ) பரிதி.: தருமத்தினும் ஆக்கம் இல்லை; தருமத்தை மறப்பது போலக் கேடும் இல்லை என்றவாறு.

இ) பரிப்.:......

ஈ) காளி.: எ-து அறமானது இன்பம் பயக்கும் ஆதலால் ஒருவர்க்கு இவ்வறத்தின் மேலாய் இருப்பதொரு பேறும் இல்லை. மற்றிதனை மறத்தலின் மேலாய் இருப்பதொரு கேடும் இல்லை என்றவாறு

உ) பரிமேல்.: ஒருவனுக்கு அறம் செய்தலின் மேற்பட்ட ஆக்கமும் இல்லை; அதனை மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடும் இல்லை.

அறத்தினூஉங்கு ஆக்கமும் இல்லையென மேற்சொல்லியதனையே அனுவதித்தார்,[1] அதனால்[2] கேடுவருதல் கூறுதல் பயன்நோக்கி. இதனால் அது[3] செய்யாவழிக் கேடுவருதல்கூறப்பட்டது.

*காரி.*: அநுவாதம் காண்க. ''நாடென்ப நாடாவளத்தன''[4]வும் அது. 'இருதிணை மருங்கின் ஐம்பாலறிய'[5] என்னும் சூத்திரத்துள் *நச்சினார்க்கினியரும்* இவ்வாறு உரைத்தார். அநுவாதமாவது புரோவாதமாக முன் சொன்ன அதனையே பின்னும் சொல்லி ஆண்டு எஞ்சி நின்றன சில கூட்டி உரைத்தல். இதுகூறியது கூறற்குப் பரிகாரம். இன்னும் வேறுவேறு பெயரிட்டுப் பின்வரு நிலை என்னும் அலங்காரம் எனவும், வலியுறுத்தல் எனவும் கூறுப.

ஊ) *கவிராசர்*: 'ஊங்கில்லையாங் கேடு' பாடம். ஒருவனுக்குத் தருமம் செய்கிறதைப் பார்க்கிலும் அதிகமான செல்வம் இல்லை; தருமத்தைச் செய்யாமல் இருக்கிறதைப்பார்க்கிலும் கேடு வேறே இல்லை. தர்மம் செய்யாவிட்டால் கெட்டுப் போவார்கள்; எ-று.

எ) *பழைய 1*: தன்மத்தினும் ஆக்கமும் இல்லை; தன்மத்தை மறப்பது போலேயும் கேடுமில்லை.

ஏ) *பழைய 2*: ஒருவனுக்கு அறம் செய்தலின் மேற்பட்ட செல்வமும் இல்லை; (அதனை) மயக்கத்தான் மறத்தலின் மேற்பட்ட கேடுமில்லை.

பொருளிருந்தும் தருமம் செய்யாது ஒழியின் பொருளும்

---

1 அனுவதித்தல்—அனுவாதம். அஃதாவது யாதானும் ஓர் நிமித்தத்தால் ஒன்றனை முற்கூறி, வேறொருநிமித்தத்தால் அதனையேபின்னும்கூறுதல். அனுவாதம் எனினும் வழிமொழிதல் எனினும் ஒக்கும். அனுவதித்தற்கு முன்னர்ப் பெறப்பட்டது ஒன்றனை வடநூலார் புரோவாதம் என்பர். (புரோவாதம்—மூன்பு கூறுதல்) இதனால் அனுவாதம் கூறியது கூறல் அன்று என்பது ஆயிற்று கூறியது கூறலாவது "அங்கமிலாத அனங்கன்" என்பது போல் யாதாயினும் ஓர் நிமித்தமின்றி முன்னர்க் கூறியதனையேபின்னருங் கூறுதல். அஃதாவது இருகால் சொல்லி ஒருகால் பயன் கொள்ளுதல். பிரயோக விவேகநூலார் "ஒருபொருளை முன்னர் எடுத்துக்கூறுவது புரோவாதம்; அதனை ஒருநிமித்தத்தால் பின்னரும் எடுத்துக் கூறுவது அனுவாதம். உதாரணம் 'அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு' அறத்தினூஉங்கு ஆக்கம் இல்லை என்வரும் என்றார். இங்கே 'அறத்தினூஉங்கு ஆக்கம் எவனோ உயிர்க்கு என்பது புரோவாதம். "அறத்தினூ உங்கு ஆக்கம்" என்னும் அதனையே "மறத்தலினூஉங்கில்லை கேடு" என்னும் நிமித்தம் பற்றிப் பின்னரும் கூறியது அனுவாதம்.

2 அதனால்—அறம் செய்தலை மயக்கத்தினால் மறத்தலினால்

3 அது—தருமம். 4 குறள் 739 5 தொல். சொல். 10.

அழியும்; இம்மை மறுமைக்கும் கேடுவரும். கேடுவருதல்; தருமம் செய்யாதொழியில் தரித்திரம் வரும் என்றது.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*பரிமேலழகர்* போல 'அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை என அனுவதித்தாரேனும்' என்று காரணம் காட்டா விடினும், *மணக்குடவர்* கருத்து அறம் செய்யாமையான் கேடுவரும் என்பதாகும் என்பதில் ஒத்த கருத்தினராதல் காண்க. 'இல்லையாம்கேடு' என்பது *மணக்குடவர்* கொண்ட பாடமாயின், கேடு இல்லையாம் என உரை எழுதியிருப்பர். அங்ஙனம் உரையின்மை பாடத்தைப்பற்றி ஐயங்கொள்ளச் செய்கிறது.

*காளிங்கர்* அறம் இன்பம் பயக்குமாதலால் இதனிற் சிறந்த பேறில்லை என்றார். அங்ஙனமே மறத்தலால் வரும் சிறந்த கேடும் இல்லை என்பர். சொல்லமைதி வேறாயினும் முடிபு ஒன்றாம். பழைய உரைகள் யாவும் அங்ஙனமே.

ஆக்கம்-'உயர்ச்சி' *சுகா.*, ஊதியம்-*வீரமா.* மேன்மைப் படுத்துவது-*கா. சு.* 'நன்மைதரக்கூடிய க்ாரியம்' *இராம.* 'நன்மையானது' *மு. வ.* இவ்வுரை வேறுபாட்டுள் சிறப்பு ஒன்றும் இல்லை. ஆக்கம் என்பது செல்வத்தைக் குறிக்காமல் ஆகுபெயராகச் செல்வத்தைத் தரும் 'நல்வினையைக் குறிக் கும்' என்பர் *வ. உ. சி.*

'அறத்தினூஉங்கு' என்னும் அளபெடை எழுச்சியையும் உயர்ச்சியையும் உணர்த்தியது என்னும் *திரு. வி. க.* கூற்று புதிய இலக்கணவிளக்கம் ஆம்.

இவ்வுரைகளுக்குள், அப்பாத்துரையார் அறம் ஆக்கவளப் பண்பும், காப்புவளப்பண்பும் உடையது ஆகலின் அல்வழிச் செல்லும் போது தடுத்துக்காக்கிறது. ஆனால் அறத்தின் ஆக்கவளம் வலிமையும் பெருமையும் உடைய பொங்குவளம் ஆகிறது என்பர். இவர்கள் ஆக்கம் வளர்தலேயன்றிக் காப்புக் கும் பயன்படுதலைக்கருதியிருக்கிறார்கள். அதனால் பொழிப் புரையில் குறட்பாவிலமைந்துள்ள சொற்களை ஒட்டி ஓரளவு பொருள் கூறிய இவர்கள் உரைப்பகுதியில் இங்ஙனம் உரைத் தனராதல் வேண்டும்.

## ஒ) ஒப்புமைப்பகுதி:

***'அறத்தை மறத்தல் கேடு'***

வருந்தினும் அறத்திறம் மறத்தல் ஓம்புமின் —*சீவக.* 2935

வாழியாய் கேட்டியால் வாழ்வு கைம்மிக
ஊழிகாண் குறுநினது உயிரை ஓர்கிலாய்
கீழ்மையோர் சொற்கொடு கெடுதல் நேர்தியோ
வாழ்மைதான் அறம்பிழைத் தவர்க்கும் ஆகுமோ *கம்ப*. வீடணன்

*'அறத்தினூஉங்கு ஆக்கம் இல்லை'*

இளமையும் வனப்பும் நில்லா இன்பமும் நின்றஅல்ல
வளமையும் வலிவு நில்லா வாழ்வுநாள் நின்றஅல்ல
களமகள் நேசம் நில்லா கைப்பொருள் கள்வர் கொள்வார்
அளவிலா அறத்தின் மிக்கது யாதும்மற்று இல்லை அன்றே
—*நரிவிருத்தம்*, 14

ஆன்றநல் அறத்தைப் போலும் அரியதுஒன்றில்லை என்றான்
—*மேருமந்*. 117

ஆய்வினை உடையராகி அறம்பிழையா தார்க்கெல்லாம்
ஏய்வன நலனேஅன்றி இறுதிவந்து அடைவது உண்டோ?
*கம்ப*. வருணனை. 80

*முற்றும்*

தோற்றம்சால் ஞாயிறு நாழியா வைகலும்
கூற்றம் அளந்துறும் நாள்உண்ணும்—ஆற்ற
அறம்செய்து அருளுடையீர் ஆகுமின் யாரும்
பிறந்தும் பிறவாதார் இல் —*நாலடி*. 7.

அறத்தி னூங்கு ஆக்கம்இல்லை என்பதும் இதனை ஆய்ந்து
மறத்தி னூங்கு இல்லை கேடும் என்பதும் மதித்து இவர்தம்
திறத்தினை அறிந்து கொண்மின் திக்கதிப் பிறவி அஞ்சில்
மறத்தைநீத்து அறத்தோடு ஒன்றி வாழும்நீர் வையத்திலே
—*மேருமந்*. 747

அறமுனக் கஞ்சியின் றொளித்த தால்அதன்
திறமுனம் உழத்தலின் வலியும் செல்வமும்
நிறமுனக் களித்தெங் கதனை நீக்கிநீ
இதமுனங் கியாருனை எடுத்து நாட்டுவார்—*கம்ப*.கும்பகருண 84

ஆக்கமும் கேடுந் தாம்செய் அறத்தொடு பாவமாய
போக்கி வேறுண்மை தேறார் —*கம்ப*. 4234

## *மேற்கோள்பகுதி:*

*'அறத்தினூ ...... கேடு'*

*இளம்*: 'ஊதியம் கருதிய ஒருதிறத்தானும்' —மேற்சொல்லப் பட்ட பொருள்வயின் பிரிதலின்றி அறத்திறம் காரணமாகப் பிரியும் பிரிவு. இது மறுமைக்கண் பயன்தருதலின் ஊதியமா யிற்று. 'அறத்தின் ...... கேடு' என்பதனானும் அறிக.
(*தொல்*. பொருள். 44)

*சுப்பிரமணிய.* அனுவாதத்தினை விளக்க (பிரயோக. 50)
*சுவாமிநாத.* மேற்படி (இல. கொ. 7)

(கூஉ)

4.3. ஒல்லும் வகையா னறவினை[1] யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

உரைப்பகுதி:

*அ) மணக்.:* தமக்கு இயலும் திறத்தானே[2] அறவினையை ஒழியாதே, செய்யலாம் இடம் எல்லாம் செய்க என்றவாறு.

இயலும் திறம் என்பது, மனமொழி மெய்களும் பொருளும். செல்லும்வாய் என்பது, அறம் செய்தற்கு இடமாகிய பலவிடங்களும். ஒழியாது என்றது, நாடோறும் என்றது. இஃது அறம் வலிது என்று அறிந்தவர்கள் இவ்வாறு செய்க என்றது.

*ஆ) பரிதி.:* எ-து தன்னால் இயன்ற மனம் ஆதிகளால்[3] தருமத்தைச் செய்க என்றவாறு.

*இ) பரிப்.:* ... ...

*ஈ) காளி.:* எ-து தனக்கியலும் கூறுபாட்டால் அறமாகிய வினையினை ஒழியாதே சென்று தலைப்படுதற்கு உரிய இடம் எங்கும் செய்க என்றவாறு.

*உ) பரிமேல்.:* தத்தமக்கு இயலும் திறத்தான், அறமாகிய நல்வினையை ஒழியாதே அஃது எய்தும் இடத்தான் எல்லாம் செய்க.

இயலும் திறமாவது இல்லறம் பொருள் அளவிற்கு ஏற்பவும், துறவறம் யாக்கை நிலைக்கு ஏற்பவும் செய்தல். ஓவாமை இடைவிடாமை. எய்தும் இடமாவன மனம் வாக்குக் காயம் என்பன. அவற்றான் செய்யும் அறங்களாவன முறையே நற்சிந்தையும்[4] நற்சொல்லும் நற்செயலும் என இவை. இதனான் அறம் செய்யுமாறு கூறப்பட்டது.

*ஊ) கவிராசர்.:* தனக்கு இயன்ற மாத்திரம் எல்லாம் தருமத்தை விடாதே செய்யவேண்டும். தருமத்தைச் செய்யாதவனுக்கு ஒரு பிரயோசனமும் இல்லை; எ-று.

---

1 அறவினை - அறத்திற்கு ஏதுவாகிய நல்வினை என நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகக் கொள்க.

2 தமக்கு இயலும் திறத்தானே-தம்மால் முடிந்தவரை.

3 மனம் ஆதிகளால்-மனம் முதலியவற்றால்

4 நற்சிந்தை-நல்லனவற்றை மனத்தால் எண்ணுதல்.

எ) *பழைய 1*: தன்னால் இயன்ற அளவு மனம் ஆதிகளால் இடைவிடாது தன்மம் செய்க.

ஏ) *பழைய 2*: தமக்கு இயலும் மாத்திரம் அறமாகிய நல் வினையை ஒழியாதே தருமம் கிடைக்கும் இடத்து எல்லாம் செய்க.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

'ஒல்லும் வகையான்' என்பதற்கு *மணக்குடவர்* 'தமக் கியலுந்திறத்தான்' என உரை கண்டு, 'மனமொழி மெய் களும் பொருளும் செல்லும் வாய்' என விளக்கமுந்தருவர்.

'தன்னாலியன்ற மனமாதிகளான்' என *மணக்குடவரை* ஒத்துரைப்பர் *பரிதியார்*.

'தன்னாலியன்ற அளவு' 'தனக்கியலுங் கூறுபாட்டான்' எனப் பொதுவகையான் *பழைய உரையாசிரியர்கள்* உரைப் பர்.

*பரிமேலழகர்* 'தத்தமக்கியலுந்திறத்தான்' என உரை கண்டு, இயலுந்திறமாவது இல்லறம் பொருளளவிற்கேற்ப வும், துறவறம் யாக்கை நிலைக்கு ஏற்பவும் செய்தல் என விளக்கமும் தருவர். இவ்வுரை *மணக்குடவர்* கூறிய மெய் என்பதன் விரிவாகும். ஆயினும் ஏனைய பழைய உரைகளி னும் இது தெளிவாயிருத்தலின் சிறந்தது எனலாம்.

*பழைய உரை 2* 'மனம் வாக்கு காயம், இடம்பொருள் ஏவலிடத்து எல்லாம் என விளக்கம் தரும். இது பழைய உரை களை எல்லாம் இணைத்து எண்ணியதாகும்.

*கவிராசபண்டிதர்* தானம் பொருள் அளவிற்கும், தவம் யாக்கை நிலைக்கும் ஏற்பச் செய்தல் எனவிளக்குவர். இது *பழைய உரை 2*, *பரிமேலழகர்* கருத்தை ஒட்டியதாகும்.

'பொருந்தும் வகையால்' 'இயன்ற வழியில் எல்லாம்' 'இயன்ற அளவு', 'இயலும் விதத்தால்' தருமங்களைச்செய்ய வசதியும்நேரமும் இல்லையானாலும் என முறையே *சுகாத்.*, *வீரமா.*, *கா.சு.*, *திரு.வி.க.*, *சொ.த.*, *இராம.* இவர்கள் கூறுவர்.

*மு.வ.* 'செய்யக்கூடிய வகையால்' எனவும் *குழந்தை* 'இயலுந்திறத்தான்' எனவும் கூறுவர்.

*'செல்லும் வாய் எல்லாம் செயல்'*

'செய்யும் இடம் எல்லாம்'—*மணக்.*

'சென்று தலைப்படுதற்கு உரிய இடம் எங்கும்'—*காளி.*

'எய்தும் இடம்'—*பரிமேல்.*

'தருமம் கிடைக்கும் இடமெல்லாம்'—*பழைய 2.*

இங்ஙனமே பிற்கால உரையாசிரியர்கள் அனைவரும் உரை கூறுகின்றனர். 'வாய்' என்பது வாய்ப்பு, இடம், வழி உணர்த்தும் பெயர்ச்சொல். ஆதலால் இங்ஙனம் பல உரைப் பார்களாயினும் வாய்ப்புக் கிடைத்தபோது அல்லது வழிகண்ட போது என்பதே தெளிவுதருவதாம். அதிலும் 'ஒல்லும் வாய்' என்ற அடைசேர்ந்தமொழி வாய்ப்புக்கிட்டியபோது என்ற பொருளே சிறந்ததாதலைக் காட்டுகிறது.

கூடுமானவரையில் எல்லா இடங்களிலும் நல்லவனாகவே நடக்க வேண்டும் என்ற *குழந்தையுரை* பொதுநோக் குடையது.

*வ.உ.சி.* 'செல்லும்வாய் எல்லாம் ஒல்லும் வகையான் 'ஓவாது அறவினை செயல்' எனக் கொண்டு கூட்டி செய்யக் கூடும் இடத்தில் எல்லாம் தத்தமக்கு இயலும் அளவினால் இடைவிடாது அறவினை செய்க' என உரைகாண்பர். ஏனையோர் அனைவரும் குறளின் கிடைக்கை முறையிலே உரைகண்டிருப்பது சிந்தித்தற்குரியது. 'ஒல்லும் வாய்எல் லாம்' தாமத்தர் பாடம் என்பர்.

## ஓ) ஒப்புமைப் பகுதி:

***ஒல்லும் வகையான் அறம்செய்தல்:***

இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது
பின்றையே நின்றது கூற்றம் என்றுஎண்ணி
ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையான்
மருவுமின் மாண்டார் அறம் —*நாலடி. 36*

இம்மி அரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இசைவ கொடுத்துண்மின் —*நாலடி. 94*

மறுமையும் இம்மையும் நோக்கி ஒருவற்கு
உறுமாறு இசைவ கொடுத்தல் —*நாலடி. 95*

எத்துணை யானும் இயன்ற அளவினால்
சிற்றறம் செய்தார் தலைப்படுவர் —*நாலடி. 272*

ஆற்றுந்துணையால் அறஞ்செய்கை முன்இனிதே
—*இனியவை. 7*

ஆற்றுந் துணையும் அறஞ்செய்க — பழமொழி, 137

ஒன்றும் வகையால் அறஞ்செய்க ஊர்ந்துருளின்
குன்று அடைப்பது இல — பழமொழி, 303

உடல்அளவு விரதம் பொருள்அளவு தானம் — உ. பழமொழி

யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒருபச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்குஒரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும்போது ஒருகைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே — திருமந். 254

உன்தனக்கு ஒல்லும் நெறியறம் உரைக்கேன்
—மணி. ஆதிரை, 113.

ஓ) மேற்கோள்பகுதி:

'ஒல்லும் வகையான்'

தெய்வச்சிலையார்: ஒல் என்பது செயற்படும் என்பது குறித்து நின்றது. (தொல். சொல். 391)

(ருரு)

## 4.4. மனத்துக்கண் மாசில னாத லனைத்தற னாகுல நீர பிற.

உரைப்பகுதி:

அ) மணக்.: ஒருவன் தன்மனத்தின்கண் ஓர் அழுக்கும் இல னாதலே எல்லா அறமும் ஆம். அதில் அழுக்கு உண்டாயின் மேற்செய்வன எல்லாம் ஆரவார நீர்மைய என்றவாறு.

பிறர் அறியவேண்டிச் செய்தானாம் என்றவாறு ஆயிற்று. மேல் நான்கு பொருளைக் கடியவேண்டும் என்றார்; அவை நான்கும், மனம் ஒன்றும் தூயதாகப்போம் என்று அதன்பின் இது கூறினார்.

ஆ) பரிதி.: மனத்திலும் பாவத்தை நினையாது ஒழிக, அது போதும்; தன்மம் செய்ய வேண்டாம் என்றவாறு.

இ) பரிப்.: ......

ஈ) காளி.: ஒருவன் தனது நெஞ்சத்துக்கண் பாவக்கருத்து இலனாதலே அனைத்தறங்களும்; ஒழிந்தன எல்லாம் துக்கத் தன்மை உடைய என்றவாறு.

உ) *பரிமேல்.*: அவ்வாற்றான் அறம் செய்வான் தன்மனத்தின்கண் குற்றம் உடையன் அல்லனாக, அவ்வளவே அறமாவது. அஃது ஒழிந்த சொல்லும் வேடமும் அறம் எனப்படா ஆரவார[1] நீர்மைய.

குற்றம் தீயன சிந்தித்தல்[2] பிறர் அறிதல் வேண்டிச் செய்கின்றன வாகலின், ஆகுலநீர என்றார். மனத்து மாசுடையனாயவழி அதன்வழியவாகிய[3] மொழிமெய்களான் செய்வன பயனில என்பதூஉம் பெறப்பட்டது.

> *இராமா.*: மாசிலன் ஆதல்—குற்றம் இல்லாதவன் ஆகிறதாகிய, அனைத்தறன்—அவ்வளவை உடையதே தருமமாவது. இதற்கு ஆதல் என்பதை வியங்கோள் முற்றாக்காது தொழில் பெயர் ஆக்குக. இனி, அதனை வியங்கோள் முற்றாக்கி ஒருவன்மனத்துக்கண் மாசிலன்ஆகுக; அறன், அனைத்து; பிற ஆகுலநீர என மூன்று முடிபாக்கினும் அமையும். அதனால் பெரும்பயன் இல்லாமை உணர்க.

ஊ) *கவிராசர்.*: 'நீர்மை பிற'—பாடம். ஒருவன் தன்னுடைய மனத்திலே குற்றம் இல்லாமல் இருந்தானாகில் அவனுக்கு அதுவே தருமமாவது; மற்றஎல்லாம் வேஷமாத்திரம்; (எ-று).

எ) *பழைய 1*: மனத்திலும் பாவத்தை நினையாது ஒழிக. அதைப்பற்ற தருமம் செய்யவேண்டா.

ஏ) *பழைய 2*: 'ஆகுதல் நீர்மை பிற' —பாடம். அறம் செய்வான் தன் மனத்தின் மாசில்லாமல் இருப்ப, அவ்வளவே அறனாவது. அதுவில்லாமல், சொல்லும் வேடமும் அறம் எனப்படா; அவை வேறுபடும் நீர்மை உடையது.

*மல்லர்*: என்பது மனத்திலே பாவத்திற்கு இடம்கொடாதவனாயிருக்கிறது அவ்வளவு மெய்யான புண்ணியமாயிருக்கும். அதற்குப் (பிறத்திப்பட்டதெல்லாம்) புறம்பானதெல்லாம் ஆரவாரத்தின் குணத்தையுடையனவே எ-று.

புண்ணியமானது தற்சுபாவமாகிய பாவத்திற்கு விரோதமாகையால் அப்பாவங்களைத்தவிர்த்தலோடே கூடின அறம்

---

1 ஆரவாரம்-பிறர் அறியச் செய்யும் ஆடம்பரம்

2 தீயனசிந்தித்தலாவது - பிறன்பொருளைக் கவர எண்ணுதல், கொலை களவு முதலியன செய்யச் சூழ்ச்சி செய்தல், உடலையே தான்என்று எண்ணி அதனையே வளர்க்க எண்ணுதல்.

3 அதன்வழியவாகிய-மாசுடைய மனத்தின் வழியே செல்கின்ற மொழி மனம் போன போக்கில் செல்லுமானால் பொய்குறளை கடுஞ்சொல் முதலியன நிகழும். மெய் செல்லுமானால் கொலை களவு காமங்களில் ஈடுபடும்.

மெய்யான புண்ணியத்தின் குணத்தை உடைத்தாயிருக்கும். பாவத்தைத் தவிராமற் செய்த அறமோ என்றால் நாலுபேர் கூடுகிறபோது ஆரவாரமாயிருக்கும். கூடல்முடிந்தால் ஆர வாரம் தீர்ந்து போகும். அப்படிப்போலே அந்தத்தர்மம். அதையறிந்த நாலுபேர் அதை மகாபுண்ணியம் என்று சொல்வார்கள். அந்நோக்கத்திலே மாத்திரம் புண்ணியம் என்றபேர்பெறும். அந்நேரத்திலே புண்ணியத்திற்கு உரிய குணம் இல்லாததாலே ஒருகாலும் புண்ணியமே என்று சொல்லப்படாது என்பது கருத்து.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*மணக்குடவர்* 'மாசிலனாதலே எல்லா அறமுமாம்' என 'அனைத்து அறமும்' என்ற முற்றும்மை விகாரத்தாற்றொக்க தாகக்கொண்டு உரைகண்டனர்.

*பரிமேலழகர்* ஆதல்—ஆகுக; அவ்வளவே அறம்; பிற வனைத்தும் ஆரவாரத் தன்மையன என மூன்று சிறுவாக் கியம் ஆக்கினர். இங்ஙனம் சிறுவாக்கியங்களாகச் சொல்வதே அரிதாம். *காளிங்கர்* நீங்கலாகப் பழைய உரையாசிரியர்கள் அனைவரும் இக்கருத்தினரே ஆவர்.

பிற்கால உரையாசிரியர்களில் *திரு.வி.க.,* *சொ.த.* முதலியோர் *பரிமேலழகரை* ஒட்டி உரைப்பர். *சொ.த.* தரும், அறம் மாசிலன் ஆதற்கும் மாசிலனாதல் அறத்திற்கும் காரணமாய் ஒளியும் இருள் நீக்கமும் போல உடன் நிகழ்வ தாய், வேறுபாடும், முற்பிற்பாடும் இன்றித்தோன்றும் என்ற விளக்கக்குறிப்பு போற்றத்தக்கதொன்றாகும்.

*மணக்குடவர்* கருத்து மனமாசுடையார் செய்வனயாவும் ஆடம்பர அளவினவே; பயன்தருவனஆகா; உண்மையாகச் செய்யப்படுவனவும் அன்று என்பது.

மனமாசின்மையே அறம்; வேறுஅறம் செய்யவேண்டாம் என்பது பருதியார் கருத்து; பழைய உரையும் அது.

'உலகத்தில் அறம் எனப்படுபவை எத்தனையுளவோ? அவையனைத்தும் மனமாசின்மையேயாம்' என்பர் *காளிங்கர்*. இவர்கருத்தும் பாவ எண்ணம் இல்லாமை ஒன்றே எல்லா அறங்களும் ஆம் என்பதே.

இங்ஙனம்ஆசிரியர்கள் தம்முட்சிறிது வேறுபடுவராயினும் மனமாசின்மையே அறம் என்பதில் ஒத்த கருத்தினர்

ஆகின்றனர். ஆனால் பிற என்பதற்கு 'அழுக்குடையனவாக மேற்சொல்வன எல்லாம்' எனவும், ஒழிந்தன எல்லாம் எனவும் 'சொல்லும் செயலும்' எனவும், மனத் தூய்மையற்றவை லாம் எனவும் உரைகூறுவர்.

இவற்றுள் மனமாசுடன், மொழிமெய்களான் செய்யப் படுவன அறமாகா என்பதையே 'பிற' என்ற அஃறிணைப் பன்மைப் பெயர்ச்சொல் உணர்த்தியது என்பது சிறந்த கருத்தாகும்.

மனமாசு பிறரால் அறியப்படாத ஒன்று. அத்துடன் செய்யும் செயலும் சொல்லும் அறியப்படாதனவே. ஆயினும் செய்வோனுக்குத் தெரியும் இது வஞ்சமனத்தாற் செயப் படுவது என்று. அதனால் அவனே அறிந்து வருந்துவன். ஆகையால் மனமாசுடன் செய்யும் சொல்லும் செயலுமே பிற வெனப்பட்டன என்ற *பரிமேலழகர்* உரை சிறந்ததாகும்.

வ. உ. *சிதம்பரனார்* 'மாசிலனாய்ச் செய்யப்படுவன அனைத்தும் அறமாம். மாசுடையனாய்ச் செய்யப்படுவன அனைத்தும் துன்பந்தருவனவாம்' என்பார். மேலும், 'மன மாசின்மை' ஓரொழுக்கமாமேயன்றி அறமாகாது; அறம் ஒருயிர்க்கு நன்மைபயக்கும் செயல். 'அறவினை செயல்' 'அறஞ் செய்க' 'நன்று ஆற்றின்' 'செயற்பால தோரும் அறனே' எனப் பலவிடத்தும் செயலாகவே வள்ளுவராற் கூறப்பெற்றமைகாண்க. அன்றியும் மனமாசின்மையே அறன் எனின் 'இவறன்மையுடையார் இதனை மேற்கோளாகக் கொண்டு அறஞ்செய்யாமலே ஒதுங்குவர். இங்ஙனம் நல்லன செய்யாமைக்கு எடுத்துக்காட்டாகும் ஒருமனநிலையை ஆசிரியர் கூறார்' எனப் *பரிமேலழகரை* மறுப்பர். 'நீர்மை' தாமத்தர் காணும் பாடம் எனவும் கூறுவர்.

மாசிலனாய்ச் செய்யப்படுவன அனைத்தும் அறமெனவே. மாசின்றி, சண்டேசர் தந்தையின் கால்தடிந்த செயலும், பட்டத்து யானையைக் கொன்ற எறிபத்தர் செயலும், *திருமங்கையாழ்வார்* செய்த களவும்போல்வன நல்லனவாயும், காமன் செய்த வழிபாடும், விருத்திரன் செய்த வேள்வியும் மனமாசுடன் செய்யப்பெற்றமையின் தீயனவாயும் முடிந்தமை அடங்கியிருத்தலின் வ.உ.சி. உரை சிறந்தது.

இவர் 'ஆகுலம்' என்பதற்குத் துன்பம் எனப் பொருள் கண்டனர். *பி.சா. சுப்பிரமணிய சாத்திரியார்* 'விபரீதத் தன்மைய' எனப்பொருள் கண்டனர்.

விபரீதம்—விளைவு வேறானது எனப்பொருள் தந்து கருத்துப் பொருளாகத்துன்பத்தைக் காட்டியதாகலாம்.

*ஒ) ஒப்புமைப்பகுதி:*

தண்ணி லாசறு சித்தமும் இன்றித்தவமுயன்றவமாயின பேசிப்
பின்னலார் சடைகட்டி என்பணிந்தால் பெரிதும் நீந்துவது அரிது
—*சுந்தரர்*.பதி.64.பா.7

உண்ணன்மை தவம் என்றங் குறுப்பெல்லா மறைக்கின்றாய்
திண்ணென்ற மனமிலைநீ சிறைபலவுஞ் செய்தலாற்
பெண்ணென்றும் பிறவென்றும் தாநோக்கிப் பெரும்பேதாய்
கண்ணன்றோ உள்ளத்தைக் கலக்குவன அவைகாவாய்
—*நீலகேசி*, 275

*ஓ)மேற்கோள்பகுதி:*

*'மனத்துக்கண்'*

*வீரமா.*: பதிக உறுப்புக்கள் எல்லாவற்றிற்கும் உரிய உதாரணச்செய்யுள் என்பதற்கு (தொன்.விள.149)

(௩௪)

## 4.5. *அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொ னான்கு மிழுக்கா வியன்ற தறம்.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.*: மனக்கோட்டமும்,[1] ஆசையும், வெகுளியும், கடுஞ்சொல்லும் என்னும் நான்கினையும் ஒழித்து நடக்குமது யாதொன்று அஃது அறம் என்று சொல்லப்படும் என்றவாறு.

பின்னர்ச் செய்யலாகாது என்று கூறுவன எல்லாம் இந் நான்கினுள் அடங்கும் என்று கூறிய அறம் எத்தன்மைத்து என்றற்கு இது கூறப்பட்டது.

*ஆ) பரிதி.*: எ-து பிறர் செல்வம்கண்டு நோகாமையும்[2] வெஃகாமையும்[3] கோபம் இல்லாமையும், புறங்கூறாமையும் போலத் தன்மம் இல்லை என்றவாறு.

*இ) பரிப்.*: ... ...

*ஈ) காளி.*: எ-து செல்வமும் கல்வியும் முதலான பிறர் ஆக்கம் பொறாமையும், மற்ற நீதி யல்லாதவற்றில் ஆசையும்,

---

1 மனக்கோட்டம்-மனம் தவறான வழியிற் கோணுதல்

2 நோகாமை-வருந்தாமை

3 வெஃகாமை-பிறர் செல்வத்தை வெளவக் கருதாமை

சினமும், பிறரை இகழ்ந்து உரைக்கும் உரையும் இவை நான்கையும் குற்றமாகக் கொள்வானிடத்து அறமானது நடைபெற்றது என்றவாறு.

அல்லதூஉம் இவை நான்கையும் குற்றமாகக் கொள்ளாது, மேற்கொண்டு ஒழுகுமாயின் மற்று இவனால் செய்யப்பட்டதோர் அறமும் ஐயப்படத்தகும் என்றவாறு.

பாயிரம் நான்கும் முடிந்தது. இனி நீத்தார் பெருமை துறவறப் பகுதிக்குத் தொகுத்துச் சொல்லியதும், இவ்அறன் வலியுறுத்தல் இல்லறப்பகுதிக்குத் தொகுத்துச் சொல்லியதும், ஆனதால் இவை முதலாக எடுத்துரைத்தல் என்கின்ற மரபினால், இதன் பின்னரே வீட்டின்பக் காரணமாகிய துறவறத்திற்குத் துணைக்காரணமாகிய இல்லறமானது மற்று எவ்வகைப்பட்ட அறங்கட்கும் காரணம் ஆதலான், துறவு இல்லாததனை அறிவிப்பான், மேலை அதிகாரம் இல்வாழ்க்கை கூறுகின்றார்.[1]

உ) *பரிமேல்.*: பிறராக்கம் பொறாமையும்,[2] புலன்கள் மேற் செல்கின்ற அவாவும், அவை ஏதுவாகப் பிறர்பால் வரும் வெகுளியும், அதுபற்றி வருங்கடுஞ்சொல்லுமாகிய நான்கும் இந்நான்கினையும் கடிந்து இடையறாது நடந்தது அறமாவது.

இதனால் இவற்றோடு விரவி இயன்றது அறம் எனப்படாது என்பதூஉம் கொள்க. இவை இரண்டு பாட்டானும் அறத்தினது இயல்பு கூறப்பட்டது.

ஊ) *கவிராசர்.*: பிறருடைய செல்வத்தைப் பார்த்துப் பொறுப் பற்றுப்படுகிற அழுக்காறும், மனம் பொறிவழியே போகிற ஆசையாகிற அவாவும், ஒருபொருள் நிமித்தமாகக் கோபித்துக் கொண்டு கடினவசனத்தைப் பேசுகிற கோபமும், துர்வசனங்களைப் பேசுகிறதும் ஆகிய இந்தநாலும் இல்லாமல் இருக்கிறதே தருமம் என்பதாம். இவைகளுடனே கூடியிருக்கிறவன் செய்கிறது தருமம் அன்று; (எ-று).

எ) *பழைய 1*: பிறர் செல்வம் கண்டு நோகாமையும், வெகுவாசையும், கோபமும், புறங் கூறாமையும் விட்டதே தருமம்.

ஏ) *பழைய 2*: அறம் செய்யுமிடத்து மனத்து அழுக்கும்,

---

1 இக்குறளைப் பத்தாவதாகக் கொண்டமையின் இங்ஙனம், வருகின்ற அதிகாரத்துக்குத் தோற்றுவாய் செய்தார்.

2 பிறராக்கம் பொறாமை-பிறருக்கு உண்டாகும் கல்வி, செல்வம் பதவி, செல்வாக்கு, இவற்றின் வளர்ச்சி கருதி மனம் பொறுக்காமையும் அவற்றைத் தடுக்கச் சூழ்தலுமாம். 3 அவை-பொறாமையும், அவாவும்.

கொடுக்கும் பொருள்மேல் அவாவும், கொடுக்கும்போது கோபமும், இன்னாச்சொல்லும் இந்நான்கும் கூடாஇயல் பினை உடையது அறமாவது.

*ஐ) தொகுப்பும் குறிப்பும்:*

'உட்கோட்டம் இன்மை பெறின்' என்ற வள்ளுவர் ஆட்சி பற்றி 'அழுக்காறு' என்பதற்கு மனக்கோட்டம் என உரை காண்பர் *மணக்குடவர்.*

*பரிதியார்* அழுக்காறே பேராசையையும் வெகுளியையும் புறம் பேசுதலையும் விளைவிக்கின்றன என விளக்கங்கூறி இந்நான்கும் கலவாது இயல்வதே அறம் எனக் கருதச் செய் கிறார்.

*காளிங்கர்,* 'அழுக்காறு பிறர் கல்வி செல்வங்களைக் காரணமாகக் கொண்டும், அவாவும் சினமும், நீதி நேர்மை அற்றனவாக இருத்தலை ஏதுவாகக் கொண்டும், பிறரை இகழ்ந்து கூறுதலை வேண்டிப் புறங்கூறுதல் வாயிலாக வெளிப்படும் ஆதலால் மாசு படிந்த மனத்தான் செய்யும் அறம் ஐயப் படத்தகுவது' எனக் கூறுவது சிறந்த நுண்ணிய கருத்தாகும்.

இக்குறட்பாவை இவ்வதிகாரத்தின் இறுதிக்குறளாகக் கொண்டு, மேல்வரும் அதிகாரத்திற்குத் தோற்றுவாய் கூறு கின்ற இவர், நீத்தார் பெருமை துறந்தார் பகுதியைத் தொகுத்தும் அறன்வலியுறுத்தல் முழுதும் இல்லறப்பகுதி யைத் தொகுத்தும் கூறுகிறார் வள்ளுவர் என்பர். இப்பகுதி சிறந்த தொடர்புரையாகும்.

*சுகாத்தியர்*—'அழுக்காறு—அழுக்குவழி' இது அழுக்கு ஆறு எனப்பிரித்தலால் அவர் கண்ட பொருள்-ஏனையோர் அழுக்கறுத்தலை ஒருசொல்லாகக் கொண்டு பொறாமை எனப் பொருள் காண்பதையும் இணைத்து இதன் பொருந்தா மையைத் துணிக. *வீரமாமுனிவர்* 'பொறாமை' என்பர்.

*தண்டபாணியார்* 'அவா-பேராசை. இன்னாச்சொல்— தீமைவிளைக்கும் சொல். இழுக்கா-குற்றமாகக் கொண்டு. இயன்றது(விளக்கி) நடந்தது' என்பர். *திரு.வி.ச.* 'இழுக்கா இயன்றது அறம்-அழித்து நடப்பது அறமாகும்.' இழுக்கா- அழித்து. "இளைசூழ் படப்பை இழுக்கிய கானத்து" (சிலம்பு 10:8424) என்பர்.

இயன்றது—நடந்தது. அழுக்காறு முதலிய நான்கும் ஒழிந்த இடத்தில் அறம்தானே இயங்குதலின் இயன்றது என் பதற்கு நடந்தது எனப்பொருள் கொள்ளப் பட்டது என்றும் கூறுவர். குழந்தை, *பரிமேலழகரை* ஒட்டியே உரைப்பர்.

## ஒ) *ஒப்புமைப்பகுதி:*

*அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல்:*

அவலம் நீத்தறிந்து அடங்கிய கொள்கை
மெய்வகை உணர்ந்த விழுமியோர் —*சிலம்பு*. நாடுகாண், 16

பொய்குறளை வெளவல் அழுக்காறு இவைநான்கும்
ஐயந்தீர் காட்சியார் சிந்தியார் —*ஆசாரக்*. 38

அச்சம் வெகுளி அவா அழுக்காறு இங்ஙனே மாண்டன
—*பொன்வண்ணத்*. 99

## ஓ) *மேற்கோள்பகுதி:*

*அழுக்காறு அவா*

*அடியார்க்கு நல்லார்*: "புலவூண் துறந்து பொய்ய விர தத்து அவலநீத்து" என்பதற்கு "அழுக்காறு அவா முதலிய வற்றைக் கைவிட்டு" என்பர் (*சிலம்பு*. நாடுகாண் 16 உரை) (ரு)

## 4 . 6. *அன்றறிவா[1] மென்னா தறஞ்செய்க மற்றது*
## *பொன்றுங்காற் பொன்றாத் துணை.*

### *உரைப்பகுதி:*

*அ) மணக்.*: பின்பே அறிந்து செய்வோம் என்னாது முன்பே அறிந்ததைச் செய்க. அது சாங்காலத்திலும் சாகாதே நின்று பிறக்கும் இடத்திற்குத் துணையாம் என்றவாறு.

இஃது அறம் செய்யுங்கால் விரைந்து செய்யவேண்டும் என்பதும், அது மறுமைக்குத் துணையாம் என்பதும் கூறிற்று

ஆ) *பரிதி*: எ-து நாம் வறியார் என்றும் தன்மம் இல்லை என்றும் விசாரித்துச்[2] செல்வம் உண்டானபோது அறம் செய் வோம் என்னாமல் நினைத்தபோதே தருமம் செய்க; அது மரணாந்த காலத்துக்குப்[3] பெருந்துணையாம் என்றவாறு.

1 'அன்றறிவோம்' எனப் பாடங்கொண்டார், எல்லிஸ் துரை.
2 விசாரித்து-ஆய்ந்து.
3 மரண அந்தகாலத்து-சாக்காடு எய்தும் இறுதிக்காலத்துக்கு.

இ) *பரிப்.:* ......

ஈ) *காளி.:* எ-து அறம் செய்கைக்கு அறிவல்லது என்றும் அறிவாவது என்றும் காலத்தைக் கழியாதே கடிதாக அறத்தினைச் செய்து கொள்க[1] எ-று. அதுவே அழியாத துணை என்றவாறு.

உ) *பரிமேல்.:* யாம் இதுபொழுது இளையமாகலின் இறக்குஞான்று செய்தும் எனக்கருதாது அறத்தினை நாடோறும் செய்க. அவ்வாறு செய்த அறம் இவ்வுடம்பினின்றும் உயிர் போங்காலத்து அதற்கு அழிவில்லாத துணையாம்.

மற்று என்பது அசைநிலை. பொன்றாத்துணை என்றார், செய்த உடம்பு அழியவும் உயிரோடு ஒன்றி ஏனைய உடம்பினும் சேறலின். இதனான் இவ்வியல்பிற்றாய அறத்தினை நிலையாத யாக்கை நிலையினபொழுதே செய்க, என்பது கூறப்பட்டது.[2]

ஊ) *கவிராசர்.:* 'அன்றறிவோம்' பாடம். நாம் இப்போது சிறியேம். இனிமேல் அந்திய காலங்களிலே தருமத்தைப் பண்ணுவோம் என்று எண்ணவேண்டாம். அஃது ஏன் என்றால், ஆயுசு நிர்ணயமில்லை; ஓட்டைப்பானையில் வார்த்த தண்ணீர்போலப் போய்விடும். ஆனபடியினால் நாள்தோறும் தருமத்தையும் விரதங்களையும் பண்ணவேண்டும்; தருமத்தைப் பண்ணினால் அது சாகிற காலத்துக் கெடாத துணையாம்; எ-று.

எ) *பழைய !:* நாம் வறியாரென்றும், தனமில்லை என்றும் விசாரித்து செல்வம் உண்டானபோது அறம் செய்வோம் என்னாமல், நினைத்தபோதே தருமம் செய்க. அது மரணாந்த காலத்துப் பெருந்துணையாம்.

---

1 அறம் செய்தல் அறிவுடைய செயல் என்றும். மூடச்செயல் என்றும் ஆய்வதிலேயே காலத்தைக் கழித்துவிடாமல் விரைவாக அறத்தைச் செய்து கொள்க.

2 மனமொழி மெய்களான் செய்யப்படுவன வினைகள் வடநூலார் இதனைக் கன்மம் என்பர். இவ்வினைகள் செய்த உடனே பின்வரும் துன்ப இன்பங்களுக்கு ஏதுவான நன்மை தீமைகளைத் தோற்றுவித்துக் கெடுகின்றன. இந்த நல்வினை தீவினைகள் (தர்மாதர்மங்கள்) மனம் புத்தி சித்தம் அகங்காரங்களாகிய உட்கருவிகளில் (அந்தக்கரணத்தில்) வெளிப்படாது தங்குகின்றன. அந்தக்கரணங்கள் உயிரைப்பற்றிவிடாது அடுத்தடுத்துவரும் பிறவிகள் தோறும் பொருந்தும் உடம்புகளைப் பற்றியே இருத்தலின் சாரும் உடம்புகள் தோறும் துன்ப இன்பங்களுக்கு ஏதுவாகின்றன. இவ்விரண்டனுள் ஒன்றாகிய அறத்தினைச் செய்த உடம்பு அழியவும் உயிரோடு ஒன்றி (மறைந்து நின்று) ஏனையுடம்பினும் சேறலின் என்றார் என்க.

*பழைய 2:* 'அறஞ்செய்ய' - பாடம். 'யாம் இப்போது இளமை; முதுமையில் செய்தும்' எனக் கருதாது அறத்தினை நாடோறும் செய்க. அவ்வாறு செய்த அறம் இவ்உடம்பி னின்று உயிர்போங்காலத்துத் தான் அழியாமல் துணையாய் வரும்.

*மல்லர்:* என்பது, தளர்ந்த வயசு வருமே அப்பொழுது புண்ணியம் செய்கிறதுக்கு யுத்தி உண்டாகும் என்று நினையாமல், இப்பொழுதுதானே புண்ணியம் செய்ய வேண்டியது. அது ஏனென்றால் சாகிற காலத்திலே அந்தப்புண்ணியம் உயிருக்குச் சாகாத துணையாய் இருக்கும் எ–று.

மனிதன் சாகிறபோது அவன்செய்த வினைமாத்திரம் அவனுடைய உயிரைத் தொடர்ந்து போவதினாலேயும், சாவு என்றைக்கு வரும் என்ற நிலவரம் இல்லாததனாலேயும், 'ஏழைக்குப்புண்ணியம் செய்யவேணும்' என்று நினைக்கிற வன், புண்ணியம் பின்னே செய்தால் தன்னை மோட்சத் திற்குக் கூட்டிக் கொண்டு போகத் தக்க துணையில்லாமை யால் மோட்சத்திற்குப் போய்ச் சேரமாட்டான் என்பது கருத்து.

அன்று—அன்றைக்கு, என்னாது-என்றுகருதாமல். அறம் புண்ணியம். செய்க-செய். மற்று-அசைச்சொல். பொன்றுதல் சாகுதல். பொன்றா-அழியாத.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

'அன்று அறிவாம்' என்பது அன்றைக்குப் பார்த்துக் கொள்ளலாம் என்ற உலகியல் வழக்குப்பற்றியதோர் ஆட்சி. அன்று என்பது சுட்டடியாகப் பிறந்த காலப்பெயர். அதனைப் பிற்படக்கிளத்தலே மரபாயினும், இது நெஞ்சறிசுட்டாய் 'பின்பே அறிந்து செய்வோம் என்ற பொருளைத்தந்து நின் றது' என்ற *மணக்குடவர்* உரை எளிமையும் நயமும் உடை யது.

(அறிவு) அன்று என்னாது, அறிவு ஆம் என்னாது எனக் கூட்டி, 'தானத்தில் இது அறிவுடைய செயல் இது அறிவற்ற செயல் என்ற பாகுபாடு காலம் போக்குகிறவனுடைய ஏமாற்றுவித்தை' என்கிறார் *காளிங்கர்*. அறம் அறிவொடு பொருந்தியதாயினும்-அன்றாயினும் செய்யின் தன்பயனைத் தாராமல் இராது என்ற சிறந்த கருத்தையும் இவ்வுரைப் போக்கு நமக்கு உதவுகிறது.

அறமாவது ஈதலே என்ற கருத்துடன் எழுதும் *பரிமேலழகர் பரிதியார் பழைய உரையாசிரியர்கள்* உரைகளைக் காட்டிலும் மனத்துக்கண் மாசின்றிச் செய்யப்படும் அறவொழுக்கங்கள் அனைத்தையும் பொதுப்படக் கருதச்செய்யும் *மணக்குடவர், காளிங்கர்* உரைகளும், பிற்காலத்து உரைகளும் இனியவாம்.

*பரிதியார்* 'அறம் செய்பவன்' நாம் இதுபோதுவறியம்: இதுதன்மம் ஆகாது; என்று ஆய்வதில் காலம்போக்காமல் செல்வம் உண்டானபோதே அறம் செய்க என்பர்.

"*அன்று அறிவாம்*"

'முடிவு வருங்காலத்தில் அறிந்து கொள்வோம்'—*சுகாத்*

'இறக்கும் நேரம் வரை தள்ளிப் போடாமல்'—*வீரமா.*

'இறக்குங்காலத்திலே பார்த்துக் கொள்ளலாம்' - *கா.சு.*

'அன்றைக்குப் பார்த்துக் கொள்வோம்' —*திரு.வி.க.*

'பின்பு அறிந்து கொள்வோம்' — *சொ. த.*

'சாகப்போகிற அன்றைக்குப் பார்த்துக் கொள்வோம்'
—*இராம.*

'இளைஞராக உள்ளவர் பிற்காலத்துப் பார்த்துக் கொள்வோம்' —*மு. வ.*

'பின் செய்வோம் என்றிராமல்' —*குழந்தை*

'வாழ்வார் எவரும் பின் ஒருகாலத்தில் (அறம் செய்வது பற்றி) ஆர்ந்தமர்ந்து ஆய்ந்தறிந்து முடிவு செய்வோம்'
— *கா. அ.*

'பின்பு முதுமையிற் செய்வோம் என்றிராமல்'
—*தேவநேயர்.*

'அறப் பயனைப் பின்னே தருவோம் என்னாது உடனே தரும்' —*மு. கோ.*

'பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்னாது'—*சி.இ.*

இவ்வுரைகளுக்குள், சாகுங்காலத்துப் பார்த்துக்கொள்ளலாம் என்பார் ஐவர். பின்பு அல்லது அன்றைக்கு என்பார் அறுவர். *மு.கோ.* அறம் பயனைப் பின்பு தரலாம் என்று தள்ளிப்போடாது உடனே தரும் என்று புதிய உரை தருவர். அது பொன்றுங்காற் பொன்றாத் துணையாகும் என்ற வள்ளுவர் கருத்தோடு மாறாகின்றது எண்ணிப்பார்க்க. சாகப் போகிற அன்றைக்குப் பார்க்கலாம் என்ற உரை சாகிறபோது புலனைந்தும் பொறிகலங்கி அறிவழிந்து ஐமேலுந்துமாதலின்

எண்ணவும் இயற்றவும் முடியாது. ஆதலால் பொதுமையில் பின்பார்த்துக் கொள்ளலாம் என்ற உரையே சிறந்தது.

பொன்றுங்கால் என்பதற்கு முன்பும்-பின்பும் உள்ள உரையாசிரியர்கள் அனைவரும் 'உடலழியுங்காலத்து' என்றோ பின்பு என்றோ கொண்டனர். *மு.கோ.* 'உலகம் அழியுங்காலத்து என்றும் ஔவையுண்ட நெல்லிக்கனி இன்றில்லை அதுபோல அறவுருவம் அழியினும் அறநினைவு அழியாது' என்றும் புதிய சிந்தனைகளை வழங்குவர். இத்திருக்குறளின் சொல்லமைதியும் முடிபும் இடந்தருமேல் கொள்க.

*கா.அ.* 'செய்தவன் உடலழியினும் அறம் அழியாது இனநலத்தை வளர்க்கும் என்று கூறிச் செய்தவன் அழியினும், அறப்பயன் மறுமையில் பொன்றாத்துணையாக அவனைச் சாரும் என்ற பழைய உரையாசிரியர்கள் "இம்மைச் செய்தன மறுமைக்கு ஆமெனும் அறவிலைவணிகன் ஆஅய் அல்லன்" என்பதை எடுத்துக்காட்டுவர். உரையாசிரியர்கள் உரை தன்னலப் போக்குடையன; அறப்பயன் சமுதாய நலனுக்குப் பயன்படுகின்றன என்பர்.

*தேவநேயர்*, பொன்றுதலாவதுஉடலிலிருந்து உயிர் நீங்குதல்; உயிர்நீங்கிய உடம்பு அழியவும், அறப்பயன் அதனோடு அழியாது உயிரோடு ஒன்றி நின்று உதவுதலால் பொன்றாத் துணையாயிற்று என்பர். இது பெரும்பாலும் ***பரிமேலழகர்*** முதலிய பண்டையோர் கருத்தை ஒட்டியதேயாகும்.

## ஔ) ஒப்புமைப்பகுதி:

*'அறம், பொன்றுங்கால் பொன்றாத்துணை'*

தாம்செய் வினைஅல்லால் தம்மொடு செல்வதுமற்(று)
யாங்கணும் தேறிற் பிறிதில்லை-ஆங்குத்தாம்
போற்றிப் புனைந்த உடம்பும் பயமின்றே
கூற்றம் கொண்டோடும் போது —*நாலடி*, 120

வேற்றுவர் இல்லா நுமரூர்க்கே செல்லினும் வெகுண்டீர்போல
ஆற்றுணாக் கொள்ளாது அடிபுறத்து வைப்பீரே அல்லீர் போலும்
கூற்றம் கொண்டுஓடத் தமியே கொடுநெறிக்கண் செல்லும் போழ்தைக்கு
ஆற்றுணாக் கொளீர் அழகலால் அறிவுஒன்றும் இலிரேபோலும்
—*சீவக*.1550

முன்புநின்று இசைநிறீஇ முடிவுமுற்றிய
பின்புநின்று உறுதியைப் பயக்கும் பேரறம்
—*கம்ப*. இந்திரசித்துவதை.29

அறந்தலை நின்றார்க்கு இல்லை அழிவெனும் அறிஞர் வார்த்தை
சிறந்தது —*கம்ப*. இந்திரசித் துவதை, 58

தேரின் அறமே துணை —*அறநெறிச்*. 146

*'அன்றுஅறிவாம் என்னாமை'*

மற்று அறிவாம் என்றிருப்பார் மாண்பு —*நாலடி* 332

பின்னை அறிவுஎன்றல் பேதைமை —*அறநெறிச்*. 105

*முற்றும்:*

நாளைச் செய்குவம் அறம் எனில் இன்றே
கேள்வி நல்உயிர் நீங்கினும் நீங்கும்
இதுவென வரைந்து வாழ்நாள் உணர்ந்தோர்
முதுநீர் உலகின் முழுவதும் இல்லை —*சிலம்பு*. 28.179-82

இளமையும் நில்லா யாக்கையும் நில்லா
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா
புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்
மிக்க அறமே விழுத்துணை ஆவது
தானஞ் செய் என் —*மணி*. சிறைசெய், 135-9

(சகு)

## 4.7. *அறத்தா றிதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோ டூர்ந்தா னிடை.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* நீங்கள் அறநெறி இத்தன்மைத்து என்று அறியவேண்டா, சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காணலாம் எ-று.

இது, பொன்றினாலும் துணையாகுமோ என்றார்க்குத் துணையாயினவாறு காட்டிற்று.[1]

*ஆ) பரிதி.:* எ-து தருமம் செய்வாரையும் பாவம் செய்வாரையும் விசாரிக்க வேண்டிய அத்தண்டிகைப் பத்தனையும்[2] சுமப்பார்களையும் கண்டு கொள்க என்றவாறு.

*இ) பரிப்:* ...

1 முன்பிறவியில் செய்த நல்வினைப்பயன் சிவிகையில் ஏறவும், தீவினைப் பயன் சுமக்கவும் வைத்துத் துணை செய்கிறது என்பதாம்.

2 தண்டிகைப்பத்தன்-பல்லக்கின்தலைவன். இதனால் இவர்பலராகிய காரணம் நோற்பார் சிலர் பலர் நோலாதவர். ஆதலால் தண்டிகைப் பத்தன் ஒருவனாக சுமப்பார் பலராக இருத்தலை அறியலாம்.

எ) *காளி.*: எ-து உலகத்து அறத்தின்நெறி இத்தன்மைத்து என்று உமக்கு யாம் எடுத்துரைக்க வேண்டுவதில்லை; சிவிகையைச் சுமந்தவனோடு மற்று அதன்மேல் ஏறியிருக்கின்றவனுமே சான்று எ-று.

உ) *பரிமேல்.*: அறத்தின் பயன் இது என்று யாம் ஆகம அளவையான் உணர்த்தல் வேண்டா, சிவிகையைக் காவுவானோடு செலுத்துவானிடைக்காட்சியளவை தன்னானே உணரப்படும்.

பயனை ஆறு என்றார்,[1] பின்னதாகலின்,[2] 'என' என்னும் எச்சத்தாற் சொல்லாகிய ஆகம அளவையும், பொறுத்தானோடு ஊர்ந்தானிடை என்றதனால் காட்சியளவையும் பெற்றாம்.[3] உணரப்படும் என்பது சொல்எச்சம்.[4] இதனால் பொன்றாத்துணையாதல் தெளிவிக்கப்பட்டது.

*காரி.*: எனவென் எச்சம் வினைஎச்ச வாய்பாடாய் முடிவது. இனி என என்னும் எண்ணிடைச்சொல் பெயரெச்ச வாய்பாடாய் முடியும்; அஃது 'அழுக்காறு என ஒரு பாவி'[5] 'நாள் என ஒன்றுபோல் காட்டி'[6] என்பன முதலாயின. உணரப்படும் என்பது சொல் எச்சம். அது 'பிறவிப் பெருங்கடலுள்'[7] மறுதலைப் பொருளின்கண் நின்றதுபோல ஈண்டு நில்லாமை காண்க.

*இராமா.*: ஆற்றின்பயனை ஆறு என்றது ஆகுபெயர்.

ஊ) *கவிராசர்.*: தருமத்தின் பலன் இப்படி என்று சாஸ்திரத்தினாலே சொல்ல வேண்டா; தண்டிகையைச் சுமக்கிறவன் தருமத்தைப் பண்ணாதவன்; தண்டிகையில் ஏறிக் கொண்டு போகிறவன் தருமத்தைப் பண்ணினவன் (எ-று).

---

1 அறநெறியால் எய்தும் பயனை அறத்தாறு என்றே கூறியது கருவியாகு பெயராம்.

2 பயன்-பின்னே விளைவது. அறம் முன்னர்க் கைக்கொள்ளப்பட்டது அதனை விளக்கவே 'பயன் பின்னதாகலின்' எனக் குறிப்புத் தந்தார்.

3 'என' என்னும் செய என்னும் வாய்பாட்டு வினைஎச்சத்திற்கு 'என்று சொல்ல' என்பது பொருளாகலான். 'எவை சொல்ல' ஆகமங்கள் சொல்ல எனப் பொருள்படுதலின் நூலளவையும் (ஆகமப்பிரமாணமும்) 'சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை' என்பதால் காட்சியளவையும் (பிரத்தியட்சபிரமாணமும்), 'ஊர்ந்தானிடை' எனக் கொண்டு முடிக்கும் சொல் தந்து முடிக்காமையால் 'உணரப்படும்' என்னும் சொல் எச்சமும் பெறுகின்றோம்.

அளவையாவது உண்மை அனுபவ அறிவிற்குக் கருவியாய் உள்ளது. இதனை வடநூலார் பிரமாணம் என்பர்.

4 குறள் 168 5 குறள் 334 6 குறள் 334 7 குறள் 10

ஏ) *பழைய 1:* தருமம் செய்தபேரையும் பாவம் செய்தபேரையும் விசாரிக்கில், தண்டிகைப் பிறங்குவோனுமாய்[1] பாரகனுமாய்[2]க் கண்டு கொள்க.

ஏ) *பழைய 2:* அறஞ்செய்யின் (அது) தன்னை வந்தடையுமோ அடையாதோ என்று ஐயப்பட வேண்டா; சிவிகையைக் காவுவானையும் ஏறிச் செலுத்துவானையும் அறிந்து கொள்க.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*'அறத்தாறு'*

*மணக்குடவரும் காளிங்கரும்* 'அறநெறி' என்று பொருள் கூறினர். *பரிமேலழகர்* 'அறத்தின்பயன்' எனப்பொருள் கூறிப் பயனை ஆறென்றார். பின்னதாகலின் என விளக்கமும் தருவர்.

அறப்பயனை 'சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடையே காட்சியளவையால் அறியலாம்' எனப் *பரிமேலழகர்* கூறினர். *மணக்குடவர் முதலிய பழைய உரையாசிரியர்கள்* அனைவரும் இக்கருத்தினரே.

*அறத்து ஆறு இது எனல் வேண்டா*

'அறம் எவ்வாறு இயங்குகின்றது என்று நீ ஆழ்ந்து ஆராய வேண்டாம்'—*வீரமா.*

'நற்செயலின்பயன் இது என்று நூல்களால் உணர்த்த வேண்டியது இல்லை' —*கா.சு.*

'அறநெறி இத்தன்மையது என்று ஆய்ந்து சொல்ல வேண்டியது இல்லை' —*திரு.வி.க.*

'அறத்தின்வழி இதுஎன்று ஆகம அளவையானும் கருதல் அளவையானும் அறிதல் வேண்டா' —*சொ.த.*

'அறம் செய்வதன் பயன் இது என்று எமக்கு யாரும் சொல்ல வேண்டியதில்லை' —*இராம.*

'அறத்தின்பயன் இதுதான் என்று கூறவேண்டா'-*மு வ.*

'இது அறநெறி என வேண்டா' —*குழந்தை*

*பரிமேலழகரை ஒட்டியது தேவநேயர் உரை.*

'இதுதான் அறத்தின் பயன் என்று கூறுதல் விரும்பத் தக்கதன்று' —*சி.இ.*

1 பிறங்குவோன்-விளங்குவோன்

2 பாரகன்-தாங்குபவன்

'அறத்தாறு-இல்லற-துறவற ஆறுகள். இல்லறத்தான் சுமப்பவன். துறவி ஊர்பவன் அதாவது இல்லறத்தான் துறவிக்குப் பற்றுக்கோடு என்பது' —*மு.கோ.*

உண்மையான அறநெறி சார்ந்த வாழ்க்கைமுறை இப் படிப்பட்டது;உணர விளக்கம் தேவையில்லை என்பர்—*கா.அ.*
*சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தானிடை*

'சிவிகையைத் தாங்குவானுக்கும், அதில் ஏறிச் செல் வோனுக்கும் உள்ள வேற்றுமையே கண்கூடாகக் காட்டும்' —*கா.சு.*

'அறநெறி சுமப்பவனிடமும்-ஏறிச்செல்பவனிடமும் தான் கூடும்' —*திரு.வி.க.*

'பல்லக்குச் சுமப்பவனோடு ஏறிச் செலுத்துவானிடை கண்கூடு' —*சொ.த.*

'சுமப்பவனையும் ஏறியிருப்பவனையும்சிந்தித்தால் அறப் பயன் இது என்று யாரும் சொல்ல வேண்டாம்' —*இராம.*

'சுமப்பவன்-ஊர்பவனிடையே வைத்து அறப்பயன் இது எனல் வேண்டா.' —*மு.வ.* 'சுமப்பவனிடமும்-ஏறிச் செலுத்து வானிடமும் இதுதான் அறநெறி எனல் வேண்டா'-*குழந்தை.* *பரிமேலழகர்* முதலான பழையோர் கருத்தை ஒட்டிஉரை கூறிப் பலபிறவி, பழவினைகளைப் பற்றி வள்ளுவர்க்கிருந்த நம்பிக்கையை எடுத்துக்காட்டி 20 ஆம் நூற்றாண்டு உரை களை மறுக்கவும் செய்வர்.

தூக்குவான்-ஊர்வான் இருவரை வைத்து இதுதான் அறத்தின் பயன் எனல் விரும்பத்தக்கதன்று. —*சி. இ.*

'சுமப்பவன்-ஊர்பவனிடையேயுள்ள ஏற்றத்தாழ்வு அறம் எனப்படா' —*மு. கோ.*

கவிஞர் *பாரதிதாசன்* 'அறத்தாறு இது-சிவிகை பொறுத் தானோடு ஊர்ந்தானிடை எனல் வேண்டா' என இயைத்துப் பொருள் கொள்வர்.

*கா.அப்பாத்துரையார்*, மறுபிறப்புக்கொள்கை பழவினை இவைகளை ஒப்பாதவர். ஆதலால் அவற்றையடியாகக் கொண்டு இக்குறட்கு உரை செய்த பண்டையோர் உரை ஒவ் வாதது என்பர். அன்றியும், *சிவப்பிரகாசர்* கற்பனையாகக் கவிதை நயந்தோன்றக் கூறிய நான்மணிப்பாட்டை எடுத்துக் காட்டி இக்கருத்தை வலியுறுத்துவர்.

சமுதாயத்தில் வெறும் போர்தான் மூளும். ஆதலால் 'அறத்தாறு' என்பதற்கு அறத்தின்பயன் எனப்பொருள் காணாமல், அறநெறி எனக்கண்டு, அறநெறி இவைகளுக்கும் பொது என்று கொள்ளுதலே மிகப்பொருந்தும். சுமப்பவனும் மனிதன்; ஊர்பவனும் மனிதன்; இருவகையினரும் தொழின்முறையில் ஈடுபட்டோரேயாவர். அறநெறியோ தொழிலிடைப்பொதுவானது. இருவருக்கும் அறநெறியில் வழாத நடைவேண்டும் என்பதையே இக்குறள் வலியுறுத்துகிறது என்பர். இவர்கள் கருத்து, இவன் தொழில் இது; அவன் தொழில் அது. இருவருக்கும் அந்நெறியில் வழாத நடைவேண்டும் என்பது.

காலச்சூழலும் சமுதாய—அரசியற் போக்குகளும் இக்குறட்கு மிகச்சிக்கலான பொருணோக்கத்தைப் பொருந்தச் செய்கின்றன. *திரு.வி.க.* சொல்வது போல "வள்ளுவர் கண்ட காட்சி கவிதையில் இடம் பெற்றுள்ளது. அந்த உரையைப் பற்றி நாம் அலசிப்பார்க்க வேண்டியதில்லை'' என்று விட்டுவிட்டால், தூக்குகிறவன் நல்ல அறநெறி ஒழுகினால் ஊர்பவனாகலாம். ஊர்பவன் அறநெறி ஒழுகானாயின் தூக்குபவனும் ஆகிவிடலாம் என்ற கருத்துக் கிடைக்கும்.

பொருளாதார அடிப்படையில் விளைந்த செல்வம் வறுமைக்கு ஊழோ அறநெறியோ காரணமாகாது எனின் "இலர் பலராகிய காரணம் நோற்பார் சிலர் பலர் நோலாதவர்'' என்ற குறட்கருத்துக் குறுக்கிடலாம்.

அதிகாரம் அறன்வலியுறுத்தல், அறநெறி ஒழுகினால் ஊரலாம். ஒழுகாவிடின் சுமக்கலாம். இது பண்பாடன்று என மறுப்பதாயின் இவ்வதிகாரத்திற்கு இயைத்துக்காட்ட வேண்டிய பொறுப்பு உரையாசிரியர் கடமையாகிறது. அதற்காகவே திரு.வி.க. அவர்கள் இருவர் மனமும் நோகாத வண்ணம், ஏற்றத்தாழ்வு எண்ணம் உண்டாகாத வண்ணம், 'சுமப்பவனே நீயும் முயற்சிசெய்; ஊர்பவனாகலாம்; ஊர்பவனே நீயும் முயற்சிசெய். தந்நிலையில் தாழாதிருக்கலாம் என்றமைதி கூறினர். *சிவப்பிரகாச சுவாமிகளும்,*

அறத்தாறிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தானிடை-மறுத்தார்சம்
பந்தன்சிவிகை பரித்தார் திரிகுவர்மற்(று)
உந்தும் சிவிகையினை யூர்ந்து'— *நால்வர் நான்மணிமாலை*

என்ற பாடலால் குறட் கருத்தை மாற்றினார்கள். *சம்பந்தர்* சிவிகையைத்தூக்கியவர்கள் என்றால் *சம்பந்தர்* தெய்வத் தன்மை வாய்ந்தவர். 'தமக்கு இயல்பாக உள்ள அறப்பயனை அவர் சிவிகையைத்தூக்கி, மேலும் வளர்த்துக் கொண்டார் கள். தூக்குபவன் அறநெறியில் ஒழுகாதவன்' என்ற கருத்தை மாற்றிவிட்டார்கள் என்பதே கருத்தாக-ஏறுபவனுக்கு உயர் வில்லை என்பதை விளக்கிற்றன்று.

*வீரமாமுனிவர்* அறத்தாறு இருவர்பாலும் உண்டு. ஆனால் ஏறுகிறவன் ஊர்பவன் இருவருமே அறநெறி ஒழுகு பவர்களே. ஆனால் தூக்குபவன் கல்லறை வரைக்குங் கூட போகான். அறத்தாறு கூடவே செல்கிறது. ஆதலால் அறத்தாற்றினைத் தூக்குபவனையும் சுமப்பவனையும் வைத் துத் துணிந்துவிட வேண்டாம். அது தனித்தது என்பது ஆழ்ந்து சிந்திக்கத்தக்க உரையாயுள்ளது.

இவற்றை ஒருங்கிணைத்து எண்ணின் வள்ளுவர் காலச் சூழ்நிலைக்கு ஏற்பப் பண்டையோர் உரையும் இக்காலச் சூழ் நிலைக்குப் புதிய உரைகளும் பொருந்துவன ஆகலாம். தமிழ் மரபு கண்ட *பாவாணரும்*, வள்ளுவர் காலநிலைக்குப் பண்டை யோர் கருத்தே ஏற்புடையது என்கிறார்.

## ஒ) *ஒப்புமைப்பகுதி:*

முற்பெரிய நல்வினை முட்டின்றிச் செய்யாதார்
பிற்பெரிய செல்வம் பெறுபவோ வைப்போடு
இகலிப் பொருள்செய்ய எண்ணியக்கால் என்னாம்
முதலிலார்க்கு ஊதியம் இல் —*பழமொழி*.312

ஈட்டுவார் தவமலான்மற்று ஈண்டினால் இயைவ தின்மை
காட்டுவார் விதியாய் அஃதுகாண் சிற்பார் காண்மின் அம்மா
பூட்டுவார் முலைபொறாத பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவார் அமரர் மாதர் ஆடுவார் அரக்கர் மாதர்
—*கம்ப*.5044

## ஓ) *மேற்கோள் பகுதி:*

'*அறத்தாறுஇது...... இடை*'

*காரி:* காட்சி அளவையும் ஆகம அளவையும் வந்தமைக்கு (குறள் 242, *நுண்பொருள்மாலை*)

*வைத்திய:* குறிப்பால் பொருள் உணர்த்தும் மொழியுள் முதற்குறிப்புச்சொல் ஒரு செய்யுளில் உணர்த்தியமைக்கு (*இல.விள*. 170)

*இராமா.*: சங்கரநமச்சிவாயர்: மேற்படி (நன். 269)
*'சிவிகைப் ...... இடை'*
*சுப்பிரமணிய*: சாதி ஒருமை உயர்திணைக்கண் வந்தமைக்கு (பிரயோக 50)
*சுவாமிநாததேசிகர்*: மேற்படி (இல. கொ. 130)
*சங்கரநமச்*: குறிப்பெச்சத்திற்கு (நன். 360)

(கஎ)

*4.8. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்*
*வாழ்நாள் வழியடைக்குங் கல்.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.*: ஒருவன் ஒருநாள் இடைவிடாமல் நன்மையைச் செய்வானாயின் அச்செயல் அவனது பிறப்பும் இறப்புமாகிய நாள் வருகின்ற வழியை அடைப்பதொரு கல்லாம் என்றவாறு.

இது வீடுதரும் என்றது.

*ஆ) பரிதி.*: எ-து அவமே[1] நாட்போகாமல் தன்மமே செய்க. அது இனிமேற் செனனம் இல்லாமல் செனனவழியை[2] அடைக்குங்கல் என்றவாறு.

*இ) பரிப்.*: ... ...

*ஈ) காளி.*: எ-து ஒருவன் நாள் இடைப்படாமே[3] நல்வினையாகிய அறத்தினைச் செய்யின் பிறகு அங்ஙனம் செய்கின்ற வினையீர்ந்த[4] பெரியோனுடைய வாழ்நாளது வழியினை அடைக்குங்கல் என்றவாறு.

அதன்கருத்து என்றும் தான்செய்துவருகின்ற இல்லறமானது ஒருநாளாயினும் விழுநாள் படாமே செய்துவருமாயின் அம்மிகுதியான் பெரியோனுடைய வாழ்நாளினது போவது வருவதாகிய வழியினை அடைக்கும் கல்லாம் என்றவாறு.

---

1 அவமே-வீணாக அல்லது பயன் இல்லாமல்

2 செனனவழி-பிறப்பிற்கு வாயிலாக உள்ள வினைகள் இவனை வந்து சேரும் வழியை.

3 இடைப்படாமே-இடையீடுபடாமல்.

4 வினைஈர்ந்த-வினைமிகுந்த, ஈர்ந்த-மிகுந்த என்றபொருள் வேறு யாண்டும் இல்லாதது. இவராலே ஆளப்பெறுகின்றது. ஆனாலும் ஈர்-ஈரம், ஈர்ந்த என்பன மிக்க என்னும் பொருளைத்தரும். ஈர் என்னும் உரிச்சொல் அடியாகப் பிறந்த பெயரெச்சமாய் மிகுந்த என்னும் பொருளைக் குறித்தலும் ஆம் இதுதான் இவர்கருத்து என்பதை 'அம் மிகுதியான்' என எழுதும் விளக்கத்தானும் ஓர்க.

உ) *பரிமேல்.*: செய்யாது கழியும் நாள்உளவாகாமல் ஒருவன் அறத்தைச் செய்யுமாயின், அச்செயல் அவன் யாக்கையோடு கூடுநாள் வரும்வழியை வாராமல் அடைக்கும் கல்லாம்.

ஐவகைக் குற்றத்தான் வரும் இருவகை வினையும்[1] உள்ள துணையும் உயிர் யாக்கையோடும் கூடிநின்று அவ் வினைகளது இருவகைப்பயனையும்[2] நுகரும் ஆகலான், அந்நாள் முழுவதும் வாழ்நாள் எனப்பட்டது. குற்றங்கள் ஐந்தாவன; அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு என்பன.[3] இவற்றை வடநூலார் பஞ்சக்கிலேசம்[4] என்பர்.[5] வினை இரண்டாவன நல்வினை தீவினை என்பன. பயன் இரண்டாவன இன்பம் துன்பம் என்பன. இதனால் அறம் வீடு பயக்கும் என்பது கூறப்பட்டது.

*காரி.*: ஐவகைக் குற்றத்திற்கு விவரம்: அவிச்சை, அகங்காரம், அவா, விழைவு, வெறுப்பு. இவற்றை வடநூலார் கிலேசம் என்ப. இவற்றின் விரிவு 'காமம் வெகுளி' என்பதன் உரையில் காண்க.

ஊ) *கவிராசர்.*: ஒருவன் தன்வாழ்நாள் விருதாவில்[6] கழிக்காமல் நாள்தோறும் தருமத்தைச் செய்வானாகில், அந்தத் தருமம் அவன் ஆயுசு மோக்ஷத்திற்கு ஏறுகிறதற்குத் தடையாகின்ற எமன் வருகிற வழியை அடைக்கும் கல்லாம் (எ-று).

எ) *பழைய 1*: ... ...

ஏ) *பழைய 2*: அறம் செய்யாது ஓயும் நாள் இல்லாமல் நாடோறும் நல்லறம் ஒருவன் செய்யுமாயின், அச்செயல் அவன் சுவர்க்கத்தில் இருந்து வாழும் நாள்கள் [illegible]மல் வழியை அடைக்கும் கற்கதவாம்.

---

1 இருவகைவினை-நல்வினை, தீவினை.

2 இருவகைப்பயன் வினைகளின் பயன் [illegible]

3 அவிச்சை-தொன்றுதொட்டே உயிரோடு ஒன்றி வருகின்ற ஆணவ மலத்தின் காரியமாகிய அறியாமை.
அகங்காரம்-அறியாமை பற்றி விளையும் யான் என்னும் செருக்கு.
அவா-அகங்காரம் பற்றி எனக்கு இது வேண்டும் [illegible]
விழைவு-அவாவால் அப்பொருட்கண் செல்லும் பற்று.
வெறுப்பு-அவ் ஆசையால் அதன் [illegible] த்தை அடிப்படையாகக் கொண்ட குணம்.

4 பஞ்சக்கிலேசம்-ஐவகைத்துக்கங்கள். 5 குறள் 360.

6 விருதாவில் - பயனின்றி. இது ஆரியச்சிதைவாய் இன்று உலகியலில் வழங்கும் சொல். இப்பகுதி [illegible]

ஐ) தொகுப்பாசிரியர் குறிப்பு:

*'வீழ் நாள் படாமை'*

'ஒரு நாள்இடைவிடாமல்'—*மணக்.*

'அவமே நாள் போகாமல்'—*பரிதி.*

'ஒருநாள் இடைப்படாமே'—*காளி.*

இவையனைத்தும் தொடர் வகையான் வேறுபடினும் கருத்து ஒத்தனவே.

*'வீழ் நாள் படாமை'*

'ஒருநாளும் வெறுமையால் ஒழியாமல்' —*சுகா.*

'ஒருநாளும் புண்ணியச் செயல்புரியாத நாளாகப் போகும் படி நீ விடாது இருந்தால்' —*வீரமா.*

'வீணே கழியும் நாள் ஏற்படாமல்' —*கா. சு.*

'சாம் நாள் உண்டாகாமல்' —*திரு.வி.க.*

'செய்யாது கழியும் நாள் உளவாகாமல்'—*சொ.த., வ.உ.சி.*

'சாகும்நாள் வராமல்' —*இராம.*

'எப்போதும்நன்மையே செய்துவருவானாயின்'-*குழந்தை*

'அறஞ்செய்யத்தவறிய நாள் ஏற்படாமல்' —*மு. வ.*

'வீழ்நாள்-விரும்புநாள் என்று உரைத்து, நல்லநாளை எதிர்பார்த்துக் காலங்கழிக்காமல்' —*மு. கோ.*

'வீணாக்கும் நாள்'-உளவாகாமல்நன்மைகளையே செய்தால் —*சி. இ.*

'செய்யாது வீணாக்கழியுநாள்' —*தேவநேயர்.*

*'வாழ்நாள் வழியடைக்குங்கல்'*

'பிறப்பும் இறப்புமாகிய நாள் வருகின்ற வழியை அடைக்கும் கல்லாம்' என்பர் *மணக்.* 'இனிச் செனனம் இல்லாமல் செனனவழியை அடைக்குங் கல்' என்பர் *பரிதி.* 'வாழ்நாளது வழியையடைக்கும்கல் என்ற உரை எழுதி அறத்தின் மிகுதியான் பெரியோனுடைய வாழ்நாளின் போவது வருவதாகிய வழியினையடைக்குங் கல்லாம்' என விளக்கமும் தருவர் *காளி.* 'யாக்கையோடு கூடுநாள் வரும் வழியை வராமல் அடைக்கும் கல்லாம். இதனால் வீடுபயக்கும் என்பது கூறப்பட்டது' எனக் குறிப்பும் தருவர் *பரிமேல்.*

'ஒருவன் வாழும் நாளில் துன்பம் வரும்வழியை அடைக்குங்கல்லாம்' —*சுகா.*

'சாவுக்குப்பின்வரும் துயர வாழ்க்கைக்குச் செல்லும் வழியைத் தடுக்கும் கல்லைப்போல இருக்கும்'—*வீரமா.*

'மீண்டும் உடலெடுத்து வாழுநாள் வரும்வழியை வராமல் அடைக்கும் கல்லாம்' —*கா. சு.*

'அவனுடைய வாழ்நாளின் வழிக்கு அமைக்கப்படும் கல்லாகும்' *திரு. வி. க.* 'வழியமைக்குங்கல்' எனப்பாடம் கருதினர் போலும். 'வழியைத்தாங்கும் கல்' வழிக்கு ஆதாரமாக அமைக்கப்படும் கல்' எனவும் விரிப்பர்.

'அவன் பிறந்து உடலோடு கூடி வாழும்நாள் வரும் வழியை வராமல் அடைக்கும் கல்லாம்'-*சொ. த.*

'மீளவும் பிறந்து வாழவேண்டிய நாள்களை வராமல் தடுக்கவல்லதாம்'-*இராம.*

'அவன் வாழ்நாளில் தீமைவரும் வழியை அடைக்கும் கல்லாகும்'-*மு. வ.*

'வழியைச் செம்மையாக அமைக்கும் கல்லாம்'—*மு. கோ.*

'வாழ்நாளாகிய இடைவழியை அடைத்து நிரப்பும் பாலக்கல்லாகும்'-*கா. அ.*

'பிறந்ததன் பயனை அடைந்தவனாவான்'—*சி. இ.*

'நன்று' என்பதற்கு 'நன்மை', 'புண்ணியம்', 'அறம்' என கொள்ளினும் கருத்து ஒன்றே. 'சாகும் நாள் வராமலிருக்கும்போதே நல்ல முறையில் தருமஞ் செய்தால்' என்ற உரை 'அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க' என்பதால் முன்னரே பெற்றமையில் ஈண்டும் கூற வேண்டுவதின்று.

'வழியடைக்குங் கல்' என்பதற்கு 'வழியில் பரப்பப்படும் கல்' என்ற *திரு. வி. க., மு. கோவிந்தசாமி*, இவர்கள் கருத்து புதுமை காணும் நோக்கோடு எழுதப்பெற்றதாகும். காடுகளில் வாழ்வார் முள்ளை வெட்டிப்போட்டு வழியை அடைப்பதுபோல, மருதநிலத்து வாழ்வார் வழியை வெட்டிப்போட்டு வழியடைப்பதுபோல மலைநாட்டு வாழ்வார் பெரியகல்லை யிட்டு வழியடைப்பது வழக்கம். அதனைக் கண்டு கூறிய வள்ளுவர் அவர்காலச் சூழ்நிலையின் வண்ணம் கூறினார் என்பதே சிறப்புடையதாகும்.

வழியடைக்குங்கல்—'பிறப்பு வரும் வழியை யடைக்குங் கல்லாம்' என்பாரை மறுத்துக்கூறிய *கா. அப்பாத்துரையார்*, '*வள்ளுவர்* மறுபிறப்பும் பழவினையும் ஒப்பாதவர்' என்ற முடிவுடையவர். *வள்ளுவர்* அன்னரல்லர் ஆதலை அவர் நூலிற் பலவிடங்களிலும் காணலாம். இது முன்னரும் விளக்கப் பெற்றது.

அன்றியும் பாயிரமாகிய அறன்வலியுறுத்தல் இல்லறம் துறவறம் இரண்டற்கும் பொதுவாதலானும் துறந்தார்க் கன்றி வீடுபேறின்று என்னும் மரபினர் வள்ளுவராதலானும் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகுதலை இருவகையறத்தில் நின்றாருக்கும் வள்ளுவர் ஓதுதலானும் 'வீடுபேறு கூறியது' என்ற *மணக்குடவர்*, *பரிமேலழகர்* கருத்து இழுக்குடைய தாகாது.

## ஓ) *ஒப்புமைப்பகுதி:*

*வாழ்நாள்வழி அடைக்கும் கல்*

காட்சிநன் நிலையின் ஞானக் கதிர்மணிக் கதவு சேர்த்திப்
பூட்சிகால் ஒழுக்கம் என்னும் வயிரத்தாழ் கொளுவிப் பொல்லா
மாட்சியில் கதிகள் எல்லாம் அடைத்த பின் வரம்பில் இன்பத்து
ஆட்சியில் உலகம் ஏறத் திறந்தனன் அலர்ந்த தாரான்
—*சீவக*. 381

வாணாள் அடைக்கும் வழியது வாமே —*திருமந்*. 588

*வீழ்நாள்படாமை நன்று ஆற்றுதல்:*

வைகல் அறநெறி ஆற்றுமின் —*வளை*. 32

ஊறுள் தீவினைவாய் உற்றுடன் செறியப்பண்ணும்—*உதயண*. 4

வீழ்நாள்படாமை துன்னம்பெய்யே ஆக
வாழ்நாள் படுவது அறி —*அறநெறிச்*. 115

நாளினும் அறமறந் தவனும் நண்ணுறும்
.......... நரகிடை வீழ்க யான் —*கம்ப*. 2292

தருமம் என்று ஒருபொருள் தந்து நாட்டுதல்
அருமை என்பது பெரிதறிதி ஐயநீ
இருமையும் தருவதற்கு இயைவது ஈண்டுஇது
தெருண் மனத் தாந்செயும் செயலிதாகுமால். —*கம்ப*. 2337.

## ஓ) *மேற்கோள்பகுதி:*

*வீழ்நாள்படாமை ... கல்*

*பெருந்தேவனார்*: உய்த்துணர் வைத்தலுக்கு மேற்கோள் (*வீரசோ*. 180 உரை)

*அரும்பதஉரையாசிரியர்*: 'உள்நாள் வரையாது ஒல்லுவது ஒழியாது' உள்ளநாள் 'வீழநாள்படாமை' இயலுமதனைக் கைவிடாது (*சிலம்பு*. வரந்தரு. 200)

(௩-௮)

*4.9 அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.*

*உரைப்பகுதி:*

*அ) மணக்.:* அறத்தால் வருவது யாதொன்று, அதுவே இன்பமும் புகழுமாம்; அதனாலன்றி வருவன எல்லாம் துன்பமாம்; புகழும் இலவாம் என்றவாறு.

இஃது எல்லாப் போக நுகர்ச்சியும் இதனானே வரும் என்றது.

*ஆ) பரிதி.:* எ-து தன்மத்தினாலே வந்த இன்பமே இன்பம். அஃது அன்றியிலே தன்னிடத்தில் உண்டான எல்லாம் பொறையும் கீர்த்தியும் இல்லை என்றவாறு.

*இ) பரிப்.:* ......

*ஈ) காளி.:* எ-து இம்மைக்காயினும் மறுமைக்காயினும் இல்லறத்தினால் விளைவதே சிறந்த இன்பமாவது. ஒழிந்தன எல்லாம் அவ் இன்பத்தின் புறத்தன; புகழும் இல்லாதன என்றவாறு.

*உ) பரிமேல்.:* இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது; அதனோடு பொருந்தாது வருவன எல்லாம் இன்பமாயினும் துன்பத்தின் இடத்த, அதுவேயுமன்றிப் புகழும் உடைய அல்ல.

ஆனுருபு ஈண்டு உடனிகழ்ச்சிக்கண் வந்தது.[1] "தூங்கு கையான் ஓங்கு நடைய[2]" என்புழிப்போல. இன்பம் காம நுகர்ச்சி; அஃதாமாறு காமத்துப்பாலின் முதற்கட் சொல்லுதும்.[3] இன்பத்திற் புறம் எனவே துன்பமாயிற்று. பாவத்தான் வரும் பிறனில் விழைவு முதலாயின அக்கணத்துள் இன்பமாய்த் தோன்றுமாயினும் பின் துன்பமாய் விளைதலின்

---

1 உடனிகழ்ச்சிப் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளின் தொழிலைத் தன்னிடத்தும் உடன்நிகழ்வதாக உடையபொருள். ஈண்டு 'அறத்தான் வருவதே இன்பம்' (இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாவது) என்பதில் இன்பம் வினைகொண்டு முடியும் பொருள். வருவது என்பது அப்பொருளின் தொழில், அவ்வருவது என்னும் தொழிலைத தன்னிடத்தும் உடன்நிகழ்வதாக உடைய பொருள் அறம் ஆதலால் அறம் உடனிகழ்ச்சிப் பொருளது ஆயிற்று என்க.

2 புறநா.22. இதன்பொருள் அசைந்த (பெரும்) கையுடனே(தலை எடுத்து நடக்கும்) உயர்ந்த நடையைஉடையன் என்பது.

3 காமத்துப்பாலின் முதலில் "ஈண்டு இன்பம்என்றது ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலன் நுகர்தல் சிறப்புடைத்தாய காமஇன்பத்தினை" என்று கூறப்பட்டு இருக்கின்றன.

புறத்த என்றார். அறத்தோடு வாராதன புகழும் இல வெனவே, வருவது புகழும் உடைத்து என்பது பெற்றாம். இதனான் அறம்செய்வாரே இம்மை இன்பமும் புகழும் எய்து வர் என்பது கூறப்பட்டது.

*காரி.*: மற்று, அதனொடு பொருந்தாது வருவன என்று, அறத்தான் வரும் இன்பத்திற்கு மறுதலைப் பொருள் உரைத்தார். 'ஆனுருபு' 'நெய்யான் எரி நுதுப் பேம்'[1] என்பதுபோலக் கருவிக்கண் வாராது அறத்தோடு பொருந்த வருவதே இன்பமென ஒடுவென்னும் வாய் பாட்டான் உடனிகழ்ச்சிக்கண் வந்தது- இன்பம்-இம்மை இன்பம். 'பெண்தகையாற் பேரமர்க்கட்டு'[2] 'தூங்குகை யான் ஓங்கு நடைய' என்பனவும் அவ்வாறாம். 'சிறப் பொடு பூசனை செல்லாது'[3] என்பதனுள்ளும் செல்லாது என்னும் ஒருமைவினைக்கேற்பச் சிறப்பொடு கூடிய பூசனை என, கூடிய என்னும் ஒரு சொல்லைப் பெய்து, சிறப்பை அடையாக்கிப் பூசனையை எழுவாய் ஆக்கி னார். ஆசிரியனொடு மாணாக்கன் வந்தான், நாயொடு நம்பி வந்தான் என்பனவற்றிற்கும் இவ்வாறே பொருள் கொள்க. சிறப்பொடுவந்த பூசனை, ஆசிரியனொடுவந்த மாணாக்கன் என வந்தால் உடனிகழ்ச்சி என்னும் ஒரு வினை யொடுச்சொல்லேயாம். 'பாலொடு தேன்கலந் தற்றே' என்பது எண்ணொடு விராய அரிசிபோலச் செயப்பாட்டு வினையைச் செய்தது போலக் கூறியது. அதனொடு மயங்கல்[5] அதனை அதனுள் காண்க. 'மனத் தொடு வாய்மை மொழியின் தவத்தொடு தானம் செய் வாரின் தலை,[6] என்பன தவத்தின் மேலும், தானத்தின் மேலும், மனத்தின்மேலும், வாய்மையின் மேலும் வினை நில்லாது, செய்வான் வினையாய் நின்றது. 'சூலொடு கழுதை பாரம் சுமந்தது'ம் அது. இனிப் 'பகுதியான் பாற்பட்டு' என்பது 'ஊரானோர் தேவகுலம் என்பது போலத் தொறுப் பொருட்டாயும் 'இன்சொலால் ஈரம் அளைஇ'[8] என்பது போல அசைப் பொருட்டாயும் வரும். இனி 'வேலொடு நின்றான்'[9] என்பது கொண்டு என்னும் பொருட்டாய் வந்தது. 'ஊசியொடு குயின்ற தூசும்பட்டும்' ஒடு ஆலானது. இனி 'விழித்தகண்வேல்

---

1 குறள் 1148 2 குறள் 1083 3 குறள் 18
4 குறள் 1121 5 தொல். சொல்.75 6 குறள் 295
7 குறள் 111 8 குறள் 91 9 குறள் 552

கொண்டு எறிய'[1] என்பது வேலால் எறிய எனப் பொருள்படும். 'தொடியொடு தோணெகிழ' என்பது மலையொடு பொருத மால்யானை' என்பதுபோல வேறு வினைக்கண் வந்தது. 'தூய்மை'[2] என்பதனுள் இம் மூன்றின் வாய்மை—இம்மூன்றோடு கூடிய வாய்மை என இன் ஒடுவின் பொருட்கண் வந்தது. 'அழிவந்த செய்யினும்'[3] என்பதனுள் 'அன்பின் வழிவந்த கேண மையும்' அது. அறம் பொருள் இன்பம் என இன்பம் தனியே ஒன்றாதலால் இதற்கு அது கருவியன்று.

*இராமா.*: மற்று என்னும் இடைச்சொல் அகரவிகுதி குறைந்து நின்றது.

ஊ) *கவிராசர்.*: ஒருவனுக்குத் தருமத்துடனே கூடி வரு கிறதே இன்பம்; அது இல்லாத பாபத்துடனே வருகிறதெல் லாம் சுகமில்லை, கீர்த்தியும் இல்லை. மறுமையில் நரகத்தை அடைவிக்கும், (எ-று).

எ) *பழைய*: | தருமத்தினாலே வந்த இன்பமே இன்பம். அல்லன சாரமி[4]ல; கீர்த்தியும் இல்லாதன.

ஏ) *பழைய 2*: அறத்தினாலே வருவதே இன்பம்; அவ்வறம் அல்லாத மறத்தினாலே வரும் துன்பம்எல்லாம்; அத்துன்ப மும் புகழ்பட வாராது, வசைபடவரும்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

*மணக்குடவர்*, 'பொதுவகையால் அறத்தான் வருவதே இன்பமும் புகழும். அறத்தால் வராதன துன்பமாம் புகழும் இல்லாதனவாம்' என்றனர். *பரிதியார் மணக்குடவரைப்* போன்றே முற்பகுதிக்குக் கூறிப் பிற்பகுதிக்கு 'அஃதன்றி யிலே தன்னிடத்தில் உண்டான பொறையும் கீர்த்தியும் இல்லை' என்றுரை கூறுவர்.

*காளிங்கர்* 'இம்மைக்காயினும் மறுமைக்காயினும் இல் லறத்தான் விளைவதே சிறந்த இன்பம். ஒழிந்தன அவ்வின் பத்தின் புறத்தன புகழும்இல்லாதன' என்றனர். *பரிமேலழகர்* இவர் கருத்தை முழுதும் தழுவிப் 'புறத்த' என்பதற்கு பாவச் செயலாகிற பிறனில் விழைவை நினைவூட்டித் துன்பமாதலை விளக்கினார். இதுவும் *காளிங்கர்* தந்தவிளக்கத்திற்கு அவர் கண்ட விளக்கம். ஆனால் *காளிங்கர்* 'ஒழிந்தன' என எதைக் கருதிக்கூறினாரோ? இக்குறளுக்குக் *காளிங்கர்* விளக்க

1 குறள் 775 2 குறள் 683 3 குறள் 807 4 சாரம்-பயன்

வுரை யின்மையால் இங்ஙனம் *பரிமேலழகர்* கருதநேர்ந் திருக்கலாம்.

**'அறத்தான் வருவதே இன்பம்'**

'அறம் உடையார் என்னப்படுவதே இல்வாழ்க்கை முறைமை' *—சுகாத்.*

'நற்பண்பிலிருந்தே இனிமை வழிகிறது' *—வீரமா.*

'நன்னெறியால் வாழும் இன்பமே இன்பம்' *—கா. சு.*

'அறத்தான் வருவதே இன்பம்' *—திரு. வி. க.*

'அறத்தொடு பொருந்தி வருவதே அகத்தைப்பற்றிய இன்பம்' *—சொ த.*

'அறமான நல்ல காரியங்களைச் செய்வதால் வரும் இன் பமே இன்பம்' *—இராம.*

'நல்லொழுக்கத்தால் வருவதே இன்பம்' *—குழந்தை.*

'அறநெறியில் வாழ்வதன் பயனாக வருவனவே இன்பம்' *—மு.வ.*

பழைய உரைகளை ஒட்டியே எழுதி, 'இன்பம் என்றது சிற்றின்பத்தை. அறவழியல்லது வேறுவழியிற்பெறமுடியாதது வீட்டின்பம்;ஆதலின், உலக இன்பம் ஒருபுலஇன்பமும்,பலபுல இன்பமும், முற்றின்பமும் என மூவகைப்படும்' எனவும் விளக் கந்தருவர். இவை ஆய்வுக்குரிய நுண்கருத்தாய், திருக்குறட் சொல்லமைதிக்கும் இலக்கண மரபுக்கும் வள்ளுவர்காலத் தொன்மைக்கும் ஏற்புடையதாய் இருக்கிறது.

உரையாசிரியர்களிடையே கருத்துமாற்றத்தை விளை விப்பன 'அறத்தான் வருவதே இன்பம்' என்பது. 'மற்றெல் லாம்' என்பதும் ஆகிய இருதொடர்களே.

'அறம்' என்பதற்கு இல்லறம் அல்லது துறவறம் என வேறுபடுத்தாது, அறத்தினால் அல்லது தருமத்தி னால் எனப் பொதுமையிற் கருதவைத்தவர்கள் *மணக்குடவர், பரிதியார், பழையஉரையாசிரியர்கள் கவிராசபண்டிதர்* ஆகிய அனை வரும்.

*வீரமாமுனிவர்* 'நற்பண்பு' என்பர். *கா. சு.* 'நன்னெறி' என்பர். இராமலிங்கனார் 'நல்ல காரியம்' என்பர். 'நல் லொழுக்கம்' என்பர் குழந்தை.

*காளிங்கரும் பரிமேலழகரும்* 'இல்லறத்தான்' என ஒரு பாற்படுகின்றனர், *சொ.த.* 'அகத்தைப் பற்றிய இன்பம்' என்பர். இங்ஙனம் கூறுதற்குக் காரணம் 'அறத்தினூஉங்கு

ஆக்கமும் இல்லை' எனப்பொருளீட்டத்தை முன்னர்க் கூறி னமையால், அதனொடு ஒருங்கிணைந்த இன்பம் அக இன்பமாகிய இல்லற இன்பமாகத்தான் இருக்க வேண்டும் என்று கருதினர் போலும். இதற்கு **தேவநேயர்** கூறும் காரணம் மிக ஏற்புடையது.

'மற்றெல்லாம்' என்பதற்கு 'அறத்தான் அன்றி வருவன எல்லாம்' என *மணக்குடவரும்*, 'ஒழிந்தன எல்லாம்' எனக் *காளிங்கரும்* உரை கூறுவார்கள். *பரிமேலழகர்* 'அறத்தொடு பொருந்தாது வருவன எல்லாம்' என விளக்கமும்கூறுவர். *கவிராசபண்டிதர்* 'பிறவி வழிகளால் எல்லாம்' என்பர். 'மற்றவை' 'பிற' எனக்கூறி விளக்கமும் தருவார். *கா. சுப்பிரமணிய பிள்ளை, திரு.வி.க., தண்டபாணியார், இராமலிங்கர், குழந்தை* 'தீய ஒழுக்கத்தால்' என்பர். இவைகளை ஒருங்கெண்ணும் போது 'அறத்தான் என்பதற்கு 'எதிராகிய மறத்தான் அல்லது பாவநெறியாகிய மறத்தான்' எனக் கொள்ளுதல் சிறந்ததாகும். இக்கருத்துப்பட எழுதிய *குழந்தையுரை* ஏற்புடையதாகும்.

ஒ) *ஒப்புமைப் பகுதி*:

*முற்றும்:*

உருவமும் அழகுநல் ஒளியும் கீர்த்தியும்
செருவிடை வெல்வலத் திறலும் சிந்தைசெய்
பொருளவை வருதலும் போக மும்நல்ல
திருவுடை அறத்தது செய்கை என்றனன் —*மேருமந்*. 447

**'புகழும் இல'**

ஈனுலகத்தாயின் இசைபெறூஉ மஃதிறந்
தேனுலகத்தாயின் இனிததூஉம் —*பழமொழி* 360

ஓ) **மேற்கோள்பகுதி:**

***'அறத்தான்' வருவதே இன்பம்***

***சுப்பிரமணியதீட்சிதர்***: மூன்றாம் வேற்றுமை 'ஆன்' உருபு உடன் நிகழ்ச்சிப்பொருளில் வந்தமைக்கு **(*பிரயோக*. 16)**

***'புறத்தபுகழுமில'***

***சுப்பிரமணிய தீட்சிதர்***: எதிர்மறையாகிய அன்மை என்பதற்கு **(*பிரயோக*. 21)**

(கூசு)

**4.10. செயற்பால தோரு மறனே யொருவற்**
**குயற்பால தோரும் பழி.**

*உரைப்பகுதி:*

*மணக்.:* ஒருவனுக்குச் செய்யும் பகுதியது அறமே; தப்பும் பகுதியது பழியே என்றவாறு.

மேல் அறம் செய்யப் பிறப்பு அறும் என்றார். அதனோடு பாவமும் செய்யின் அறாது என்றற்கு இது கூறினார்.

*ஆ) பரிதி.:* எ-து மனம் வாக்குக் காயங்களாலே செய்வது எல்லாம் தருமமே செய்க. விடுவதாகில் பாவத்தை விடுவது என்றவாறு.

*இ) பரிப்.:* —

*ஈ) காளி.:* எ-து ஈண்டுக் குறிக்கொண்டு[1] செய்யத்தகுவ தாகப் பெரியோர் கருதுகின்றது அறமானது ஒன்றுமே; தமக்கு நன்மையறிவதால் ஒருவர்க்குப் பிறவித்துயரினின்றும் உய்ய லாம்; அதனுல்; மிகவும் ஆராய்ந்து காண்மின் பாவமாகிய பழியினை என்றவாறு.

*உ) பரிமேல்.:* ஒருவனுக்குச் செய்தற்பான்மையது நல் வினையே, ஒழிதற் பான்மையது தீவினையே.

ஓரும் என்பன இரண்டும் அசைநிலை. தேற்றேகாரம் பின் னும் கூட்டப்பட்டது. பழிக்கப்படுவதனைப் பழிஎன்றார்.[2] இத னாற் செய்வதும் ஒழிவதும் நியமிக்கப்பட்டன.

*ஊ) கவிராசர்.:* ஒருவனுக்குச் செய்யத்தக்க காரியமாவது தருமமே. செய்யாமல் விடத்தக்க காரியமாவது பாவத்துடன் கூடியதே என்பதாம் (எ-று).

*எ) பழைய1:* மனம் வாக்குக் காயங்களான் செய்வது எல்லாம் அறமே. செய்யாது விடுவதாகில் பாவத்தை விடுவது.

*ஏ) பழைய 2:* ஒருவனுக்குச் செய்யும் பான்மை யாதெனில் நல்வினையே; ஒருவனுக்கு ஒழியும் பான்மை யாதெனில், தீவினையேயாம்.

---

1 குறிக்கொண்டு–இலக்குவைத்து

2 பழி என்பது செயப்படு பொருள் உணர்த்தும் இகரவிகுதி புணர்ந்துகெட்ட தொழிற்பெயர்; அல்லது பழிஎன்பது பழிப்பதற்குக் ஏதுவாகிய தீவினையை உணர்த்துதலால் காரிய ஆகுபெயர் எனினும் ஆம்.

## ஐ) தொகுப்பும் குறிப்பும்:

ஒரும் என்பதனை அனைவரும் அசைநிலையாகக் கொள்ள,காளிங்கர், சுகாத்தியர், திரு.வி.க.,இராமலிங்கனார் ஆகிய இவர்கள் 'ஓர்ந்து காணும்'என உரை கண்டனர்.அசை நிலையாகக் கொள்வதினும் பொருளுரையாகக்கொள்வதே சிறந்தது.

'செயற்பாலது' என்பதற்குப் பரிமேலழகர் முதலியோர் 'செய்யத்தக்கது' 'செய்யும்பகுதியாவது' என வாளாகூறப் பரிதி, பழைய உரையாசிரியர் 'மனமொழி மெய்களான் செய் யத்தக்கது'என விளக்கந் தந்தது சிறப்பு.குறிக்கொண்டு செய் யத்தகுவதாகப் பெரியோர் கருதுவது என்ற காளிங்கர் உரை அதனினும் சிறந்தது.காளிங்கர் ஒருவர்க்கு ஓர்ந்து செயற்பா லது அறனே; ஒருவர்க்கு உயற்பாலது (ஆம்) அதனுல் ஓரும் பழி என மூன்று தொடராகக் கொண்டு உரைகாண்பார்.

***'செயற்பாலதுஓரும் அறனே'***

'நற்பண்புதான் ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டியது' —*வீரமா.*

'தன்பொருட்டுச் செய்யத்தக்கன நற்செயல்கள்'-*கா.சு.*

'செய்தற்பாலன ஆவன ஆராய்ந்து உணரும் அறமே' —*திரு.வி.க.*

'இன்பம் விரும்பும் ஒருவன் செய்யத்தக்கன நல்வி னையே'—*சொ.த.*

'செய்ய வேண்டியவை ஆய்ந்தறிந்த அறங்களே' —*இராமலிங்கனார்.*

'செய்யத்தக்கது அறமே'—*குழந்தை.*

'வாழ்நாளில் முயற்சி மேற்கொண்டு செய்யத்தக்கன அறம்' —*மு.வ.*

'நாட்டில் ஆன்றோர் ஆய்ந்துரைப்பனவற்றைச் செய் தலே அறம்' —*மு.கோ.*

'முப்பால்வாழ்வு நாடும் ஒருவன் முனைந்து முயன்று நாடிச் செய்யத்தக்கது அறம்' —*கா.அ.*

***'உயற்பாலது ஓரும் பழியே'***

'தீமைதான் ஒவ்வொருவரும் விலக்க வேண்டியது' —*வீரமா.*

'நீக்கத்தக்கன பழிச்செயல்கள்' —*கா.சு.*

'விடற்பாலன ஆராய்ந்து உணரும் பழிகளே'-*திரு.வி.க.*

'ஒழியத்தக்கன தீவினையே' —*சொ.த.*

ஒழிதற்பாலன ஆராய்ந்து அறிந்த பழிதருங்காரியங்களே.

'செய்யத்தகாதது பழியே' —குழந்தை

'செய்யாமல் காத்துக் கொள்ள வேண்டியது பழி'—மு.வ.

'செய்யத்தக்கவற்றைத் தவிர்தலே பழி' —மு. கோ.

'செய்யாதுவிடத்தக்கது தீவினையே'—தேவநேயர்.

'அறச்சார்பு அற்றது என்று தேர்ந்து காணப்பட்ட பழிச் செயலேயாகும்'—கா.அ.

உரைகளில் நேரே சொற்பொருளாக அமைந்தன சில வாகவும், கருத்துப்பொருளாக அமைந்தன பலவாகவும், முன் னும் பின்னும் பலசொற்களை வருவித்தும் பொருள் மாற்றம் இல்லாதன சிலவாகவும் இருப்பதைக் காணலாம்.

'ஒரும்' என்பதை அசைநிலையாகக்கொள்ளாது பொருள் தரும் சொல்லாகக் கொண்ட உரைகள் சிறந்தன. தேவநேயர் 'ஒரும்' ஈரிடத்தும் அசைநிலை. ஆயினும் 'ஆய்ந்து அறியும்' என்னும் பொருள் தரும் ஏவற்பன்மையாகவோ - பெயரெச்ச மாகவோ வழங்கியிருத்தல் வேண்டும் என்பர். ஓர், உம் இருஅசைநிலை கூடிய ஒருசொல் இல்லாமையும் கருதத் தக்கது.

(௪0)

## அறன்வலியுறுத்தல் அதிகாரத்தில் பண்டை உரையாசிரியர்களின் குறள் வைப்புமுறை

| | சிறப்பீனும் | அறத்தினூஉங்கு | ஒல்லும் | மனத்துக் | அழுக்கா | அன்றறிவா | அறத்தாறிது | வீழ்நாள் | அறத்தான் | செயற்பால |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மணக். | 1 | 8 | 2 | 10 | 9 | 3 | 4 | 6 | 5 | 7 |
| பரிதி. | 1 | 3 | 6 | 8 | 9 | 2 | 10 | 5 | 7 | 4 |
| காளி. | 1 | 9 | 2 | 4 | 10 | 7 | 5 | 8 | 6 | 3 |
| பரிமேல். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |

நான்காம் அதிகாரம் 'அறன்வலியுறுத்தல்' முற்றிற்று.

# நூலோதி


1 அகநானூறு, களிற்றியானை நிரை, சோமசுந்தரனார், பொ.வே. உரை, தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., 1970.

2 அகநானூறு, மணிமிடைபவளம், நித்திலக்கோவை சோமசுந்தரனார், பொ.வே., உரை, தி.தெ.சை. சி.நூ.ப.க.,லிமி., 1970.

3 அடயோக பிரதீபிகை, மொழிபெயர்ப்பு,குப்புசாமி, ராஜு, த., தஞ்சை.

4 அறநெறிச்சாரம், முனைப்பாடியார், எஸ்.பி.சி. கே.அச்சகம், வேப்பேரி, 1912.

5 ஆசாரக்கோவை, பதவுரை விளக்கவுரைகளுடன், தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., திருநெல்வேலி-6, 1968.

6 ஆதிநாதர் பிள்ளைத்தமிழ்.

7 இலக்கணக்கொத்து மூலமும் உரையும், சுவாமி நாததேசிகர், ஆறுமுகநாவலர் பதிப்பு, மூன்றாம் பதிப்பு.

8 இலக்கண விளக்கம், வைத்தியநாத தேசிகர், தஞ்சை சரசுவதி மகால், 1973.

9 இலக்கண விளக்கம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், மூலமும் உரையும், வைத்தியநாததேசிகர், திருவாரூர், தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை-1, 1973.

10 இன்னா நாற்பது, மூலமும் உரையும், தி.தெ.சை. சி.நூ.ப.க.,லிமி., சென்னை—1, 1971.

11 இனியவை நாற்பது, மூலமும் உரையும், தி.தெ. சை.சி.நூ.ப.க.,லிமி., சென்னை—1, 1971.

12 உண்மை விளக்கம், *மனவாசகங் கடந்தார்*, சிவ ஞான போத யந்திரசாலை, சிந்தாதிரிப் பேட்டை.

13 உதயணகுமார காவியம், ***சோமசுந்தரனார், பொ.வே.***, விளக்கவுரை, தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., சென்னை—1, 1970.

14 உரைவேற்றுமை, ***சாரங்கபாணி, கோ.***, செல்வி பதிப்பகம், காரைக்குடி.

15 கம்பராமாயணம், பதிப்பாசிரியர் குழு, அண்ணா மலைப் பல்கலைக் கழகப் பதிப்பு, அண்ணாமலை நகர்.

16 கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரையும் விளக் கமும், ***சோமசுந்தரனார்,பொ.வே.***,விளக்கவுரை, தி.தெ.சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை—1, 1970.

17 குண்டலகேசி, ***சோமசுந்தரனார், பொ.வே.***, விளக்கவுரை, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி. சென்னை—1, 1970.

18 குறுந்தொகை, ***சோமசுந்தரனார், பொ.வே.***, உரை, கழகவெளியீடு, முதலாம் பதிப்பு, மறு அச்சு, 1972.

19 குறள் அறப்பால், *இராமாநுசகவிராயர்* வெள்ளு ரையும் புத்துரையும், சென்னை, 1840.

20 குறள் மூலமும் *சுகாத்தியர்* இயற்றிய கருத்துரை அட்டவணையும், பொழிப்புரையும், 1889.

21 கௌடலீயம் பொருணூல், தமிழ்மொழிபெயர்ப்பு, ***கதிரேசச்செட்டியார், பண்டிதமணி, மு.,*** & ***இராமாநுஜாசாரியார், பி.ஸ்ரீ.***, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1955.

22 சட்தரிசன சங்கிரகம்.

23 சிலப்பதிகாரம், ***இளங்கோவடிகள், சோமசுந்தர னார், பொ.வே***, விளக்கவுரை, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை-1, 1972.

24 சிவபெருமான் இரட்டைமணிமாலை, 11ஆம் திருமுறை, ஸ்ரீகுமரகுருபரன்சங்கம், ஸ்ரீவைகுண்டம், 1971.

25 சீவகசிந்தாமணி மூலமும் உரையும், பகுதி—க, அரசு, புலவர், சோமசுந்தரனார், பொ. வே., உரை, தி. தெ. சை.சி. நூ. ப.க.,லிமி., திருநெல்வேலி—6, 1967.

26 சீவகசிந்தாமணி மூலமும் உரையும், பகுதி—உ, அரசு, புலவர், சோமசுந்தரனார், பொ. வே., உரை, தி. தெ.சை. சி. நூ. ப.க., லிமி., திருநெல்வேலி—6, 1968.

27 சுக்கிரநீதி, (தமிழ்), கதிரேசச்செட்டியார், பண்டிதமணி மு.,மொழிபெயர்ப்பு, சன்மார்க்கசபை, மேலைச்சிவபுரி, 1926.

28 சூதசங்கிதை, தேவராஜபிள்ளை, ரிப்பன் அச்சியந்திரசாலை, மதராஸ்.

29 சூடாமணி நிகண்டு, மண்டலபுருடன், வித்தியாநுபாலன யந்திரசாலை, தங்கசாலைத்தெரு, சென்னபட்டினம்.

30 சூளாமணி மூலமும் உரையும், பகுதி—க, சோமசுந்தரனார், பொ. வே., தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை—1, 1970.

31 சூளாமணி மூலமும் உரையும், பகுதி—உ, சோமசுந்தரனார், பொ. வே., தி.தெ.சை சி.நூ.ப.க., திருநெல்வேலி—6, 1962.

32 செந்தமிழ் தொகுதி 1, பகுதி 8, மதுரைத் தமிழ்ச் சங்கப்பதிப்பு.

33 சேந்தன் திவாகரம், சேந்தனார், மனோன்மணி விலாச அச்சுக்கூடம், சென்னை, 1904.

34 தத்துவார்த்த சூத்திரம்.

35 தண்டியலங்காரம், தண்டியாசிரியர், சுப்பிரமணிய தேசிகர் உரை, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., திருநெல்வேலி—6, 1960.

36 தமிழர் மதம், தேவநேயன், நேசமணிப்பதிப்பகம், காட்பாடி விரிவு, வ.ஆ. மாவட்டம், 1972.

37 தனிப்பாடல்திரட்டு, *சந்திரசேகர கவிராஜபண்டிதர்* (பதிப்பு), வித்தியாரத்தினாகரம் அச்சகம், சென்னை—1902.

38 திராவிடப் பிரகாசிகை, *சபாபதி நாவலர்*, தி.தெ. சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை—1, 1976.

39 திருக்கலம்பகம், *உதீசிதேவர்*, மதுரைத் தமிழ்ச் சங்க முத்திராசாலை.

40 திருக்குறள்—அறத்துப்பால், தண்டபாணி விருத்தியுரை, *தண்டபாணிப்பிள்ளை, நாகை சொ.*, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., திருநெல்வேலி, 1956.

41 திருக்குறள் அறத்துப்பால், பாலருரையுடன், *சுப்பிரமணிய சாஸ்திரி, பி. சா.*, காசிமடம், திருப்பனந்தாள், 1939.

42 திருக்குறள் உரைவளம், அறத்துப்பால், தருமபுர ஆதீனம், 1950.

43 திருக்குறள் உரைவிளக்கம், *வரதராசன், ஜி.*, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை—5, 1958.

44 திருக்குறள் எளிய பொழிப்புரை, *இலக்குவனார், சி,*. வள்ளுவர் பதிப்பகம், புதுக்கோட்டை, 1963.

45 திருக்குறள், *கவிராசபண்டிதர்*, சாது அச்சுக் கூடம், சென்னை, 1949.

46 திருக்குறள் குழந்தையுரை, *குழந்தை, புலவர்*, பாரி நிலையம், சென்னை—1. 1967.

47 திருக்குறள் தமிழ்மரபுரை, *தேவநேயன், ஞா.*, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி விரிவு, 1969.

48 திருக்குறள் தெளிபொருள் வசனம், *மு.ரா., அருணாசலக்கவிராயர்*, மீனலோசனி அச்சியந்திர சாலை, மதுரை.

49 திருக்குறள் தெளிவுரை, *டாக்டர் வரதராசனார், மு.*, தி. தெ. சை.சி. நூ. ப.க., லிமி., சென்னை.

50 திருக்குறள் நயவுரை, *கோவிந்தசாமி, மு.*, பாரி நிலையம், சென்னை—1,1962.

51 திருக்குறள் பரிமேலழகருரையுடன் குறிப்புரையும், *கோபாலகிருஷ்ணமாசார்யர், ஸ்ரீ. உ.வே.வை.மு.*, சென்னை—5, 1965.

52 திருக்குறள் புதுஉரை, *இராமலிங்கன், நாமக்கல், வெ.*, சென்னை.

53 திருக்குறள் பொழிப்புரை, *சுப்பிரமணிய பிள்ளை, கா.*, தி,தெ. சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை—1, 1955.

54 திருக்குறள் மணிவிளக்கவுரை, *கா.அ.*, அலமேலு நிலையம், சென்னை—18.

55 திருக்குறள் மூலமும் ஓர் பழைய உரையும், டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல்நிலையம், அடையாறு வெளியீடு, சென்னை—20,1961.

56 திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும்—அறத்துப்பால், *வடிவேலுசெட்டியார், கோ.*, மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1972.

57 திருக்குறள் விரிவுரை(பாயிரம்), *கல்யாணசுந்தரனார், திரு. வி.*, சாதுஅச்சுக்கூடம், சென்னை, 1956.

58 திருக்கோவையார், *மாணிக்கவாசகர்*, ஆறுமுக நாவலர்பதிப்பு, வித்தியானுபாலன யந்திரசாலை, தங்கசாலைத்தெரு, சென்னை

59 திருநூற்றந்தாதி, *அவிரோதிஆழ்வார்*, மதுரைத் தமிழ்ச்சங்க முத்திராசாலை, 1905.

60 திருமந்திரம், *திருமூலர்*. திருவாவடுதுறைஆதீனம் தண்டபாணிதேசிகர் உரையுடன்.

61 திருவந்தாதி,

62 திருவருட்பயன், *உமாபதிசிவாசாரியார்*, கோ. சண்முகசுந்தர முதலியார், சென்னை.

63 திருவள்ளுவர் திருக்குறள் அறப்பால்—விருத்தியுரை, *சிதம்பரம்பிள்ளை, வ. உ.*, தூத்துக்குடி, 1935.

64 திருவள்ளுவர் திருநாள் விழாமலர், தி.தெ.சை.சி. நூ.ப.க., லிமி., சென்னை—1, 1968.

65 திருவாசகம், *மாணிக்கவாசகர்*, *தண்டபாணி தேசிகர்* செய்த பஞ்சாக்கிர விளக்கவுரையுடன், திருவாவடுதுறை ஆதீனம்.

66 திருவிசைப்பா, 9—ஆம் திருமுறை, தி.தெ.சை. சி.நூ ப.க., லிமி, சென்னை.

67 திருவிளையாடல் புராணம், *பரஞ்சோதி முனிவர்*, தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., சென்னை.

68 திருவெம்பாவை, (சமண நூல்), திருக்குறள் மூலமும் கட்டுரைகளும், ஜைனஇளைஞர்மன்றம், சென்னை—17.

69 திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது,

70 தேவாரம், *அப்பர் சுவாமிகள்*, 4, 5, 6, ஆம் திருமுறை,—தலமுறை, ஸ்ரீகுமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம், 1971.

71 தேவாரம், *சுந்தரமூர்த்தி சுவாமிகள்*, ஏழாம் திருமுறை: தலமுறை, ஸ்ரீகுமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம், 1971.

72 தேவாரம், *திருஞானசம்பந்த சுவாமிகள்*, 1,2, 3—ஆம் திருமுறை—தலமுறை, ஸ்ரீகுமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம், 1971.

73 தொல்காப்பியச் சூத்திரவிருத்தி, *சிவஞானசுவாமிகள்*, ஆறுமுக நாவலர் பதிப்பு, மூன்றும்பதிப்பு.

74 தொல்காப்பியம், எழுத்ததிகாரம், *இளம்பூரணருரை*, தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., சென்னை—1, 1972.

75 தொல்காப்பியம்' எழுத்ததிகாரம், *நச்சினார்க்கினியருரை*, தி. தெ. சை. சி. நூ. ப. க. லிமி., திருநெல்வேலி—6, 1961.

76 தொல்காப்பியம், சொல்லதிகாரம், *இளம்பூரணருரை* தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., சென்னை—1,

77 தொல்காப்பியம், சொல்லதிகாரம், *கல்லாடனாருரை*, தி.தெ.சை.சி.நூ.ப.க. லிமி., திருநெல்வேலி—6, 1964.

78 தொல்காப்பியம், சொல்லதிகாரம், *சேனாவரையர் உரை*, தி.தெ.சை.சி.நூ.ப.க., லிமி., சென்னை-1, 1970.

79 தொல்காப்பியம், சொல்லதிகாரம், *தெய்வச்சிலையார் உரை*, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., திருநெல்வேலி—6, 1963.

80 தொல்காப்பியம், சொல்லதிகாரம், *நச்சினார்க்கினியருரை*, தி. தெ. சை, சி. நூ. ப, க., லிமி., திருநெல்வேலி—6, 1962.

81 தொல்காப்பியம், பொருளதிகாரம், **இளம்பூரணர்** உரை, தி.தெ. சை. சி.நூ. ப.க., லிமி., சென்னை —1, 1969.

82 தொல்காப்பியம், பொருளதிகாரம், (செய்யுளியல்) ***நச்சினார்க்கினியர்*** உரை, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., திருநெல்வேலி—6, 1965.

83 தொல்காப்பியம், பொருளதிகாரம், *நச்சினார்க்கினியர்* உரை, தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., சென்னை—1, 1971.

84 தொல்காப்பியம், பொருளதிகாரம், *பேராசிரியர்* உரை, தி.தெ. சை. சி. நூ. ப.க. லிமி., சென்னை —1, 1969.

85 தொன்னூல் விளக்கம்,திறனாய்வு மூலம் விளக்கம், *சுப்பிரமணியன்*, டாக்டர் ச.வே., தமிழ்ப்பதிப்பகம், சென்னை—20, 1978.

86 தோத்திரத்திரட்டு,

87 நரிவிருத்தம், *திருத்தக்கதேவர்*, 'செந்தமிழ்'வெளியீடு, மதுரைத் தமிழ்ச்சங்கம் மதுரை.

88 நற்றிணை நானூறு, *நாராயணசாமி ஐயர், பின்னத்தூர். அ.*, உரையும் விளக்கமும், தி. தெ. சை. சி. நூ. ப. க., லிமி., திருநெல்வேலி—6, 1967.

89 நன்னூல், காண்டிகையுரை, *சடகோபராமாநுஜாசாரியர், வை. மு. கிருஷ்ணமாசாரியார், சே.*, 18—ஆம்பதிப்பு, சென்னை—15, 1958.

90 நன்னூல் மூலமும் விருத்தியுரையும், புத்தம்புத்துரை, ***சிவஞான*** *சுவாமிகள்*, ச. தண்டபாணி தேசிகர் குறிப்புரைகள், பாரிநிலையம், சென்னை, 1968.

91 நால்வர் நான்மணிமாலை, *சிவப்பிரகாச சுவாமிகள்*, துறைமங்கலம், மைலம்மடம் பதிப்பு.

92 நாலடியார், *பாலசுந்தரம் பிள்ளை, தி. சு.*, உரை தி. தெ. சை. சி. நூ. ப.க., லிமி., திருநெல்வேலி —6, 1968.

